# இலக்கியத்தில் இறை பக்தி

டாக்டர் மாநிலன்
(கி. ஜெகதீஸ்வரன்)

வசந்தம் வெளியீடு
261, விஜயலட்சுமி தெரு,
திருப்பதி—517 507 (AP.)
தொலைபேசி : 20885

முதற் பதிப்பு : மே, 1999
உரிமை : ஆசிரியருக்கே

"இலக்கியத்தில் இறைபக்தி" எனும் இந்நூல்
திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின்
பொருளுதவியின் துணையோடு வெளிவருகிறது.

விலை : ரூ. 35-00

ILAKKIYATHIL IRAI BAKTHI

Tamil

By

Dr. K. Jagadeeswaran, Ph.D.,
'MAANILAN'

First Edition : May, 1999

Pages : xii+172=184

Copies : 1000

Price : Rs. 35-00

அச்சிட்டோர் : ஸ்ரீதுர்க்கை பிரிண்டிங் பிரஸ்,
21, தென் மேற்கு போக் சாலை,
தி. நகர், சென்னை-600 017.
போன் : 433 41 30

# அணிந்துரை

**பா. அ. முனுசாமி,** எம்.ஏ., எம்.ஃபில்.,
தமிழ்த்துறை,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்,
திருப்பதி.

---

ஆன்மிக இலக்கிய உலகில் உலாவர நினைக்கும் மாநிலன் (ஜெகதீஸ்வரன்) அவர்கள் ஒரு சிறந்த ஓவியர்; ஆன்மிகவாதி.

"நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின்" என்னும் சங்க இலக்கியக் கூற்றினை நினைவில் கொண்டு இக்கால மாந்தர்களுக்கு அறிவூட்டும் வகையில் தமிழ் இலக்கியங்களில் உள்ள இறை பக்தியினை தொகுத்து இருப்பது வரவேற்கத் தக்கது.

நூலாசிரியர் 'முன்னோர் கருத்தினை பொன்னே போல் 'போற்று' என்ற பழமொழிக்கு ஏற்ப ஆங்காங்கு பண்டைக்கால நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் காட்டியுள்ளார்.

ஆசிரியர் இலக்கிய வரலாற்றினைக் குறித்து கூறும் இடத்து இலக்கியத்தில் ஆழ்ந்த சிந்தனையுடையவராகத் தெரிகிறது.

கடையேழு வள்ளல்களான, பாரி, பேகன், அதியமான், காரி, ஓரி, ஆய், நள்ளி ஆகியோர்களது வள்ளல் தன்மையினை அழகாகச் சித்தரித்துக் காட்டுகின்றார்.

திருமலை திருப்பதி, தேவஸ்தானத்தில் ஓவியராகப் பணியாற்றும் டாக்டர் மாநிலன் அவர்கள், தனது ஓவியத் திறனை, தனது படைப்பின் வழியே ஆங்காங்கு காட்டியிருப்பது அவரது ஆற்றலை தெளிவுபடுத்துகின்றது.

ஆழ்கடலில் கிடைக்கின்ற முத்து கடலுக்குச் சொந்தமாவதில்லை. அதன் சிறப்பு, அதனை அணிந்து அழகு பார்க்கின்ற மக்களைச் சென்றடைவதுபோல், நூலாசிரியர் திறம், இவ்வையகத்திற்குப் பயனைத் தருகின்றது.

'பாம்பறியும் பாம்பின்கால்' என்னும் பழமொழி நானூற்று பாடல் வரி கூற்றுக்கிணங்க ஆசிரியரின் ஆற்றல், ஆன்மிகம் முதலியன ஆன்மிகவாதிகளுக்கே புலப்படும்.

உயர்வற உயர்நலம் உடையவர் எவராயினும் அவர் ஆழ்ந்த ஆன்மிகவாதி என்பதனை ஆசிரியரின் நூல் பகர்கின்றது.

நூலாசிரியர், இலக்கியங்களில் உள்ள ஆன்மிகச் சிந்தனையினை, கடும் முயற்சியுடன் தேடியெடுத்து நூலாக்கியிருப்பது வரவேற்கத்தக்கது.

'இலக்கியத்தில் இறை பக்தி' என்னும் இந்நூல் கருத்தழகு, இலக்கிய அழகு, தெய்விக அழகு முதலியன கொஞ்சிக் குலவும் நூலாக உள்ளது.

நூலாசிரியர், திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருச்செந்தூர், திருஆவினன்குடி, திருவேரகம், பழமுதிர்ச்சோலை போன்ற இடங்களைப் பற்றிக் கூறும்போது ஆண்டவனின் ஆன்மிக ஆறுகளை (வழிகளை) நாம காண முடிகிறது.

ஆற்றுப்படை நூல்களில் பண்டைக்கால மன்னர்களின் கொடை, வீரம் முதலிய பண்புகளைக் குறித்து அழகாகச் சித்தரித்துக் காட்டுகின்றார்.

பெரும்பாணாற்றுப் படையில், காஞ்சிபுரத்தில் உள்ள திருவெஃகா என்னும் இடத்தில் இறைவன் குடிகொண்டு உள்ளதை அழகாகச் சுட்டிக் காட்டுகின்றார்.

நூலாசிரியர் தலைவன், தலைவி, தோழி, தோழன் பாத்திரங்களின் கடமையுணர்வினை தமது படைப்பின் வழியே அழகாக எடுத்துக் கூறுகின்றார்.

பண்டைத் தமிழரின், ஆன்மிகம், போர்முறை, கடமை, போன்றவற்றினைக் குறிப்பிடும்போது ஆசிரியரின் ஆழ்ந்த சிந்தனையைக் காண முடிகின்றது.

'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் கூற்றுக்கிணங்க ஆசிரியர் இதுமட்டுமல்லாமல் பல அரிய ஆன்மிகப் படைப்புக்களை இவ்வையகத்திற்கு அளிக்க வேண்டி, ஆழ்வார்கள் போற்றிய அனந்தசயனனை பிரார்த்தனை செய்கின்றேன்.

இடம் : திருப்பதி
நாள் : 22-3-99

**பா. அ. முனுசாமி**

# என்னுரை

தமிழ் மொழி, இலக்கிய வளம் செறிந்த மொழி இலக்கண வரம்பு கெடாத மொழி. என்று தோன்றியதென்று அறியவியலாத பழைய மொழி. எளிய உச்சரிப்புள்ள மொழி. இனிமை மிக்க மொழி. இம் மொழியில் பாட்டாக அமைந்த இலக்கியங்களும் உண்டு. சூத்திரங்களாக அமைந்த நூல்களும் உண்டு. உரையாக அமைந்த இலக்கியங்களும் உண்டு. புலவர்கள் தம் கருத்துக்களைப் பாட்டும் உரையும் கலந்து எழுதியதும் உண்டு.

ஒரு நாட்டின் இலக்கியத்தில் இருந்தே நாகரீகத்தை' பண்பாட டினை, மொழி வளர்ச்சி இவைகளைப் புரிந்து கொள்ள இயலும். நமது நாட்டின் இலக்கியத்தில் உள்ள சிறப்பையும்— இறை பக்தியையும் எல்லா நூல்களையும் தேடிப்பிடித்து படித்துப் பார்த்து உணருதல் இயலா.

எனவேதான் 'இலக்கியத்தில் இறை பக்தி' எனும் இந்நூல் வாயிலாக முடிந்தவரை எல்லா தமிழ் இலக்கியங்களையும் ஆராய்ந்து ஆரம்பம் முதல் நிகழ் காலம் வரை பல நூல்களில் ஆன்றோர்களும்; சான்றோர்களும் புலவர் பெருமக்களும் எடுத்தியம்பியக் குறிப்புகளையும்

உற்று நோக்கி இந்நூல் வாயிலாக தெரிந்ததையும், புரிந்ததையும் மட்டும் சேர்த்துக் கோர்த்துத் தந்துள்ளேன்.

இது ஓரளவு பயன்படும் என்றும்; நமது நாடு, நமது மொழி, நமது இலக்கியம் அதன் சிறப்பு இதுவென அறிந்து கொள்ளலாம். இறை பக்தியில்லா இலக்கியம் இல்லை. வேறுபட்ட சமயங்களானாலும் மொழி வளர்ச்சியினையும், அதில் இறை பக்தியினையும் கலந்தே தந்துளர்.

'ஆதி பகவன் முதற்றே உலகு' என்னும் திருவள்ளுவரின் வாக்கே உண்மையாகும் என்பதை உணர்வோமாக.

குரங்கு ஒரு கிளையிலிருந்து நீங்க வேண்டுமாயின் மற்றொரு கிளைக்குத்தான் தாவிச் சென்று அடையும்; அக்கிளையை விட்டு நீங்கும். மற்றொரு கிளை இல்லையெனில் அக்குரங்கால் அக்கிளையினை விட்டு நீங்க முடிவதில்லை. அவ்வாறே உலகியலில் வைத்த பற்றினை— மனத்தினை அதினின்று நீக்க வேண்டுமாயின், அம்மனத்திற்கு வேறொரு புகலிடம் வேண்டும். வேறொரு புகலிடம் இல்லையெனில் அதினின்று மனத்தை நீக்கி நிறுத்தவியலாது. அப்புகலிடமாக உள்ளவனே இறைவன். இறைவனிடம் அன்பு நிறைந்து மனம் சென்று வழிபட்டால், அவனுடைய அருள் வலியால் உலகியலினின்று மனம் நீக்கப் பெற்று நிலை கொள்ளும். உலகியல் பற்றினை அறுத்தற்கு உத்தமனாகிய இறைவன் பற்றினைக் கொள்ளுதல் வேண்டும். இறை பற்றினைக் கொள்ளாது பற்றறுக்கவியலாது. எனவே, உலகப் பற்றை அறுக்க உத்தமன் பற்றைக் கொள்ளுதல் வேண்டும் என்ற உண்மையினை,

**"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு"**

*என்னும் மறைமொழியால் உணர்த்துகின்றார் முப்பால் நூலார்.*

**"அற்றது பற்று எனில் உற்றது வீடுஉயிர்ப்;**
**செற்றது மன்உறில் அற்று இறைபற்றே"**

**"பற்றிலன் ஈசனும் முற்றவும் நின்றனன்**
**பற்று இலையாய் அவன் முற்றில் அடங்கே"**

*என்று திருப்பாசுரங்களிலும் அருளியுள்ளனர்.*

*நம்மாழ்வார் பெருமான், பற்று அற்றது என்னும் அளவில் உயிர் வீடு உற்றது— உயிர் விடுதலையடைந்தது; பற்று அற்ற அப்பான்மை நிலை கொண்டதென்றால், அது பற்றற்ற இறைவனின் பற்றினால் விளைந்ததே என்று மொழிகின்றார்.*

*இப்படி இலக்கியத்தில் இன்ற பக்தியினை உள்ளே சென்று நுகர்ந்து அறிவோமாக. 'யான்பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக.'*

**—டாக்டர் மாநிலன்**

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| 1. | இலக்கியத்தில் இறை பக்தி | 1 |
| 2. | இலக்கண நூல்கள் | 6 |
| 3. | தமிழ்ச் சங்கங்கள் | 13 |
| 4. | எட்டுத் தொகை | 17 |
| 5. | பத்துப் பாட்டு | 30 |
| 6. | பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் | 54 |
| 7. | ஐம்பெருங் காப்பியம் | 70 |
| 8. | ஐஞ்சிறு காப்பியங்கள் | 83 |
| 9. | சைவ சமய இலக்கியம் | 88 |
| 10. | வைணவ இலக்கியம் | 98 |
| 11. | பிற இலக்கியங்கள் | 141 |
| 12. | தாயுமானவர் இறை பக்தி | 157 |
| 13. | பட்டினத்தார் இறை பக்தி | 160 |
| 14. | வள்ளலார் இறை பகதி | 164 |
| 15. | பாரதியார் இறை பக்தி | 168 |

# பொருளடக்க விளக்கம்


1. இலக்கியத்தில் இறைபக்தி
2. இலக்கண நூல்கள் :
   - தொல்காப்பியம்
   - நன்னூல்
   - நேமிநாதம்
3. தமிழ்ச் சங்கங்கள் :
   - தலைச் சங்கம்
   - இடைச் சங்கம்
   - கடைச் சங்கம்
4. எட்டுத் தொகை :
   - நற்றிணை
   - குறுந் தொகை
   - ஐங்குறு நூறு
   - பதிற்றுப் பத்து
   - பரிபாடல்
   - கலித்தொகை
   - அக நானூறு
   - புற நானூறு
   - கடையேழு வள்ளல்கள்
5. பத்துப் பாட்டு :
   - ஆற்றுப் படை
   - திருமுருகு ஆற்றுப்படை
   - திருப்பரங்குன்றம்
   - திருச்சீரலைவாய்
   - திருஆவின்குடி
   - திருவேரகம்
   - குன்றுதோறாடல்
   - பழமுதிர்ச்சோலை
   - பொருநர் ஆற்றுப்படை
   - சிறுபாணாற்றுப்படை
   - பெரும்பாணாற்றுப் படை
   - முல்லைப் பாட்டு
   - மதுரைக் காஞ்சி
   - நெடுநல் வாடை
   - குறிஞ்சிப் பாட்டு
   - பட்டினப் பாலை
   - மலைபடுகடாம்

6. பதினெண் கீழ்க்
கணக்கு நூல்கள் :
திருக்குறள்
நாலடியார்
பழமொழி
நான்மணிக்கடிகை
திரிகடுகம்
சிறுபஞ்சமூலம்
முதுமொழிக்காஞ்சி
ஏலாதி
ஆசாரக் கோவை
இன்னா நாற்பது
இனியவை நாற்பது
கார் நாற்பது
களவழி நாற்பது
திணை மாலை
நூற்றைம்பது
ஐந்திணை எழுபது
ஐந்திணை ஐம்பது
திணை மொழி ஐம்பது
கைந்நிலை

7. ஐம்பெருங் காப்பியம் :
சிலப்பதிகாரம்
மணிமேகலை
சீவகசிந்தாமணி
குண்டலகேசி
வளையாபதி

8. ஐஞ்சிறு
காப்பியம் :
சூளாமணி
நீலகேசி
யாசோதா காவியம்
உதயனகுமார காவியம்
நாககுமார காவியம்

9. சைவ சமய
இலக்கியம்:
திருஞானசம்பந்தர்
திருநாவுக்கரசர்
சுந்தரர்
மணிவாசகர்
திருமூலர்
சேக்கிழார்
திருப்புகழ்
கந்த புராணம்
★ திருவிளையாடற்
புராணம்

10. வைணவ இலக்கியம் :
(நாலாயிர திவ்வியப்
பிரபந்தம்)
பொய்கை ஆழ்வார்
பூதத் தாழ்வார்
பேயாழ்வார்
திருமழிசை ஆழ்வார்
நம்மாழ்வார்
மதுரகவி ஆழ்வார்
குலசேகராழ்வார்
பெரியாழ்வார்
தொண்டரடிப்பொடி
ஆழ்வார்
திருப்பாணாழ்வார்
திருமங்கை ஆழ்வார்

11. பிற இலக்கியங்கள் :
வில்லிபாரதம்
கம்பராமாயணம்
உலா
பரணி
கலம்பகம்
பிள்ளைத் தமிழ்

குறவஞ்சி
தூது
வெற்றிவேற்கை
ஆத்திச்சூடி
பட்டினத்தார்
பாரதியார்
பள்ளு
கோவை
நன்னெறி
தாயுமானவர்
வள்ளலார்



# 1. இலக்கியத்தில் இறைபக்தி

ஒரு நாட்டின் பெருமையை அந்நாட்டிலுள்ள இலக்கியங்களைக் கொண்டுதான் யாருமே முடிவு செய்வார்கள். அவைகளைக் கொண்டே அந்நாட்டவர்க்கு மதிப்பு உண்டாகும். இம்மதிப்பைத் தேடி வைத்த பெருமை தமிழகத்துக்கே உரியது. இன்றுள்ள இலக்கியங்களும் இல்லாமல் போயிருக்குமேயானால் நாம் பிற நாட்டவர்க்குக் கேள்விக் குறியாகத்தான் நின்றிருப்போம். இன்று, நாட்டில் ஏற்பட்டிருக்கும் நல்ல விழிப்புணர்ச்சியே தக்க அறிகுறியாகும் அந்த அறிகுறிக்கு ஆதாரமாகத் திகழ்வதும் வாழ்ந்த பெருமைக்கு விளக்காகத் திகழ்வதும் இலக்கியங்களே.

உலக நாடுகளெல்லாம் உறக்கத்தின் மடியிலே தவழ்ந்து கொண்டிருந்தபோது, தமிழால் தமிழினம் தலை தூக்கி நின்றிருந்தது. கண்டவர் வியக்க, கேட்டவர் மருள, சுவைத்தவரை மகிழ வைத்த பெருமை தமிழுக்கும் தமிழர்க்கும் உண்டு. இன்று உலகப் போருக்கே ஆயத்தமாகியிருக்கும் சில நாடுகள், அன்றைய நாளில் காடுகளாகவும், இருள் படர்ந்த நிலங்களாகவும் காட்சியளித்தன. இவ்வுண்மையை, உலக வரலாற்றுச் சுவடிகள் நமக்கு உணர்த்துகின்றன.

நமது நாட்டுப் பழம் இலக்கிய புகழினை, இலக்கண அறிவினை, திறனை, தமிழ் மொழி சிறப்பினை, இறை

பக்தியினை எடுத்துச் சொல்லும்போது சிலருக்கு இந் நாளில் பழம் பெருமைகளையே சொல்லுதல் தேவை தானா ? என்று எண்ணத் தோன்றும்.

ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்த ஓர் இளைஞன், அவனுக்கு ஏற்பட்ட சந்தர்ப்ப சூழ்நிலையினால் தீயவ னாகி விடுகிறானென்று வைத்துக் கொள்வோம். அப் போது அவனுக்குள்ள இழிநிலையைக் காணும் பெரிய வர்கள் என்ன சொல்வார்கள் ?

"தம்பி ! நீ நல்ல குடும்பத்தில் உதித்தவன், உன் னுடைய பாட்டனார் வாழ்ந்த பெருமை உனக்குத் தெரியாது. நீ பிறப்பதற்கு முன்னதாகவே அவர் காலமாகி விட்டார். நீ பிறந்து தவழும் போது உன் தந்தை இறந் தார். அவர்களெல்லாம் அடக்கமாக வாழ்ந்தார்கள் ; ஒழுக்கச் சீலர்களாகத் திகழ்ந்தார்கள். இன்று உன்னால் அழிக்கப்படும் செல்வம், அன்று அவர்களால் எப்படிச் சேர்க்கப்பட்டதென்பது உனக்குத் தெரியாது. அல்லும் பகலுமாக உழைத்துச் சேர்த்தார்கள். சேர்த்த பணத்தில், தம்மிடம் வந்து இரந்தவர்க்கென்று ஒரு பகுதியை ஈந்து, மிகுதியைக் கொண்டு சிக்கனத்தோடு குடும்பத்தை நடத்தினார்கள். நல்லவர் போற்றும்படி நடந்தார்கள். அப்படிப்பட்ட பரம்பரையில் உருவாகிய நீ, இன்று உளத்தை உருக்குலைய வைப்பதேயன்றி, உன் பெயரோடு உன் குடும்பப் பெயரையும் பெருமையையும் அழித்துக் கொண்டும் வருகின்றாய். இது நல்லதன்று ! ஒன்றை உன்னால் உருவாக்க முடியவில்லையென்றாலும் உள்ளதை யாவது அழிக்காமல் இருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். ஆகவே, இனியாவது நீ உன் குடும்பப் பெருமையை நினைத்து, அந்தப் பெருமைக்கு மாறான தீய பழக்கங் களை விட்டு விடு ! இருந்த பெருமையை நிலைநாட்டு !" என்பார். அப்படி அறிவுறுத்துவது தவறா ?

அது போலவே இறந்த காலத்தை எண்ணிப் பார்த் தால தான் நிகழ்காலத்தின் சிறப்பினைக் கண்டறிய முடியும். எனவே பழம்பெருமையை நினைத்துப் பார்க்கத் தான் வேண்டும். அப்படிப் பார்க்கக் கூடிய மனப்பாங்கு ஏற்பட்டால் தான்— பழந்தமிழர் பெருமையைப் பார்த்துச் சுவைத்தால் தான்— உரிமையில் வேட்கையும், உள்ளத்தில் புத்தெழுச்சியும் உதயமாக முடியும்.

மொழியும் விழியும் ஒன்றெனக் கருதப்பட்ட காலம் ஒன்றிருந்தது. விழியிழந்த மனிதனும் மொழியிழந்த நாடும் இருப்பதை விட இல்லாமலிருப்பதே சாலச் சிறந் தது என்ற தலையாய கொள்கை, அக்காலத்தில் இருந்து வந்தது. அதனாலேயே அக்கால மாந்தரனைவரும், விழியைக் காக்கும் இமையைப் போல மொழியைப் பாதுகாத்து வந்தனர்.

மொழி இல்லையேல் நாம் இல்லை ; நம்மிடையே உறவில்லை ; நமக்கும் விலங்கினத்திற்கும் வேற்றுமை இல்லை என்ற தெளிந்த உறுதியோடு சங்கம் வைத்துத் தமிழை வளர்த்தனர் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ் என்று தமிழை நாளும் போற்றி வளர்த் தனர். அப்படி வளர்க்கப்பட்ட மொழியையே நாட்டுக்கும் பெயராக அமைத்தனர். இதைத்தான், ‘தமிழ் கூறும் நல்லுலகம்’ என்று தொல்காப்பியப்பாயிரம் உணர்த்தி நிற்கின்றது. இதன் சுருக்கப் பெயரே ‘தமிழகம்’ என்ப தாகும். இதனை ‘இமிழ் கடல் வரைப்பிற் றமிழக மறிய!’ என்று சிலப்பதிகாரமும், ‘சம்புத் தீவினுட் டமிழக மருங்கில்’ என்று மணிமேகலையும், ‘இமிழ் கடல் வேலித் தமிழகம் விளங்க’ என்று பதிற்றுப் பத்தும் உணர்த்தும்.

தமிழகத்துக்கு எல்லை வகுத்தோரெல்லாம் ‘வட வேங்கடந் தென்குமரி’ என்றும், ‘குணகடல் குமரி குடகம் வேங்கடம்’ என்றும், ‘மேல்கடல் கீழ்கடல்’ என்றும் கூறினர்.

தெற்கே குமரியையும், கிழக்கிலும் மேற்கிலும் கடல் களையும் எல்லைகளாகக் குறித்து வடக்கே வேங்கடம் என்று வேங்கடமலையைக் குறித்துச் சிறப்பித்தனர் என்பதை மறுப்பதற்கில்லை.

மனிதனிடத்தே உள்ள மனம், எதனையும் ஏன்? எதற்கு? எவ்வாறு? என்று சிந்திக்கும் திறன் பெற்றது. எனவே, மனிதன், தன்னோடு இணைந்து வாழ்கின்ற உயிர்களையும், காட்டில், கடலில் வாழ்கின்ற உயிர்களை யும் கண்டு, தனக்கும் அவ்வுயிர்கட்கும் உள்ள வேறுபாடு களை ஆய்ந்துணர்ந்து, அவ்வுயிர்கட்கெல்லாம் இல்லாது தனக்கு மட்டுமே வாய்த்த சிறப்புக்களைத் தெளிந்து, அச்சீரிய நிலைகளை வழங்கியருளிய ஆண்டவனுக்கு நன்றி செலுத்த வேண்டியது தன் கடன் என்ற கடமை உணர்வினைக் கொள்கின்றான்.

கருணாமூர்த்தியாகிய இறைவன், கைம்மாறு கருதாது மனித உயிரிடத்தே அன்பு காட்டி அற்புதங்கள் புரிந்தருளி னாராயினும், அம் மனிதன் அப்பெருமானுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டவனாகின்றான். தான் பெற்ற மன உணர்வால் நன்றிக் கடனுணர்வு கொண்ட அவன் அப்பரமனிடம் அன்பு கொள்ளுகின்றான். அவனுடைய நன்றிக் கடனுணர்வினின்று அந்த அன்பு இறைவனை நோக்கி வெளிப்படுகின்றது. அவ்வாறு வெளிப்படுகின்ற அந்த அன்பினையே பக்தி என்று பெரியவர்கள் புகன் றனர். அந்த அன்பு வழிப்பட்ட நெறியே பக்தி நெறி. அந்தப பக்தி நெறியே மனித வாழ்வின் உயர்நிலை அடிப்படை நெறி.

இறைவனுக்கு நன்றி செலுத்துவது எவ்வாறு? மனிதன் தன்னிடத்துள்ள எப்பொருளை ஈந்து நன்றி செலுத்துவது? மனிதனிடத்துள்ள எப்பொருளையும் இறைவன் விழைபவரல்லர். அப்பொருள் இருவினை சாராத பெருநிலையினையும் பற்றற்ற பெருநிலையினை

யும் உடையவராவார். பல்வகைப் பொருள்களையும் படைத்தளித்து உயர்த்திறனை ஆட்டும் உத்தமர் அல்லரோ அவர்! எனவே, அப்பெருமானுக்கு மனிதன் அன்பு செய்தலும், அன்புத் தொண்டாற்றலுமே அவருக்கு நன்றி செலுத்தலாம்.

அவரிடத்தே செலுத்துவது, மனத்தால் அவரை நினைத்தலும், நாவால் அவர் திருப்பெயரை நவிலுதலும், மெய்யால் அவர் திருவடியை வணங்கி வழிபடுதலுமாம். இதனையே பக்தி என்கிறோம். இனி இலக்கியத்தில் இறை பக்தியைக் காண்போம்.



# 2. இலக்கண நூல்கள்
## தொல்காப்பியம்

தமிழ் மொழிக்குத் தலையாக விளங்கும் ஒப்புயர் வற்ற ஓர் இலக்கணம் தொல்காப்பியம். இடைச் சங்க நூலாக இருப்பது இத்தொல்காப்பியம் ஒன்றே. இதனை இயற்றியவர் தொல்காப்பியர். இவர் அகத்தியரது பன்னிரு மாணாக்கருள் ஒருவர். இவரது இயற்பெயர் திரணதூமாக்கினி என்பர்.

தொல்காப்பியத்துக்கு முதல் நூல் அகத்தியரால் இயற்றப் பெற்ற 'அகத்தியம்' என்பர். அகத்தியம் பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்றப் பெற்றதாக வீர சோழியம் எனும் இலக்கண நூலின் பதிப்புரையில் கூறப் பெற்றுள்ளது.

உயர்திணை, அஃறிணை என்னும் தமிழ் இலக்கணப் பாகுபாடு ஆரியம் முதலியவற்றில் இல்லை.

நிலத்தின் பாகுபாடுகளையும் அவற்றின் உரிப் பொருள், கருப் பொருள்களையும், அவற்றின் மக்களது ஒழுக்கங்களையும் கூறுவது தமிழ் இலக்கணம் ஒன்றே.

தொல்காப்பியத்துக்கு உரை எழுதினோர் இளம் பூரணர், கல்லாடர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் என்னும் ஐவர் ஆவார்கள்.

இளம்பூரணரும், பேராசிரியரும் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்னும் மூன்று அதிகாரங்களுக்கும் உரை இயற்றியுள்ளார்கள். கல்லாடர் எழுத்து, சொல் இரண்டுக்கும் உரை எழுதியுள்ளார். சேனாவரையர் சொல்லதிகாரத்துக்கு மட்டும் உரை எழுதியிருக்கிறார்.

எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்னும் மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டு ஓர் அதிகாரத்துக்கு ஒன்பது இயல்களாக மொத்தம் இருபத்தேழு இயல்களைக் கொண்டது தொல்காப்பியம்.

இளம்பூரணர் உரையின்படி மொத்தம் 1595 நூற்பாக்கள் என்று தெரிகிறது. நச்சினார்க்கினியரும், பேராசிரியரும் எழுதிய உரைகளைச் சேர்த்துப் பார்க்கும்போது நூற்பாக்கள் 1611 அல்லது 1612 என்று தெரிய வருகிறது.

எழுத்ததிகாரம், தமிழ் எழுத்துக்களின் இலக்கணங்களை விளக்கமாக அறிவிக்கிறது. மொழிக்கு உறுப்பாகும் ஒலிகளின் பிறப்பு. அவற்றின் இயல்பு பற்றி இவ்வதிகாரத்தில் கூறப்படுகிறது.

நூல் மரபு, மொழி மரபு, பிறப்பியல், புணரியல், தொகை மரபு, உருபியல், உயிர் மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப் புணரியல் என 9 இயல்கள் எழுத்திலக்கணத்தில் அடங்கியுள்ளன.

சொல்லதிகாரம், எழுத்துக்களால் ஆகிய சொற்களின் இலக்கணங்களை விளங்க உரைக்கின்றது. இதில் சொற்களின் இயல்பும், சொற்றொடர் அமைப்பும், போக்கும் சொல்லிலும், சொற்பொருளிலும் நேரும் திரிபுகளும் கூறப்பட்டுள்ளன.

கிளவியாக்கம், வேற்றுமை இயல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு, பெயரியல், வினையியல், இடையியல்,

உரியியல், எச்சவியல் என்னும் ஒன்பது இயல்கள் சொல்லதிகாரத்தில் அடங்கியுள்ளன.

பொருளதிகாரம், சொற்களால் உணர்த்தப்படும் பொருள்களின் இலக்கணங்களை விரித்துரைப்பது. அகப் பொருள், புறப்பொருள் என்பவை பொருளதிகாரத்தில் கூறப்பட்டவையாகும்.

அகப் பொருள் என்பது, மக்களது உள்ளத்து உணர்ச்சியாகிய இன்ப அன்பின் வயப்பட்ட குடும்ப வாழ்க்கை பற்றியது. இன்ப நுகர்ச்சி பிறர்க்குப் புலனாகாமல், ஒருவனும் ஒருத்தியும் ஆகிய இருவரின் உள்ளங் களுக்கு மட்டுமே புலப்படுவது. புறப் பொருள் என்பது, அறம் செய்தலும், பொருள் தேடலும், போர் புரிதலும் போன்ற சமுதாய வாழ்க்கைப் பற்றிய செய்திகளைக் கூறுவது. இவற்றின் பயன் யாவர்க்கும் உரியது. இது மற்றவர்க்கும் புலனாவது. எனவே புறம் எனப் பட்டது.

பொருள் இலக்கணம் அகத்திணையியல், புறத்திணை யியல், களவியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவம இயல், செய்யுளியல், மரபியல் என ஒன்பது இயல்களாக அமைந்துள்ளது.

தொல்காப்பிய இலக்கண நூலுக்கு இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லா டர், தெய்வச் சிலையார் ஆகிய அறுவர் உரை எழுதியிருக் கின்றனர். இவர்களுள் தொல்காப்பியத்துக்கு முழுவது மாக உரை எழுதிய இளம்பூரணாரை 'உரையாசிரியர்' என்றே அழைக்கின்றனர்.

தமிழ் மொழியில் உள்ள எல்லா இலக்கண நூல்களும் தொல்காப்பியத்தைப் பெரிதும் பின்பற்றியே எழுதப் பெற்றவையாகும். தொல்காப்பியத்தைப் பின்பற்றியே நன்னூல் என்னும் இலக்கண நூல் பவணந்தி முனிவரால்

செய்யப்பட்டிருக்கிறது. இலக்கண விளக்கம் என்ற நூல் ‘குட்டித் தொல்காப்பியம்’ என்றே கூறத் தகுந்ததாய் உள்ளது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, தமிழ் மொழியின் ஒலியல், சொல் வழக்காறுகள், அளவைகள், மக்களின் பிரிவுகள், ஆட்சி முறை, அமைச்சர் முதலிய அறங்கூறு அவையினரின் இயல்புகள், போர் முறைகள், நகர அமைப்பு, சிற்பம், ஓவியம் போன்ற நுண்கலைகளின் சிறப்புகள், வாழ்க்கைத் தொழில்கள் காதல் மண முறைகள், தாய்க்குலத்தின் பெருமைகள், கடல்வழி போக்குவரவு, வாணிகச் சிறப்பு, உழவுத் தொழிலின் மேன்மை, நில இயல், வான் இயல், உயிர் இயல் ஆகியவற்றைப் பற்றிய அறிவு, துறவறத்தின் மாண்பு, மெய்யுணர்வு, இறை வழிபாடு போன்ற இன்னோரன்ன பண்பாடுகளை இந்நூல் வழியாக அறிய முடிகிறது.

## நன்னூல்

தொல்காப்பியத்தை எளிதில் கற்று உணர இயலாது என்று கருதிய பவணந்தி என்னும் சமண முனிவர், தொல்காப்பியத்தின் எழுத்து, சொல் ஆகிய இரு அதிகாரங்களையும் முதல் நூலாகக் கொண்டு, பிற்கால இலக்கிய வளர்ச்சிக்கு ஏற்ப புதியவற்றையும் இணைத்து எளிதில் கற்று அறியும் நிலையில் நன்னூல் எனும் இலக்கண நூலைச் செய்தார்.

இவர் 700 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். இவரது ஊர் சனகை எனப்படும் சனகாபுரம் எனவும், தந்தையார் பெயர் சண்மதி முனிவர் என்றும் கூறுகின்றனர். இவர் சமண மதத்தைச் சேர்ந்தவர். இந்நூலைச் செய்வித்தோன், கங்கர் குடித் தோன்றலாகிய சீயகங்கன் என்பவன்.

இந்நூல், சூத்திரம் என வழங்கப்படும் நூற்பாக்களால் ஆனது. இது வழி நூலேயாகும்.

இந்நூலில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐவகை இலக்கணத்தையும் பவணந்தி முனிவர் அமைத்திருந்தனர் என்றும், பின்னர் ஏதோ காரணத்தால் சிதைந்து அழிந்து போய் இப்போதுள்ள நிலையில் எழுத்து, சொல் ஆகிய இரண்டு மட்டுமே நன்னூலாகக் கிடைத்துள்ளன என்றும் கருத வேண்டியுள்ளது. 462 நூற்பாக்கள் கொண்டது.

இந்நூற்பாக்களுள் பல தொல்காப்பியப் பாக்களாகவே உள்ளன. எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் எனும் இரு பெரும் பிரிவாக அமைத்துள்ளார்.

இவர் காலத்தில் வடமொழிச் சொற்கள் தமிழில் வழக்காற்றுக்கு வந்து விட்டமையால் அவற்றை விளக்கத் தனி நூற்பாக்களை அமைத்தும், வழக்காறு ஒழிந்த சொற்களை விலக்கியும் இலக்கணம் வகுத்திருக்கிறார். இந்நூலைப் பயிலாதவர் தமிழ்ப் புலவராக மதிக்கப் படார் என்ற ஒன்றே இதன் சிறப்புக்குச் சான்றாகும்.

நன்னூலுக்கு உரை எழுதிய பெரியார்களுள் குறிப்பிடும்படியானவர்கள் மயிலை நாதர், சங்கர நமச்சிவாயப் புலவர், இராமாநுசக் கவிராயர், விசாகப் பெருமாள் ஐயர், ஆண்டிப் புலவர் முதலியோர் ஆவார்கள்.

## நேமிநாதம்

இதுவும் தொல்காப்பியத்தை முதல் நூலாகக் கொண்டதே. எழுத்து, சொல் ஆகிய இரண்டிற்கும் சிறிய அளவில் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. இதற்குச் சின்னூல் என்றும் பெயர் உண்டு.

இதனை இயற்றியவர் வச்சணந்தி முனிவரின் மாணவர் குணவீர பண்டிதர் எனும் சமண முனிவர் ஆவார். இவர் தம் ஆசிரியர் மீதும் 'வச்சணந்தி மாலை எனும் பாடலை தொகுத்துள்ளார்.

இவரது ஊர் செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த களத்தூர் என்பர்; களந்தையம்பதி என்றும் கூறுவர். மயிலையிலிருந்த இருபத்திரண்டாவது தீர்த்தங்கராகிய நேமிநாதர் பெயரால் செய்யப் பெற்றதால் இது நேமிநாதம் என்று பெயர் பெற்றது. இதன் காலம் கி. பி. 12ம் நூற்றாண்டு என்பர். திரிபுவன தேவன் எனும் பெயர் கொண்ட குலோத்துங்க சோழன் காலத்தில் இயற்றப்பட்ட நூல் இது. நன்னூலுக்கு முற்பட்டது. இதில் உள்ள நூற்பாக்கள் எழுபதும் வெண்பாக்களே.

## யாப்பருங்கலம், காரிகை

இரண்டுமே அமிதசாகரர் என்னும் சமணரால் பாடப் பெற்றவையாகும். காலம் 11ஆம் நூற்றாண்டு. இரண்டுமே யாப்பிலக்கணப் பயிற்சிக்குச் சிறந்த கருவிகள். காரிகை, உறுப்பியல், செய்யுளியல் ஒழிபியல் எனும் பிரிவினைக் கொண்டு 47 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

## சூடாமணி நிகண்டு

சூடாமணி நிகண்டு 12 தொகுதிகளையுடையது. விருத்தப் பாவால் செய்யப்பட்டது. ஆறுமுக நாவலர் பதிப்பில் 1917 செய்யுட்களும், பழைய பதிப்பில் 1125 செய்யுட்களும் உள்ளன. இதன் ஆசிரியர் மண்டலபுருடர், சமண மதத்தைச் சேர்ந்தவர். இவர் ஊர் தொண்டை நாட்டைச் சேர்ந்த பெருமண்டூர்.

## வீரசோழியம்

இதன் ஆசிரியர் புத்தமித்திரனார். இவர் ஊர் பொன்பற்றி. இவரை ஆதரித்த வீரராசேந்திர சோழனின் பெயரால் ஆக்கப்பட்ட நூல் இது. இதில் கூறப்பட்டுள்ள இலக்கணம் வழக்கற்றுப் போய் விட்டது.

## நம்பியகப் பொருள்

இதில் 252 நூற்பாக்கள் உள்ளன. இவ்விலக்கணத்திற்கு இலக்கியமாக எழுதப்பட்டதே 'தஞ்சை வாணன் கோவை' யாகும். இதன் ஆசிரியர் நாற்கவிராசு நம்பி எனும் சமணர் ஆவார்.

## தண்டியலங்காரம்

இது காவிய தரிசனம் என்னும் வடநூலின் மொழி பெயர்ப்பாகும். அணியியல் என்ற பெயரும் உண்டு. இது மூன்று இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதில் 125 நூற்பாக்கள் உள்ளன. இதன் ஆசிரியர் தண்டி ஆவார். இவர் கம்பர் மகன் அம்பிகாபதியின் மகன் என்றும் சொல்வர்.

# 3. தமிழ்ச் சங்கங்கள்

முச்சங்கங்களிலும் படைக்கப் பெற்ற பல நூல்களுள் தமிழர் தம் செல்வமாக இன்றுள்ளவை கடைச் சங்க நூல் களில் சிலவேயாகும். இச்சங்க காலத்துச் சில நூல்களே நமது பண்டைத் தமிழ் இலக்கியங்கள் எனும் பெருமை யுடன் நமது தொன்மைப் புகழை இம் மண்ணுலகிற்குப் புகழுடன் பறை சாற்றிக் கொண்டிருக்கின்றன.

இம்மூன்று சங்கங்களின் காலங்களில் பல்வேறு கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. எனினும் கடைச் சங்க காலம் கி. மு. 200 முதல் கி. பி 250 வரை என்பதனைத் தமிழறிஞருள் பெரும்பான்மையினர் ஒப்புக் கொள்கின்றனர்.

தலைச் சங்க காலத்தில் தோன்றிய நூல்களுள் ஒன்றேனும் இன்று காணக் கிடைக்கவில்லை.

இடைச் சங்க நூலாக [illegible] ப்பது தொல்காப்பியம் ஒன்றே.

கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த ஏறக்குறைய ஐநூறு புலவர்கள் பாடிய செய்யுட்களே இன்று சங்க நூல்களாக நமக்குக் கிடைத்திருப்பவை. அவை எட்டுத் தொகை, பத்துப் பாட்டு என்பன ஆகும். அவை தொகை யென்றும், பாட்டு யென்றும் பிற்காலத்தவரால் தொகுக்கப் பெற்றன.

மூன்று சங்கங்கள் அமைத்து முத்தமிழை வளர்த்தனர் நமது முன்னோர்கள். தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் எனும் மூன்று சங்கங்களும் பாண்டிய மன்னர்களால் நிறுவப் பெற்று; அவை இயல், இசை, கூத்து எனும் மூன்று தமிழையும் முறையாக வளர்த்தன என்பர்.

## தலைச் சங்கம் :

தலைச் சங்கத்தை நிறுவியவன் காய்சினவழுதி எனும் பாண்டியன். 549 புலவர்கள் தலைச் சங்கத்திலிருந்து தமிழ் ஆராய்ந்தனர். அவர்களுள் சிவபெருமான், முருகவேள், முரஞ்சியூர், முடிநாகராயர், நிதியின் கிழவன் என்பவர் முக்கியமானவராகச் சொல்லப்படுகின்றனர். தலைச் சங்க காலத்தில் பாடியவரின் தொகை 4440 ஆகும். இதில் தமிழ் ஆராய்ந்த 549 புலவாகளும் அடங்குவர். முதற் சங்கத்தைத் தொடங்கிய காய்சினவழுதி முதல் தலைச் சங்கம் காத்தக் கடைசி மன்னனாகச் சொல்லப் படும் கடுங்கோன் வரை 89 பாண்டிய மன்னர்கள் சங்கதததைத் தம் இன்னுயிராகப் போற்றிக் காத்தனர்.

இவர்களால் பாடப் பெற்ற கணக்கற்ற நூல்களுள் குறிப்பிடத் தக்கவை பரிபாடல், முதுநாரை, முது குருகு, களிரியாவிரை முதலியனவாகும்.

இச்சங்கத்திற்கு இலககண் நூலாக இருந்தது அகத்தியம், இச்சங்கம் 4440 ஆண்டுகள் தென்மதுரையில் நிலை பெற்று இருந்தது.

## இடைச் சங்கம்

வெண்டேர்ச் செழியன் என்னும் பாண்டியன் கபாட புரத்தில் இடைச் சங்கத்தை நிறுவினான். தலைச் சங்கம்

கடலால் கொள்ளப்பட்டு அழிந்த பின், இடைச் சங்கம் காண வேண்டிய இன்றியமையாமையை எண்ணி ஏற்படுத்திய இச்சங்கத்தில் தமிழாய்ந்த குறிப்பிடத் தக்க புலவர்கள் அகத்தியர், தொல்காப்பியர், இருந்தையூர்க் கருங்கோழி, மோசி, வெள்ளூர்க்காப்பியன், சிறுபாண்டரங்கன், திரையன்மாறன், துவரைக்கோன், கீரந்தை முதலானோர் ஆவார்கள். இவர்கள் உட்பட 59 புலவர்கள் இடைச் சங்கத்தில் தமிழ் ஆய்ந்தனர். இவர்கள் உட்பட இடைச் சங்கத்தில் பாடிய புலவர்கள் 3700 ஆகும். இடைச் சங்கத்தைக் காத்த பாண்டிய மன்னர்கள் வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமாறன் வரை 59 புலவர்கள் ஆவர்.

இடைச் சங்கப் புலவர்களால் பாடப் பெற்ற எண்ணிறந்த நூல்களுள் கலி, குருகு, வெண்டாளி, வியாழ மாலை அகவல் என்பவை குறிப்பிடத் தக்கவை.

இக்காலப் புலவர்களுக்கு இலக்கணமாக இருந்தவை அகத்தியம், தொல்காப்பியம் என்பனவாகும். இச்சங்கம் 3700 ஆண்டு காலம் கபாடபுரத்தில் தமிழ் வளர்த்தது என்பர்.

## கடைச் சங்கம்

முதல் சங்கம், இடைச் சங்கம் கடலால் கொள்ளப் பட்ட பின், தற்போதுள்ள மதுரையில் கடைச் சங்கம் காணப் பெற்றது. கடைச்சங்கம் கண்ட பாண்டியன் முடத்திருமாறன். இச்சங்கத்திலிருந்து தமிழ் ஆய்ந்த புலவர்கள் 49 பேர். அவர்களுள் குறிப்பிடத் தகுந்தவர்கள் சிறுமேதாவியார், சேந்தம் பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர்க்கிழார், இளந்திருமாறன், மதுரையாசிரியர் நலந்துவனார், மதுரை இளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் ஆவார்கள்.

இச்சங்கத்தில் இவர்களையும் சேர்த்து 449 பேர் பாடியுள்ளனர். இவர்களால் பாடப் பெற்றவை நெடுந்தொகை நானூறு, குருந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, புற நானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பது கலி, எழுபது பரிபாடல் போன்றவை.

இவர்களுக்கு இலக்கணமாயமைந்தவை அகத்தியம், தொல்காப்பியம். இச்சங்கத்தைக் காத்த இறுதிப் பாண்டிய மன்னன் உக்கிரப் பெருவழுதி உட்பட தொகை 49 ஆகும். கடைச் சங்கம் 1850 ஆண்டுகள் தமிழ்ப் பணியாற்றியுள்ளது என்பர்.

# 4. எட்டுத் தொகை

**"நற்றிணை, நல்ல குறுந்தொகை, ஐங்குறுநூறு,**
**ஒத்த பதிற்றுப்பத்து, ஓங்கு பரிபாடல்,**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு; அகம், புறம் என்று**
**இத்திறத்த எட்டுத் தொகை."**

மேற்கூறிய பழம் பாடல் எட்டுத் தொகை நூல்களின் பெயர்களைத் தொகுத்து உரைக்கின்றது. இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு என்னும் ஐந்து தொகை நூல்களும் அகப் பொருள் பற்றியவை.

பதிற்றுப்பத்து, புறநானூறு எனும் இரண்டும் புறப் பொருள் பற்றியவை. பரிபாடல், அகம் புறம் என்னும் இரு பொருள் பற்றியும் கூறுகிறது.

## நற்றிணை

திணை என்பது ஒழுக்கம். நற்றிணையில் 401 பாக்கள் அமைந்துள்ளன. யாவும் ஆசிரியப் பாவால் இயற்றப் பெற்றுள்ளன. ஒன்பது அடி முதல் 12 அடி வரை அமைந்த பாடல்களைக் கொண்டது.

நற்றிணையில் பாடிய புலவர்களின் தொகை 175. அத்துணையும், அகவொழுக்கங்களை மிக நன்கு விளக்கும் பாடல்கள். யாரும் உணரவியலாத அகத்தில் நிகழும் அரிய உணர்வுகளுக்குத் தெளிந்த வடிவம் கொடுக்கும். நுண்மையும், நன்மையும், எழிலும் வாய்ந்தவை நற்றிணைப் பாடல்கள்.

## குறுந்தொகை

நான்கு அடி முதல் 8 அடி வரையுள்ள பாடல்களைக் கொண்டதால் இது குறுந்தொகை என்று பிரிக்கப் பட்டது. கடவுள் வாழ்த்துப் பாடல் உட்பட 402 பாக்களைக் கொண்டதாகும்.

குறுந்தொகையைத் தொகுப்பித்தவன் பாண்டியன் பூரிக்கோ என்பவன். பாடிய புலவர்கள் 206 பேர். இவர்களால் பாடப் பெற்ற அரசர்கள் அதிகன், அகுதை, அழிசி, ஆய், எவ்வி, எழினி, ஓரி, கட்டி, குட்டுவன் கோசர், நன்னன், பூழியர், பொறையன், மலையன், விச்சிக்கோ முதலியோர் ஆவர்.

இவர்களால் பாடப் பெற்ற மலைகள் அரலைக் குன்றம், எழில்சொல்லி, பறம்பு, பொதியில் என்பவை. இதில் உள்ள செய்யுள்கள் சொல் நயமும், பொருள் நயமும் மிகுந்தவை. இதில் உள்ள உவமைகளாலும் சிறந்த சொற்றொடர்களாலும் பெயர் பெற்ற புலவர்கள் பலர். அனிலாடு முன்றிலார், கல்பொரு சிறுநுரையார், காக்கை பாடினியார், நச்செள்ளையார், கால்எறி கடிகையார், காடன் முல்லைப்பூதனார், குப்பைக் கோழியார், செல்புலப் பெயல் நீரார், பதடிவைகலார், மீன்எறி தூண்டிலார், விட்டகுதிரையார் என்பவை இதில் பாடிய புலவர்கள் சிலரின் பெயர்களாகும்.

## ஐங்குறுநூறு

இந்நூல் 3 அடி முதல் 6 அடி வரையுள்ள 500 செய்யுள்களைக் கொண்டது. முல்லை, குறிஞ்சி, மருதம் நெய்தல், பாலை என்னும் ஐந்து திணைகளையும் தனித் தனி நூறு செய்யுட்களால் ஐந்து புலவர்கள் பாடியுள்ளார்கள்.

**"மருதம் ஓரம் போகி நெய்தல் அம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலன் கருதிய
பாலை யோத லாந்தை பனிமுல்லை பேயனே
நூலையோது ஐங்குறு நூறு."**

'மருத'த் திணையை ஓரம்போகியார் எனும் புலவரும்; நெய்தல் திணையை அம்மூவன் எனும் புலவரும்; குறிஞ்சித்திணையைக் கபிலன் எனும் புலவரும்; பாலைத் திணையை ஓதலாந்தை எனும் புலவரும் பாடியுள்ளனர்.

இதனைத் தொகுத்தவர் கூடலூர் கிழார், தொகுப்பித்தவர் யானைகட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை. ஒவ்வொரு நூலும் பத்துப் பத்துச் செய்யுள்களாகப் பகுக்கப்பட்டுப் பெயரிடப்பட்டுள்ளன. குரக்குப் பத்து, மஞ்சைப் பத்து, அன்னைப் பத்து, செவிலிப் பத்து என்ற வாறு பெயர்கள் இடப்பட்டுள்ளன.

## பதிற்றுப் பத்து

பத்து சேர அரசர்களைப் பற்றிய பாடல்களின் தொகுப்பே இந்நூல். ஒவ்வோர் அரசர் மீதும் ஒவ்வொரு புலவர் பத்துப் பாடல்களாகப் பத்துப் புலவர்கள்; பத்து அரசர்கள் மீது நூறு பாடல்களைப் பாடியுள்ளனர்.

முதல் பத்து, இரண்டாம் பத்து... என்று பெயரிட்டுள்ளனர். இவற்றுள் முதல் பத்தும்,பத்தாம் பத்தும் கிடைக்க

வில்லை. கிடைத்திருப்பவை 2ம் பத்து முதல் ஒன்பதாம் பத்து வரையே.

சேர அரசர்களின் கொடைப் பெருமையைக் கூறும் பாடல்கள் கொண்டது இந்த நூல்.

## பரிபாடல்

ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா எனும் நால்வகைச் செய்யுளும் கலந்தது பரிபாடல். இயல், இசை, கூத்து எனும் முத்தமிழ் நயமும் ஒருங்கே கொண்டு உயர்வாகப் போற்றப்பட்ட இதன் பாடல்களைப் பண்ணமைத்து இசைத்து வந்தனர்.

திருமால், முருகன், வையை ஆகிய தெய்வங்களைப் பற்றி அகப்பொருளும், புறப்பொருளும் விரவி வரப் பாடப் பெற்று பரிபாடலில் 13 புலவர்கள் பாடிய பாடல்கள் உள்ளன. இப்பாடல்களுக்கு இசை வகுத்த வரும் பலர் ஆவர்.

**பண்ணமைத்தவர்கள் :**

நன்னாகனார் (2ஆம் பாடல்)
பெட்டகனார் (3, 4ஆம் பாடல்கள்)

மருத்துவன் நல்லச்சுதனார் (6,8,10,16,17,18,19, 20ஆம் பாடல்கள்)
கண்ணகனார் (5, 21ஆம் பாடல்கள்)
பித்தா மத்தர் (7ஆம் பாடல்)
கேசவனார் (14ஆம் பாடல்)

## கலித்தொகை

கலிப்பா எனும் பெயர் பெற்ற செய்யுட்கள் நூற்றைம்பது கொண்டது கலித்தொகை. ஐந்து திணை களையும் தனித்தனியே ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர்.

**"பெருங்கடுங்கோன் பாலை குறிஞ்சி கபிலன்**
**மருதன்இள நாகன் மருதம்— அருஞ்சோழன்**
**நல்லுத் திரன்முல்லை நல்லந் துவன்நெய்தல்**
**கல்விவலார் கண்ட கலி"**

**பாலைக் கலியைப் பாடியவர்— பெருங்கடுங்கோ.**
**குறிஞ்சிக் கலியைப் பாடியவர்— கபிலன்.**
**மருதக் கலியைப் பாடியவர்— மருதனிள நாகனார்.**
**முல்லைக் கலியைப் பாடியவர்— நல்லுத்திரன்.**
**நெய்தற் கலியைப் பாடியவர்— நல்லந்துவன்.**

**பாலை** :- *முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் இயற்கை மாறி, நீரும் நிழலுமின்றி அதன் கண் செல்வார்க்கு மன நடுக்கத்தைத் தரும் வறண்ட நிலமே பாலை எனப்படும். பாலை நிலத் தெய்வம் கொற்றவை.*

**மருதம்** :- *வயலும், வயல் சார்ந்த இடமும் மருதம் எனப்படும். மருத நிலத் தெய்வம் இந்திரன்.*

**குறிஞ்சி** :- *மலையும், மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலம் எனப்படும். குறிஞ்சி நிலத் தெய்வம் முருகன்.*

**முல்லை** :- *காடும், காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலம் எனப்படும். முல்லை நிலத் தெய்வம் திருமால்.*

**நெய்தல்** :- *கடலும், கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப்படும். நெய்தல் நிலத் தெய்வம் வருணன்.*

## அகநானூறு

*அகப் பொருளைச் சிறப்பித்துக் கூறும் நானூறு செய்யுட்களைக் கொண்டது. இதனைத் தொகுத்தவர்*

உப்பூரி கிழான் மகனார் உருத்திரன்மா. தொகுப்பித்தவன் உக்கிரப் பெருவழுதி.

13 அடி முதல் 32 அடி வரையுள்ள நெடிய செய்யுட்கள் கொண்டமையால், இதனை நெடுந்தொகை என்றும் வழங்குவர்.

1 முதல் 120 வரையுள்ள செய்யுட்களைக் களிற்றி யானை நிரை எனவும், 121 முதல் 300 வரையுள்ள செய்யுட்களை மணிமிடை பவளம் எனவும், 301 முதல் 400 வரையுள்ள செய்யுட்களை நித்திலக் கோவை எனவும் மூன்று பிரிவுகளாகப் பிரித்துள்ளனர்.

இதில் 1,3,5,7,9,11 போன்ற ஒற்றைப்படை எண்ணுள்ள செய்யுள்கள் பாலைத் திணை பற்றிய பாடல்களாகும். 2,8,12,18 என்று இரண்டும் எட்டுமாகவருபவை குறிஞ்சித் திணை பற்றிய பாடல்களைக் குறிக்கும். 4, 14, 24 என்று நான்காம் எண்களாக வருபவை முல்லைத் திணையைக் குறிக்கும் பாடல்கள். 6, 16, 26, 38 என்று ஆறாவது எண்ணாக உள்ளவை மருதத் திணையைக் குறிக்கும். 10, 20, 30 என்று பத்து பத்தான எண்கள் நெய்தல் திணையைக் குறிக்கும். இவ்வாறான சிறந்த அமைப்பு முறை வேறு எந்த நூலுக்கும் இல்லை.

இந்நூலைப் பாடிய புலவர்கள் 145 பேர் இதில் 114, 117, 160 ஆகிய எண்ணுள்ள பாடல்களின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஏனைய பாடல்களைப் பாடியவர்கள் 142 பேர்.

**"ஒன்றுமூன்று ஐந்து ஏழ் ஒன்பான் பாலை ; ஓதாது**
**நின்றவற்றின் நான்கு நெறிமுல்லை ; அன்றியே**
**ஆறாம் மருதம் ; அணி நெய்தல் ஐ— இரண்டு;**
**கூறாதவை குறிஞ்சிக் கூற்று."**

**"பாலை வியம் எல்லாம் ; பத்தாம் பனிநெய்தல்
நாலு நளிமுல்லை ; நாடுங்கால் மேலையோர்
தேரும் இரண்டு ; எட்டு இறைகுறிஞ்சி ; செந்தமிழின்
ஆறு மருதம்— அகம்."**

அகநானூறு எனும் இந் 'நெடுந்தொகை' கடைச் சங்க காலத்தே தொகுக்கப் பெற்றது. இதற்குப் பாயிரம் எழுதியவன் இடையள நாட்டு மணக்குடியான். பால் வண்ண தேவனான வில்வதரையன் என்பான். அகவற் பாவால் அமைந்த அப்பாயிரத்தால் அறியப்படுவது:

நிலைபெற்ற அறநெறியினைப் பேணி வந்தவர்கள், எத்திக்கிலும் வெற்றியுடன் சிறப்பாக ஆட்சி நடாத்தியவர்களும், குற்றமே இல்லாத கொள்கையினை யுடையவர்களும், ஆகிய பாண்டியர்கள் அவர்களுடைய அரசவையிலே அறிவு குடிகொண்ட அகத்தினையுடை யவர்களும், வான் புகழ் சான்றோர்களும் குழுமியிருந்து அருமையுடைய முத்தமிழினையும் ஆய்ந்து வந்தனர்.

அவ்வாறு அவர்கள் ஆராய்ந்து, மிகவும் சிறந்தவை எனத் தெரிந்த சிறப்பினையுடைய தமிழ்ப் பாடல்களுள், நெடியவாகி அடிகள் அதிகமாக விளங்கிய இன்பப் பகுதி யினைச் சார்ந்த இனிய பொருள் அமைந்த பாடல்கள் நானூற்றை எடுத்து நூல்களை ஆராய்ந்து சொல்லும் புலவர் பெருமக்கள் தொகுத்தனர்.

## புறநானூறு

புறவொழுக்கத்தைப் பற்றி கூறும் 400 செய்யுட்களின் தொகையே புறநானூறு ஆகும். அறம், பொருள், வீடு என்னும் மூன்று பொருள்களும் புறப் பொருளில் அடங்கும். இதனைத் தொகுத்தவன், தொகுப்பித்தவன் யார் என்று தெரியவில்லை. இதில், சிவபெருமானைப்

பற்றிப் பெருந்தேவனார் எனும் புலவர் கடவுள் வாழ்த்துப் பாடியுள்ளார்.

400 பாடல்கள் எனினும் 2 பாடல்கள் முழுவதுமாகக் கிடைக்கவில்லை. 267, 268ஆம் பாடல்கள் முற்றும் மறைந்து போயின. 44 பாடல்கள் சிதைந்து கிடைத்திருக்கின்றன. இதில் 156 புலவர்கள் பாடியுள்ளனர். இவர்களுள் 14பேர் அரசரும்,அரச குடும்பத்தைச் சேர்ந்தவரும் ஆவர். 15 பெண்பாற் புலவர்களும் உள்ளனர்.

ஔவையார் பாடியவையே எண்ணிக்கையில் அதிகமாக 33 பாடல்கள் உள்ளன. இந்நூலின் முதல் 266 பாடல்களுக்குப் பழைய உரை கிடைத்துள்ளது.

புறம், புறப்பாட்டு, புறம்பு நானூறு என்றும் இதனைக் குறிப்பிடுகின்றனர். அடி அளவுகள் குறைந்தது இவ்வளவு, அதிகம் இவ்வளவு என்று குறிப்பிட்டுச் சொல்லும்படியாக இல்லாமல் பாடல்கள் சிதைந்து உள்ளன.

பண்டையத் தமிழகத்தின் அரசியல் வரலாற்றையும் சமூக வரலாற்றையும், அறிவுறுத்தும் அரிய கருவூலமாகப் புறநானூறு விளங்குகிறது. பண்டைக் காலத்தில் வாழ்ந்த பேரரசர்களையும், சிற்றரசர்களையும், வீரர்களையும், வீர் வழிபாட்டு முறைகளையும், அக்காலச் சமூகப் பழக்க வழக்கங்கள் பலவற்றையும் எடுத்தியம்பும் பாடல்களைக் கொண்டது இத் தொகுதியே.

முதல் முடிமன்னர் மூவரைப் பற்றிய பாடல்களும், பின்னர் குறுநில மன்னர், வேளிர் முதலிய சிறப்புடையவர்களைப் பற்றிய பாடல்களும், போர்ப் பாடல்களும், கையறு நிலை, நடுகல், மகளிர் தீப்பாய்தல் முதலிய போர் நிகழ்ச்சிகளுடன் தொடர்புள்ள பாடல்களும் அமைந்திருக்கின்றன.

அரசர்க்கும் பிறர்க்கும் அற நிலையை எடுத்து உரைக்கும் பாடல்களும், பாணாற்றுப்படை, விறலி யாற்றுப்படை, புலவராற்றுப்படை முதலிய ஆற்றுப் படைப் பாடல்களும் இடையிடையே உள்ளன.

சங்க காலத் தமிழ்ப் புலவர்கள் மக்கள் வாழ்வில் அமைந்த நல்லியல்புகளையே தம் பாடல்களில் பாராட்டி னார்கள். தீமை செய்வோர் அரசர்களாயினும், அஞ்சாது அறிவுரை கூறி அவர்களைத் திருத்தினார்கள். சங்க காலத்தின் வரலாற்று நூலாகத் திகழ்வது இது.

பலவகைக் குடும்பத்தினரும், பல்வகைத் தொழிலைச் செய்தவரும் பெரும் புலவர்களாய்ச் சிறப்புற்று இருந் தனர் என்பது ஔவையார், வெண்ணிக்குயத்தியார், கபிலர், பொன்வணிகனார், மருத்துவன் தாமோதரனார், கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார், மதுரைக் கணக் காயனார் மகனார், நக்கீரனார் போன்ற பெயர்களால் தெரிந்து கொள்ளலாம்.

புறநானூறு கடையேழு வள்ளல்களின் புகழைப் போற்றிக் கூறுகிறது. அவர்கள் பாரி, பேகன், அதியமான், காரி, ஓரி, ஆய், நள்ளி என்ற எழுவராகும்

## 1. பாரி

300 ஊர்களுக்கும் பறம்பு மலைக்கும் உரியவன் பாரி. அவன் நாடு பறம்பு நாடு எனப்பட்டது. இக்காலத்து இராமநாதபுர மாவட்டத்தில், திருப்பத்தூர் வட்டத்தில் பிரான்மலை என்ற பெயரால் இது வழங்கப்படுகிறது.

வண்டுகள் தேனை உண்ணக் கொடுக்கும் பூக்களைக் கொண்ட சுரபுன்னை மரங்கள் செறிந்துள்ள நெடுவழியில் பாரி தன் செழுந்தேரில் வந்து கொண்டிருந்

தான். வழியில் பாரி தன் முல்லைக் கொடி ஒன்று பற்றி படர்வதற்கு ஒரு கொழு கொம்பின்றிக் கிடந்ததனைக் கண்டான். அவன் மனம் மிகவும் கலங்கியது. தன் தேரை அருகில் நிறுத்தித் தவிக்கும் முல்லைக் கொடியினைத் தூக்கி அதன்மீது படரவிட்டான், அங்கிருந்து கால்நடையாகவே தன் அரண்மனை நோக்கி நடந்தான். முல்லைக் கொடிக்குத் தேரீந்த பாரியின் புகழ் இந்தப் பார் உள்ளளவும் புகழோடு வாழ்ந்து கொண்டிருக்கும். எனவேதான் 'முல்லைக்குத் தேரீந்த வள்ளல்' என்று பாரியைப் புகழ்கின்றனர்.

## 2. பேகன்

பொதினி மலையையும் அதனைச் சுற்றியுள்ள ஊர்களையும் ஆண்டு வந்தவன் பேகன். தற்போது பழநிமலை என்று வழங்கப் பெறுவது பண்டைய பொதினி மலையாகும். அம்மலையை அடுத்துள்ள ஊர் (திரு) ஆவிதன்குடி, ஆவி என்பது மரபின் பெயர்

மக்கள் படும் துன்பத்தை மட்டுமன்றி, எந்த உயிரினங்கள் படும் துன்பத்தையும் காணப் பொறாமல் துன்பம் துடைக்க உடனே உடனே துடித்தவன் பேகன். மழை காலத்தில் ஒருநாள் மாலையில், வானத்தில் திரண்டிருந்த கருமேகத்தைக் கண்டு ஓர் ஆண் மயில் மிக்க மகிழ்ச்சியுடன் தோகை விரித்தாடியது. பேகன் அது குளிரால் நடுங்குவதாக எண்ணி மனம் இரங்கி, தன் உடலில் போர்த்தியிருந்த விலையுயர்ந்த பட்டுப் போர்வையை எடுத்து அம்மயிலுக்குப் போர்த்தி விட்டான். எனவே 'மயிலுக்குப் போர்வை' தந்த வள்ளல் பேகன்' என்ற புகழ் வந்து வையம் போற்றுகிறது.

## 3. அதியமான்

தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தவன் அதியமான் நெடுமான் அஞ்சி. இன்று தருமபுரி என்று அழைக்கப் பெறுவதே அன்றையத் தகடூர் ஆகும்.

கடலை நோக்கிச் செல்லும் ஆறுகள் போலப் புலவரும், பாணரும், பொருநரும், கூத்தருமாகிய பரிசிலர் பலரும் அவனை நோக்கி வந்து பரிசில் பெற்றுச் சென்ற வண்ணம் இருப்பர்.

தன்னை யுண்டாரை நீண்ட காலம் வாழ வைக்கும் கருநெல்லிக் கனியை ஔவையார்க்கு அளித்துப் பெரும் புகழ் பெற்றவன் அதியமான். 'ஔவைக்கு நெல்லிக்கனி அளித்த அதியமான்' என்று இவனை அனைத்துலகும் பாராட்டுகிறது.

போரை விரும்பாத புண்ணியனான இவன் பொருட்டு, ஔவையார் தொண்டைமானிடம் தூது சென்று இரு நாடுகளிலும் அமைதி நிலவ வழி கோலினார். பெருஞ்சேரல் இரும்பொறையால் அழிவுற்றவன் இவன். பொகுட்டு எழினி என்பானின் தந்தையும் ஆவான் இவன்.

## 4. காரி

திருக்கோவலூரையும் அதைச் சுற்றியுள்ள நாட்டையும் ஆண்டவன் மலையமான் திருமுடிக்காரி. வீரமும், ஈரமும் நிறைந்தவன். இவனுடைய குதிரையின் பெயரும் காரி எனப்பட்டது.

மூவேந்தர்களுக்கும் துணையாக இருந்து அவர்கள் போரில் வெற்றி பெற வீரம் காட்டி, யானை, தேர், குதிரை, ஊர் ஆகியவற்றைப் பரிசுகளாகப் பெறுவான். அவ்வாறு தனக்குக் கிடைத்த பரிசுகளைத் தானே

வைத்துக் கொள்ளாமல் தன்னுடன் சேர்ந்து போர் புரிந்த படைவீரர்களுக்கும், மற்றும் பாவலர்க்கும், பாணர்க்கும் வாரி வழங்கி விடுவான். தனக்குக் கிடைத்த குதிரைகளைத் தேரிலே பூட்டித் தேரைப் பரிசாகக் கொடுப்பதில் பெருமகிழ்ச்சி கொள்வான் காரி.

கற்புடைய மனைவியைத் தவிர வேறு ஒன்றையும் தன் தனிச் சொத்தாக வைத்துக் கொள்ளாத பெருமனம் படைத்தவன் என்று கபிலர் இவனைப் புகழ்ந்து பாடுகிறார்.

## 5. ஓரி

கொல்லி மலையைச் சேர்ந்த நாட்டை ஆண்டு வந்தவன் வல்வில் ஓரி. வில்லாற்றலில் சிறந்தவன்; வள்ளற்றன்மையில் உயர்ந்தவன்.

ஒருமுறை அவன் விட்ட அம்பானது ஓர் யானையின் உடம்பைத் துளைத்துப் பின்னர் ஒரு புலியின் வாய்க் குள்ளே நுழைந்து, அதன் பின்னர் ஒரு கலைமான், காட்டுப் பன்றி உடும்பு ஆகியவற்றையும் (ஐந்து உயிரினங்களையும்) தாக்கிக் கொன்றது என்றும் அதனாலேயே அவன் வல்வில் ஓரி எனும் பேர் பெற்றான் என்றும் கூறுவர்.

இரவலர்க்குத் தங்கத்தால் செய்த பூவையும், வெள்ளி யிழையிலே நீலமணிக்கல் பதித்துச் செய்த குவளை மலர் போன்ற பூவையும், பிற அணிகலன்களையும், யானை களையும் கொடுப்பான்.

திருமுடிக் காரியோடு தனித்து நின்று போரிட்டு வீர மரணம் அடைந்தான் ஓரி.

## 6. ஆய்

பொதிய மலையைச் சூழ்ந்த வேணாட்டுக்குரியனாய் ஆய் குடியிலிருந்து ஆட்சி புரிந்து வந்த வள்ளல் ஆய்

அண்டிரன். ஆய் அண்டிரனை ஆய் குடியைத் தோற்று வித்த முதல்வன் எனக் கருதுவர் சிலர்.

யானைகளைப் பரிசாகக் கொடுப்பதில் பெருவிருப்பம் கொண்டவன் ஆய். 'நிறைய யானைகளைப் பரிசாகக் கொடுக்கிறாயே, உன் நாட்டில் ஓர் யானை ஒரே முறையில் பத்துக் கன்றுகள் ஈனுமோ ?' என்று இவனை வியந்து கேட்டிருக்கிறார் முடமோசியார் எனும் புலவர்.

கைம்மாறு ஏதும் கருதாமல் சான்றோர் சென்ற வழியே செல்வது தன் கடமை என்று வரையாது வழங்கிய வள்ளலாகத் திகழ்ந்தவன் ஆய்.

## 7. நள்ளி

தோட்டி மலைக்குத் தலைவன் கண்டீரக் கோப்பெரு நள்ளி. அவன் வீரக் கழல் அணிந்தவன். தலையில் நீல மணியைச் சூடியிருந்தான். மார்பில் முத்து மாலையினை யும் கைகளில் கடகம் எனும் ஆபரணத்தையும் அணிந் திருந்தவன்.

ஒருமுறை அவன் காட்டிலே ஒரு புலவரையும், அவரைச் சார்ந்தவரையும் பசித்த நிலையிலே கண்டான். தானே நெருப்பு மூட்டி, மானின் தசையை நெருப்பிலே யிட்டுப் பொசுக்கி, அவர்களுக்குத் தந்தான்.

அவர்கள் பசியாறிய பின், தன் மார்பிலே கிடந்த முத்து மாலையையும், கையில் அணிந்திருந்த கடகம் எனும் ஆபரணத்தையும் புலவர்க்கு அன்புடன் ஈந்தான். அப்புலவர் அவன் பெயரையும் நாட்டையும் எவ்வளவோ வற்புறுத்திக் கேட்டும் ஏதும் சொல்லாமலே சென்று விட்டான்.

தான் உதவுவது ஒருவருக்கும் தெரியக்கூடாது என்ற உயர்ந்த உள்ளம் கொண்டவன் கண்டீரக் கோப்பெரு நள்ளி.

தமிழ் இலக்கியங்களில் ஈகைத்தன்மையுடைய மன்னர் கள், புலவர்கள் பலரது வரலாறு ஆங்காங்கே தெரிய வந்தாலும் கடையேழு வள்ளல்கள் என்று மிகவும் சிறப் பாக இவர்களையே குறித்துள்ளார்கள்.

# 5. பத்துப் பாட்டு

**"முருகு பொருநராறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி— மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல் குறிஞ்சிபட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து."**

திருமுருகாற்றுப் படை, பொருநர் ஆற்றுப் படை, சிறுபாணாற்றுப் படை, பெரும் பாணாற்றுப் படை முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநெல் வாடை குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடு கடாம் ஆகிய பத்துப் பாடல்களின் தொகுப்பே பத்துப் பாட்டாகும்.

திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை எனும் இரண்டினையும் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியுள்ளார். பெரும் பாணாற்றுப் படை, பட்டினப்பாலை ஆகிய இரண்டினையும் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடியுள்ளார். பொருநர் ஆற்றுப் படை, முத்தாமக் கண்ணியாரால் பாடப் பெற்றது. சிறுபாணாற்றுப் படை, இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரால் பாடப் பெற்றுள்ளது. முல்லைப் பாட்டு, காவிரிப்பூம்பட்டினத்து பொன் வாணிகனார் மகனார் நப்பூதனாரால் பாடப் பெற்றது. மதுரைக் காஞ்சி, மாங்குடி மருதனாரால் பாடப் பெற்றுள்ளது. குறிஞ்சிப் பாட்டு, கபிலரால் பாடப் பெற்றது. மலைபடு

கடாம், இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனாரால் பாடப் பெற்றது.

பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும் இடைச்சங்க காலத்துப் பிறந்த 'இரட்டைக் குழந்தைகள்' என்று போற்றுவார்கள் புலவர்கள். தனித்தனியாக அமைந்த பாட்டுக்களிலிருந்த இந்தப் பாட்டுகள் பத்தினையும் ஒன்றாகத் தொகுத்தவர் பெயர் நமக்குக் கிடைக்கவில்லை.

முடியுடை வேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியர் களுள் சோழ, பாண்டிய மன்னர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்ட பாட்டுக்கள் இப்பத்துப் பாட்டில் அமைந்துள்ளன.

சேரனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது ஒன்றும் இல்லை எனினும் சேரரைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

மதுரைக் காஞ்சி, நெடுநல் வாடை என்னும் இரண்டு பாட்டுக்களும் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது.

பொருநர் ஆற்றுப்படை, பட்டினப்பாலை ஆகிய இரண்டு பாட்டுக்களுக்கும் சோழன் கரிகாற் பெருவளத் தான் பாட்டுடைத் தலைவனாக விளங்குகிறான்.

பொருநர் ஆற்றுப் படைத் தலைவன், கரிகாற் பெருவளத்தானை வேறாகவும், பட்டினப்பாலைத் தலைவன், திருமாவளவனை வேறாகவும் கூறுவோரும் உளர்.

ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழ்ச் சுவையை அறிவிக்கும் பொருட்டுக் கபிலரால் பாடப் பெற்றது குறிஞ்சிப் பாட்டு.

முல்லைப் பாட்டிற்குப் பாட்டுடைத் தலைவன் பாண்டியன் நெடுஞ்செழியன்.

சிறு பாணாற்றுப் படை, ஓய்மானாட்டு நல்லியக் கோடனைக் குறித்துப் பாடுகிறது.

பெரும் பாணாற்றுப் படை, தொண்டைமான் இளந்திரையனைக் குறித்துப் பாடுகிறது.

மலைபடுகடாம், பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்துவேள் நன்னன்சேய் நன்னனைக் குறித்துப் பாடுகிறது.

பத்துப் பாட்டில் வரும் பாட்டுகளின் அடியளவு கீழ் எல்லை 103 அடிகளாகவும், மேல் எல்லை 782 அடிகளாகவும் உள்ளன. இந்தப் பத்துப் பாட்டுக்களிலும் உள்ளவை மொத்தம் 3552 அடிகள் ஆகும்.

முல்லைப் பாட்டு, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப் பாலை ஆகிய மூன்றும் அகப் பொருளைக் கூறுவன. திருமுருகாற்றுப் படை, பொருநர் ஆற்றுப் படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, மதுரைக் காஞ்சி, மலைபடுகடாம் என்பவை புறப் பொருள் பற்றியவை.

மதுரைக் காஞ்சி தவிர மற்றவை ஆற்றுப் படை நூல்களாகும். மலைபடுகடாம் என்பதனைக் கூத்தர் ஆற்றுப்படை எனவும் கூறுவர். திருமுருகாற்றுப் படைக்குப் புலவர் ஆற்றுப்படை என்ற பெயரும் உண்டு.

நெடுநல் வாடையும் அகப்பொருள் பற்றியதே; ஆயினும் இப்பாட்டில், பாண்டியருடைய அடையாளப் பூ வாகிய வேம்பு குறிக்கப்பட்டிருப்பதால், இது அகப் பொருள் பாட்டு ஆகாது என்று உரையாசிரியர் நச்சினார்க்கினியர் கூறியிருக்கிறார்.

## ஆற்றுப் படை

ஆறு என்றால் வழி என்று பொருள். ஆற்றுப் படுத்துதல் ஆற்றுப் படை; வழிப்படுத்துதல் எனும் பொருள்படும்.

கலைஞன் ஒருவன், வள்ளல் ஒருவனிடத்திற்குச் சென்று தன் கலையாற்றல் காட்டிப் பொருள் பெற்று திரும்புவான்; வேறு ஒரு கலைஞன் தன் கலையறிவு கண்டு பொருள் தந்து காப்பவரைக் காணாது கலங்கிக் கிடப்பான். இவர்கள் இருவரும் சந்திக்க நேரும்போது, பொருள் பெற்றுத் திரும்புக் கலைஞன், அதுவின்றித் தவிக்கும் கலைஞனுக்குத் திறமறிந்து வழங்கும் வள்ளலைக் குறிப்பிட்டு வழி கூறியனுப்புவான்.

"யான் இந்த வழியாகச் சென்று இத்தகைய வள்ளலைக் கண்டு, அவனிடத்தில் இன்ன இன்ன பரிசுகளை எல்லாம் பெற்றேன். நீயும் அவனை நாடிச் சென்றால் நிறையப் பரிசுகள் பெறுவாய், என்று கூறி அவனை ஊக்கி அனுப்புவான். இதுவே ஆற்றுப்படையாகும்.

ஆற்றுப்படுத்தப் படுவோர் கூத்தர், பாணர், பொருநர், விறலியர், புலவர் முதலியோராக உள்ளனர். ஆற்றுப் படுத்தும் போது பாணர் பாணரையும், கூத்தர் கூத்தரையும் அதுபோலவே பிறரும் ஆற்றுப் படுத்துவதாக அமைப்பது மரபு.

## திருமுருகு ஆற்றுப் படை

இது 317 அடிகளைக் கொண்டது. திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைக் கண் குளிரக் கண்டு, அவன் இன்னருளைப் பெற்றுத் திரும்பும் பக்தன் ஒருவன், தன் எதிரில் வந்த வேறு ஓர் அடியவனை

அப்பெருமானிடத்து ஆற்றுப் படுத்தியதாக இயற்றப் பெற்றது இந்நூல்.

மற்ற ஆற்றுப் படைகளைப் போல் இம்மை வாழ் விற்கு உரிய பொருள் பற்றி அல்லாமல், மறுமை வாழ் விற்கு உரிய பேரின்பப் பொருள் பற்றியதாய் அமைந் துள்ளது. இது பத்துப் பாட்டு நூலுக்கு முதல் பாட்டாக அமைந்தது. இது கடவுள் வாழ்த்தாகவும் விளங்கும் பெருமையுடையது.

ஆற்றுப் படுத்தப்படும் அடியான் காணத் தகுந்த இடங்களாகத் திருப்பரங்குன்றம், திருச்சீரலை வாய் (திருச்செந்தூர்), திரு ஆவின் குடி (பழநி மலையின் அடிவாரத்தில் உள்ளது), திருவேரகம் (கும்பகோணத்திற்கு மேற்கில் உள்ள சுவாமி மலை), குன்றுதோறாடல், பழமுதிர்ச்சோலை (மதுரைக்கு அண்மையில் உள்ள அழகர் கோயில்) என ஆறு இடங்கள் இதில் குறிக்கப் பெறு கின்றன. இவற்றைப் படை வீடுகள் என்றும் கூறுவர். குன்று தோறாடல் என்பது எல்லா மலைகளிலும் முருகப் பெருமான் வீற்றிருத்தலைக் குறிக்கும்.

படை வீடு என்பது படைகள் தங்கும் இடம் என்ற பொருளைத் தரும். பகைவர்களாலும், பிற சமயத்தவர் களாலும் கோயிலுக்கு நேரக் கூடிய இன்னல்களைத் தவிர்ப்பதற்காக அக்காலத்து மன்னர்கள் கோயில்களில் படைகளை நிறுத்தியிருந்தனர் என்று கருதுவதற்கும் இடமிருக்கிறது. சிறந்த செல்வங்களைச் சேர்த்து வைக் கும் கருவூலங்களாகக் கோயில்கள் விளங்கியமையால், அக்கோயில்களைப் படை வீரர்கள் காவல் புரிய நேர்ந்து படை வீடுகள் என்னும் பெயர் பெற்றிருக்கலாம் என்றும் அறிஞர்கள் கூறுகின்றனர்.

## திருப்பரங்குன்றம்

உலகம் இன்புறுமாறு, கடலிலே சூரியன் தோன்றுவதைப் போல, மயில் ஊர்தியின் மேல் முருகன் தோன்றும் இனிய காட்சியையும். தெய்வ மகளிர் முருகனை ஆடிப்பாடும் சிறப்பினையும் இங்குக் காணலாம்.

வண்டுகள், சேறு நிறைந்த வயல்களுக்கெல்லாம் சென்று, தாமரை மலர்களில் தேன் உண்ணப் புகுந்து, சிறைப்பட்டு, பொழுது புலருங்கால் கதிரவன் தோன்ற, தாமரை மலர்கள் மீண்டும் மலர, சிறைப்பட்டிருந்த வண்டுகள் வெளிப்பட்டு, வைகறைப் போதில் மலரும் நெய்தல் மலர்களை நெருங்கித் தேனையுண்டு, பின் சுனைகளில் மலரும் மலர்களில் தங்கி இன்னிசை பாடும்.

திருப்பரங்குன்றத்தில் காணப்படும் இந்த இனிய இயற்கைக் காட்சியின் வாயிலாக நமக்கு நக்கீரனார் தரும் உயர்ந்த உட்கருத்து இது.

உலகமாகிய சேற்றில் இன்பமாகிய தாமரை மலர அதன்கண் அவா மிகுதியால் ஆன்மாக்கள் சென்று சிறைப்பட்டுப் பின் அவனருளால் வெளிப்பட்டு மகிழ்ந்திருக்கும் என்ற கருத்தை நக்கீரனார் எடுத்தியம்புகிறார்.

## திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)

நெற்றிப் பட்டத்தோடு பொன்னரி மாலை கிடந்து அசையவும், மணிகள் மாறி மாறி ஒலிக்கவும், ஆண் யானையின் மீது, முடி தரித்து அழகுடன் விளங்கும் ஆறு அழகிய முகங்களுடன் முருகன் இங்கே காட்சி தருகிறான்.

ஆறு முகங்களும் ஆறு தொழிலையுடையன. ஒரு முகம்—ஆணவ மலமாகிய உலகிருளைப் போக்கும்; ஒரு முகம்—அன்பர்தம் வாழ்த்துக்களை ஏற்று, இன்புற்று அவர்களுக்கு வரமளிக்கும்.

ஒரு முகம்—மெய்யறிவுடைய அறிஞர் செய்யும் (அந்தணர்) வேள்விகளைக் காக்கும்.

ஒரு முகம்—உயர் பொருளை தம் அன்பர்களுக்கு உணர்த்திச் சந்திரன் போல எல்லாத் திசைகளிலும் இன்னொளி பரப்பும்.

ஒரு முகம் — வேற்படை கொண்டு அசுரர் முதலியோரை வென்று, மறக்கள வேள்வி செய்யும்.

ஒரு முகம்—குறமகள் வள்ளியுடன் குலவி மகிழும்.

ஆறு முகங்களுக்கும் ஏற்பவே பன்னிரு திருக்கரங்களும் தொழில் புரிகின்றன. வீடுபேறு அடையும் துறவிகட்கு ஒரு கை உயர்ந்தது. அதற்கு இணையான மறுகரம் இடுப்பிலே வைக்கப்பட்டது. செம்மை நிற ஆடை கிடந்த தொடையின் மீது ஒரு கை இருந்தது; மறு கை அங்குசம் செலுத்தியது; யானையின் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் பரிசை எனும் கயிற்றை ஒரு கையும், வேற்படையை மறு கையும் பற்றியிருந்தன. ஒரு கை முனிவர்களுக்குத் தத்துவங்களை உணர்த்தும் போது மார்போடு விளங்கியது; மறு கை மார்பின் மாலையோடு சேர்ந்து எழில் சேர்த்தது. ஒரு கை களவேள்விக்கு முத்திரை கொடுத்தது; மறு கை இனிய ஓசை கொடுக்கும் மணிகளை ஒலித்தது; ஒரு கை வான் அரமகளிர்க்கு மண மாலை சூட்டியது.

இந்நிலையில் தேவர்கள் துந்துபி முழங்கி கண்டு களிக்க, வான் வழிசென்று திருச்சீரலை வாயில் கொள்பவன் முருகன் எனக் கூறப்படுகிறது.

## திருஆவிநன் குடி

படைப்புத் தொழில் வல்லான் பிரமனை, முருகன் சிறைப்படுத்தி வைத்திருந்த இடம். பிரமனை விடுதலை செய்வதன் பொருட்டு, திருமால், உருத்திரன்,

இந்திரன், முதலானோர் இத்திருவாவிநன் குடிக்குச் சென்றனராம். அவர்கள் சென்ற கோலம் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது.

தவத்தால் மெலிந்தவரும், மரவுரி தரித்துக் கரிய மானின் தோலைப் போர்த்தவருமான முனிவர்கள் முன்னே சென்றனர்; புகையினும் மென்மையான ஆடை உடுத்திய யாழ் மீட்டும் கந்தருவரும், மாந்தளிர் மேனி கொண்ட கந்தருவ மகளிரும் பின்னே சென்றனர்; திருமால், உருத்திரன், இந்திரன் முதலானோர் இடையே சென்றனர்; முப்பத்து முக்கோடி தேவர்களும், பதினென் கணங்களும் ஒருங்கே திரண்டு விண் நட்சத்திரங்களெனப் பிரகாசித்து காற்றென வேகமாக இடியென முழக்கத் தோடு கடைசியில் பின் தொடர்ந்து சென்றனர். அனைவரும் முருகனிடம் வேண்டி பிரமனை விடுவிக்கத் திரு ஆவிநன்குடி சென்றதான சிறப்பு அதற்கு உண்டு.

## திருவேரகம்

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்டுவித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறு தொழிலைக் கொண்டு வாழும் இயல்பினராகிய அந்தணர் 48 ஆண்டுகள் பிரம்மச்சரியம் காத்து, ஆகவநீயம், தக்கிணாக் கினி, காருக பத்தியம் எனும் முத்தீயை வளர்த்து, ஆறு எழுத்து மந்திரத்தை ஓதி, மலர்த் தூவி வழிபட இங்கே முருகன் மனமுவந்து கோயில் கொண்டுள்ளான் என்பர்.

## குன்றுதோறாடல்

ஆறு வீடுகளுள் குன்று தோறாடல் என்பது, எல்லா மலைகளிலும் முருகப் பெருமான் கோயில் கொண்டுள்ளான் என்பதைக் குறிக்கிறது. முருகப் பெருமான் குறிஞ்சி நிலத் தெய்வமாவான். எனவே குறிஞ்சி நிலத்து

மலைகள் அனைத்தும் ஒரு படை வீடாகக் கொள்ளப் பட்டுள்ளன.

குறிஞ்சி நில மக்களான குறமகளிர், தம்மைத் தழை களாலும், மலர்களாலும் ஒப்பனை செய்து கொண்டு குரவைக் கூத்தாட, செய்ய மேனியும், சிவந்த ஆடையும், பல்வகைக் கோலமும் உடையவனாய் பிணைமானைப் போல அழகுடைய மகளிரைத் தழுவிக் கொண்டு சென்று விளையாடும் இயல்பினைக் கொண்டவன் முருகன்என்பர்.

## பழமுதிர்ச் சோலை

இப்பகுதியில் முருகப் பெருமான் அமர்ந்திருக்கும் பலவகை இடங்களையும், அவனை வழிபடும் முறைகளை யும் அவன் அருள் வழங்கும் தன்மையினையும், வெறி யாட்டுகளைப் பற்றிய செய்திகளையும், பழமுதிர்சோலை மலையின் அருவி வளத்தையும் அறிய முடிகிறது.

வெண் துகிற் கொடிகளைப் போல அசைந்து அகிலைச் சுமந்து, சந்தன மரத்தைச் சாய்த்து, மூங்கிலை வேரோடு பறித்து, தேனிறாலைச் சிதைத்து, ஆகினிப் பலாச்சுளை தன்னிடத்தே கலக்க, மலையிலுள்ள சுரபுன்னை மலர்கள் உதிர, கருங் குரங்குகள் நடுங்க பெண் யானை குளிரும்படி அருவியானது ஓடிக் கொண்டிருக்கும் !

அந்த அருவி, முத்துக்கள் விளைந்த யானைத் தந்தங் களையும், பொன்மணி முதலானவற்றையும் புரட்டி வரும் வாழையின் அடிமரம் ஒடிய, தென்னையின் இளநீர்க் குலை உதிர, அவற்றைத் தாக்கி, மிளகின் கரிய கொடிகள் சாய, மயில்களும், கோழிகளும் பயந்து ஓட, ஆண் பன்றி களும், கரடிகளும் மலைக் குகைகளுக்குச் சென்று பதுங்க, காட்டு எருதுகள் முழங்க, மலையின் உச்சியிலிருந்து ஓசையுடன் விழும் அருவியினையும், பழங்கள் முற்றின

சோலைகளைக் கொண்டதுமான மலையினையும் கொண்டவன் முருகன்.

அருவி முருகனின் அருள் வெள்ளத்தையும், அருவியில் படு பொருள்கள் முருகன் அருள் வெள்ளத்தால் கிடைக்கப், பெறும் நற்பேறுகளையும் குறிக்கின்றன என்பர்.

## பொருநர் ஆற்றுப் படை

பொருநர் எனப்படுபவர் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் எனப் பலவகையினர் ஆவர்.

சோழன் கரிகாற் பெருவளத்தானைக் குறித்து, முடத்தாமக் கண்ணியாரால் பாடப் பெற்றது, பொருநர் ஆற்றுப்படை. முடத்தாமக் கண்ணியாரைப் பெண்பாற் புலவர் என்றும் கூறுவர்.

சோழன் வெண்ணிப் பறந்தலையில் பெற்ற வெற்றியைச் சிறப்பித்துக் கூறும் வகையில், அவன் கொடைச் சிறப்பையும் பல்வேறு பண்புகளையும் அழகாகப் பாடும் 248 அடிகளைக் கொண்டது இப்பாடல்!

பொருநன் ஒருவன், சங்க காலச் சோழருள் தலை சிறந்தவனாக விளங்கிய கரிகால்வளவனிடம் சென்று, பரிசில் பெற்றுத் திரும்பி வரும் வழியில், வறுமையுற்று இருந்த மற்றொரு பொருநனைச் சந்தித்து, அவனை அச்சோழனிடம் ஆற்றுப் படுத்தியதாக அமைந்தது இப்பாடல்.

பொருநர் என்பவர் மற்றொருவர் போல வேடங் கொண்டு நடிப்பவர். இப்பாட்டில் காணப்படும் பொருநன் தடாரி என்னும் பறை கொட்டிப் போர்க்களம் பாடுவோனாக அமைந்துள்ளான்.

வெண்ணி என்னும் ஊர், தஞ்சை மாவட்டத்தில், நீடாமங்கலத்திற்கு அருகில் இப்போது கோயில் வெண்ணி எனும் பெயரால் வழங்கப்பட்டு வருகிறது.

இந்நூலில் கரிகாலனுடைய பிறப்பு, அரச உரிமை, வீரம், வெண்ணிப் போர்க்களத்தில் அவன் சேரனையும் பாண்டியனையும் வென்ற வரலாறு, அவன் கலைஞர் களைப் பேணும் முறை, சேரநாட்டின் வளம், காவிரி யாற்றின் பெருமை முதலியவை கூறப்படுகின்றன.

பரிசில் பெற வந்த பொருநனுடன் கரிகாலன் நண்பனைப் போல் பழகினான்; பொருநனுடன் சென்று பாடினிக்கும் பரிசு வழங்கினான்; தன்னை இளைஞன் என்று இகழ்ந்த முதியவர்கள் நம்பிக்கைப் பெற, நரை முடித்து முதியவனாக வந்து வழக்குத் தீர்த்தான். என்பனவும், சோழ நாட்டில் ஒரு வேலி நிலத்தில் ஆயிரம் கலம் நெல் விளைந்தது என்பனவும், இசைக் கலைஞர்கள் தன்னிடம் விடை பெற்றுச் செல்லும்போது அரசன் ஏழடி பின் சென்று விடையளித்தல் மரபு. ஏழடி பின் செல்லுதல் ஏழிசைக்கு வழிபாடு செய்வதற்கு அறிகுறி என்றும் இந்நூலால் அறியப்படுகின்றன.

## சிறு பாணாற்றுப் படை

ஓய் மானாடு என்பது, திண்டிவனம் புகை வண்டி நிலையத்திலிருந்து கிழக்கே உள்ள கடற்கரையை அடுத்துப் பரவியிருந்த ஒரு பெரும் நிலப் பரப்பு என்பர்.

இடைக்கழி நாடு என்பது, ஓய்மானாட்டினை அடுத்துக் கடலினைச் சார்ந்தது. இடையிடையே உப்பங் கழிகள் அமைந்துள்ள பகுதியாகும்; இது இடக்க நாடு எனத் திரிந்து வழங்கப் பெற்று வருகிறது.

சிறு பாணாற்றுப் படை, ஓய் மானாட்டு நல்லியக் கோடனைக் குறித்து இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத் தனாரால் பாடப் பெற்றதாகும்.

பாணர்கள் — யாழ்ப்பாணர், இசைப்பாணர், மண்டைப் பாணர் எனப் பல வகையினர். யாழ் இசைக்கும் பாணர், யாழ்ப் பாணர் எனப் பட்டனர் சீறியாழ் இசைக்கும் பாணனை ஆற்றுப் படுத்தியது. சிறுபாணாற்றுப்படை எனப்பட்டது. இப்பாட்டு 269 அடிகளைக் கொண்டது.

நல்லியக் கோடன் ஒவியர் குடியைச் சேர்ந்தவன். அவன் நாட்டில், கிடங்கில், எயிற்பட்டினம், வேலூர், ஆமூர் ஆகிய பேரூர்கள் இருந்தன.

இப்பாட்டில் சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூவேந்தர்களின் சிறப்புத் தன்மைகளும், அவர்களின் தலை நகரங்களான வஞ்சி, உறையூர், மதுரை என்னும் நகரங்களின் சிறப்புத் தன்மைகளும் குறிக்கப் பெற்று உள்ளன.

சேர மன்னன் இமயத்தில் விற்கொடி நாட்டிய வீரச் செய்தியும், பாண்டிய நாட்டின் முத்துச் செல்வத்தின் சிறப்பும், சோழ மன்னன் தூங்கெயில் (தொங்கும் மதில்) எறிந்த வெற்றிச் செய்தியும் இப்பாடலில் இயம்பப் பெற்றுள்ளன.

மயிலுக்குப் போர்வை வழங்கிய பேகன், முல்லைக்குத் தேர் ஈந்த பாரி, இரவலர்க்கு நாடும் குதிரையும் நல்கிய காரி, கிடைத்தற்கரியதான ஆடை தனக்குக் கிடைத் திருந்தும் அதனைச் சிவபெருமானுக்குக் கொடுத்த ஆய், ஔவையார்க்கு நெல்லிக்கனி அளித்த அதியமான், இல்லறத் தார்க்கு பெரும் பொருள் கொடுத்த நள்ளி, கூத்தார்க்கு நாடு கொடுத்த ஓரி ஆகிய கடையேழு வள்ளல்களின் கொடைச் சிறப்புகளும் இப்பாடலில் கூறப்பட்டுள்ளன. இவ்வள்ளல்கள் எழுவரின் சிறப்புகளும் ஒன்றாய்க் கொண்டிருந்தவன் நல்லியக் கோடன் என்று புலவர்கள் அவனைப் போற்றுகின்றனர்.

## பெரும் பாணாற்றுப் படை

தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் இப்பாட்டில் போற்றியிருக்கிறார். இது 500 அடிகளைக் கொண்டது. பெரிய யாழினைத் தம் இடப் பக்கத்தில் வைத்து இசைப்பவர் பெரும் பாணர் எனப்பட்டனர். இப்பாட்டைப் பாணாறு என்றும் கூறுவர்.

பாட்டுடைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையனும் சிறந்த புலவன். இளந்திரையம் என்னும் நூலை இவன் எழுதினான் என்பர். இவனது தலை நகரம் காஞ்சிபுரம். காஞ்சிபுரத்தில் திருவெஃகா என்னும் இடத்தில் திருமால் பள்ளிக் கொண்டிருக்கும் செய்தி இப்பாட்டில் தெரிய வருகிறது. பாரதக் கதையின் குறிப்பும் இப்பாடலில் இடம் பெற்றுள்ளது.

பண்டைத் தமிழ் மக்களின் வாழ்வியல் முறைகளை இப்பாட்டிலிருந்து நன்கு அறிந்து கொள்ள முடிகிறது. வெளிநாட்டிலிருந்து கடற்கரைப் பட்டினத்தில் வந்து இறங்கிய குதிரைகளைப் பற்றிய செய்திகளும், கடலில் செல்லும் மரக்கலங்கள், கரை உள்ள இடத்தை அறிந்து வருவதற்கு உதவி செய்யும் கலங்கரை விளக்கம் பழங் காலத்தில் இருந்தது என்ற உண்மையும், வணிகரிடம் சுங்கம் பெறும் வழக்கம் அந்நாளிலும் உண்டு என்பதும் இப்பாடலிலிருந்து அறியப்படும் முக்கிய செய்திகளாகும்.

## முல்லைப் பாட்டு

தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் காவிரிப்பூம் பட்டினத்துப் பொன் வணிகனார் மகனார் நப்பூதனார் இப்பாட்டில் பாடியிருக்கிறார். இப்பாட்டினை முல்லை என்றும் குறிப்பிடுவர்.

தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றபின், அவன் வரும் வரையில் தலைவி பிரிவுத் துயரை ஆற்றியிருத்தல் முல்லை எனப்படும்.

தலைவியைப் பிரிந்து போருக்குச் சென்ற தலைவன், போர் முடித்துத் திரும்பி வந்ததனைக் கண்டு தோழி முதலானோர், தம்முள் கூறிய முறையில் இப்பாட்டு அமைக்கப் பெற்றுள்ளது. தலைவனைப் பிரிந்த தலைவி, தலைவன் வரும் நாளை எதிர் நோக்கி விரிச்சி எனும் நற்சொல் கேட்கும் பழக்கம் அந்நாளில் இருந்தது என்பது இப்பாட்டால் தெரிய வருகிறது.

விரிச்சி என்பது, ஒருவர் தாம் நினைக்கும் செயலின் முடிவினை அறிய வேண்டி நெல்லும் மலரும் தூவி தெய்வத்தை வழிபட்டு, ஓரிடத்தில் நின்று, பிறர் தமக்குள் பேசிக் கொள்ளும் நற்சொல்லைக் கேட்பதாகும். பிறர் தமக்குள் பேசிக் கொள்ளுகின்ற போது பிறக்கிற சொல் நல்ல சொல்லாக இருந்தால், தம் எண்ணம் கைகூடும் என்றும், தீய சொல்லாக இருந்தால், தம் எண்ணம் நிறைவேறாது என்றும் முடிவு செய்து கொள்வர்.

தமிழ் நாட்டுப் போர்ப் படையில் பிற நாட்டு வீரர் களும் சேர்ந்திருந்தனர்; பாசறையில் வீர மகளிரும் பணி புரிந்து வந்தார்கள். நீரைக் கொண்டு காலத்தை அளவிடும் நாழிகை வட்டிலைக் கொண்டு நாழிகை கணக்கர்கள் அவ்வப்போது நாழிகையின் கணக்கைக் கூறி வந்தார்கள். பாசறையில் நடக்கும் செய்திகளைப் பிறர் தெரிந்து கொள்ளாமல் இருக்க வேண்டும் என்ற விழிப் புணர்ச்சியோடு, ஊமையராக உள்ள மிலேச்சர்களைக் காவலாளர்களாக வைத்திருந்தார்கள் என்பன போன்ற சுவையான செய்திகளை முல்லைப்பாட்டு நமக்கு எல்லை யின்றித் தருகிறது.

தலைவி ஏழடுக்கு மாளிகையில் இருந்தாள் என இப் பாட்டிலிருந்து நாம் அறிய முடிவதால், பல நிலை

மாடங்கள் அக்காலத்திலேயே தமிழகத்தில் இருந்திருக்கின்றன என்று தெரிகிறது. வாளைச் செருகிய கச்சினை அணிந்த வீர மங்கையர், பாசறையிலே விளக்குகள் அணைந்து போகாதபடிக் காவல் புரிந்தனர் என்று தெரிவதால் போர்ப் படையிலே ஆண்களோடு பெண்களும் சரிநிகராக தீரம் காட்டினர் என்று தெரிகிறது.

தலைப்பாகை அணிந்து, சட்டையிட்டுள்ள ஒழுக்கம் மிக்க மெய்க்காப்பாளர், காவலாகச் சுற்றித் திரிந்தார்கள் என்ற குறிப்பு காணப்படுவதால் அக்கால மக்களின் நாகரிக நிலை நமக்குப் புரிகிறது! சட்டைக்கு மெய்ப்பை என்று பெயர் என்றும் தெரிகிறது. முல்லைப் பாட்டே பத்துப் பாட்டில குறைந்த அடிகளைக் கொண்ட பாட்டு ஆகும். இது 103 அடிகளைக் கொண்டுளளது.

## மதுரைக் காஞ்சி

தலையாலங்கானத்து செறுவென்ற நெடுஞ்செழியனுக்கு வீடு பேறு நிமித்தம் பல்வேறு நிலையாமையைச் சொல்வதற்காக மாங்குடி மருதனார் பாடிய பாடலே மதுரைக் காஞ்சி. மருதனுக்கு மாங்குடிக் கிழார், மதுரைக் காஞ்சிப் புலவர் என்ற வேறு பெயர்களும் உண்டு.

பத்துப் பாட்டில் மிகுந்த அடிகளைக் கொண்டது மதுரைக் காஞ்சியே. இது 782 அடிகளைக் கொண்டுள்ளது சங்க காலத் தனிச் செய்யுட்களில் அளவில மிகப் பெரியதும் இதுவே.

பாண்டியன் போர் வெற்றியில் மிக்க விருப்பம் உடையவனாக வாழ்ந்தான். இவனும் தமிழில் சிறந்த புலமையுடையவனாகத் திகழ்ந்தான் என்பதற்குச் சான்றாக, புறநானூற்றில் இவன் பாடல் ஒன்று காணப் படுகிறது.

பாண்டியன் நெடுஞ்செழியனின் முன்னோர்களான முந்நீர் வடிம்பலம்ப நின்ற பாண்டியன், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, நிலந்தரு திருவிற் பாண்டியன் என்பவர்களைப் பற்றிய குறிப்புக்கள் மதுரைக் காஞ்சி யில் இடம் பெற்று இருக்கின்றன. இப்பாண்டியனின் பேரவையில்தான் தொல்காப்பியம் அரங்கேற்றப் பெற்றது என்பர்.

பாண்டியன், பகைவரை வென்று கொணர்ந்த பொருள்களைத் தனக்கென வைத்துக் கொள்ளாமல், நண்பர்களுக்கும் புலவர்களுக்கும் ஈந்தான் என்பர்.

மதுரை நகரில் இருந்து அகன்ற தெருக்கள் ஆறுகளைப் போல் விளங்கின. நாளங்காடி (பகல் நேரக் கடை) அல்லங்காடி (மாலை நேரக் கடைகள்) என இருவகைக் கடைத் தெருக்கள் மதுரையில் இருந்தன. காலைக் கடைத் தெருவில் விழா எடுப்பர், வெற்றியைப் புலப்படுத்துவார் முதலாயினோர் கட்டும் பலவகைக் கொடிகள் காணப் படும். அரசனை வாழ்த்துகின்ற சூதர் எனப்படுவார், அரசனை உறக்கத்திலிருந்துஎழுப்புவதற்குப் பள்ளி எழுச்சி பாடுவர். பல்வேறு கோயில்கள், பௌத்தப் பள்ளிகள், சமணப் பள்ளிகள் ஆகிய பல சமய வழிபாட்டு நிலையங் களும் மதுரையில் இருந்தன. மக்கள் திருப்பரங்குன்ற விழா, திருவோண நாள் விழா, ஓண விழா (இப்போது கேரளாவில் மட்டும் நடைபெறுகிறது), நன்னன் பிறந்த நாள் விழா முதலிய பல விழாக்களைக் கொண்டாடி வந்தனர். வறியவர்களுக்கு உணவு வழங்க, அறக் கூழ்ச் சாலைகள் ஏற்படுத்தப் பட்டிருந்தன என்பன போன்ற செய்திகளை மதுரைக் காஞ்சி வாயிலாக நாம் அறிய முடிகிறது.

எலலாக் கலைகளையும் உணர்ந்த பேரறிஞர்கள் சேரமன்னர் பேரவையிலே, ஒன்றுகூடி கலை ஆராய்ச்சி

செய்தனர் என்ற குறிப்பும் மதுரைக் காஞ்சியில் காணப் படுகிறது.

மதுரையில் வாழ்ந்த மக்களின் பொழுதுபோக்கு முறைகளும் குறிக்கப் பெற்றுள்ளன. மதுரை நகரத்தைப் பற்றிய ஒரு வரலாற்று நூல் என்று கூறத்தகுந்த நிலையில், 'கூடற்றமிழ்' என்ற பெயராலும் இது அழைக்கப்படு கின்றது.

இதனை இயற்றிய மாங்குடி மருதனாரே, தமிழ் இலக்கியத்தில் அரசவைப் புலவர் என்று முதன்முதலில் குறிப்பிடப் பெற்றவர் என்ற பெருமையும் அடைகிறார்.

## நெடுநல் வாடை

பத்துப் பாட்டுள் ஏழாவதாகத் திகழும் நெடுநல்வாடை, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியனின் பேராற்றல் மிக்க போர் ஆற்றலினைச் சிறப்பித்து பாடப் பெற்ற பாட்டாகும். இத்னை இயற்றி யவர் 'நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே' என்று இறைவனையும் எதிர்த்து வாதிட்ட அஞ்சா நெஞ்சினர் நக்கீரனார் ஆவார். மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என இவர் அழைக்கப் பெறுகிறார்.

நெடுநல் வாடை என்பது நெடிதாகிய நல்ல வாடை என்று பொருள் படும்.

தலைவனைப் பிரிந்து வாழும் தலைவிக்கு வாடைக் காலத்தின் ஒரு பொழுது ஓர் ஊழிக் காலம் போல நெடிதாய்த் தோன்றும். போரில் விருப்பங் கொண்டு பாசறையில் தங்கியிருக்கும் தலைவனுக்கு, வாடைக்காலம் வெற்றி பெறுவதற்கு ஏற்ற காலமாக இருப்பதால் அது அவனுக்கு நல்வாடையாகத் தோன்றுகிறது. வடக்கே

யிருந்து வீசும் காற்று வாடைக்காற்று. இவ்வாறு தலைவிக்கு நெடியதாகவும், தலைவனுக்கு நல்லதாகவும் தோன்றும் வாடை நெடுநல் வாடை ஆயிற்று.

பகைவன் மேல் போருக்குச் சென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்து வருந்தும் தலைவிக்கு, அவள் வருத்தம் நீங்குமாறு, அரசன் பகைவரை வென்று, விரைவில் திரும்புவதற்குக் கொற்றவையைத் துதிக்கும் ஒருத்தி கூறியதாக அமைந்தது. நெடுநல்வாடை 188 அடிகளைக் கொண்டது.

இப்பாட்டில் குளிர் காலத்தில் மக்களும் மாக்களும் குளிரால் வருந்தியிருக்கும் நிலையும், தலைவி தங்கியிருக்கும் அரண்மனையைப் பற்றிய செய்திகளும், தலைவியின் பிரிவுத் துன்பமும், தலைவனின் பாசறை நிகழ்ச்சிகளும், பிறவும் கூறப்பட்டுள்ளன.

பாசறையில் தங்கிய வேந்தனுக்குப் படைத் தலைவன் போரில் புண்பட்ட வீரர்களைக் காட்டுகிறான்; நள்ளிரவிலும் துயிலாமல், பெரு மழைக்கும் ஓயாமல், அப் புண்பட்ட வீரர்களைச் சந்தித்து அரசன் ஆறுதல் கூறுறான்; பகலா இரவா எனத் தெரியாதவாறு வானம் இருண்டிருக்கும் நிலையில், பிச்சி மலர்கள் விரிதலைக் கண்டு, அது அந்திப் பொழுதே என மக்கள் அறிந்தார்கள். அரசியின் அழகு மிகுந்த அரண்மனையில் சோனகர் செய்த சிறந்த வேலைப்பாடு நிறைந்த பாவை விளக்கு இருந்தது. கட்டிலின் மேற்கூரையில் பலவகை வண்ண ஓவியங்கள் எழுதப் பெற்றிருந்தன; என்பன போன்ற செய்திகளை நெடுநல் வாடை நிறையத் தருகிறது.

போரையும் காதலையும் பற்றியதாக அமைந்திருக்கும் நெல்நல் வாடை, காடுகள் அடர்ந்து மழை வளம் மிகுந்திருந்த பண்டை நாள் தமிழகத்தின் காட்சியையும்,

அரசர்களின் அரண்மனையையும், அதன் உட்பகுதிகளையும், பாண்டியனுடைய வெற்றியையும், பாண்டிமாதேவியின் பண்புகளையும் சிறப்பாக விளக்கும் செந்தமிழ்க் கருவூலமாகும்.

## குறிஞ்சிப் பாட்டு

ஆரிய அரசன் பிரகதத்தன் என்பவனுக்குத் தமிழ்ச் சுவையை அறிவுறுத்துவதற்கு, குறிஞ்சித் திணை பாடுவதில் வல்லவரான கபிலர் இதனைப் பாடினார் என்பர். சங்க இலக்கியங்களில் உள்ள குறிஞ்சித் திணை பற்றிய பாட்டுக்களில் இக்குறிஞ்சிப் பாட்டே அடி அளவில் பெரியது எனவே இதனை ''பெருங்குறிஞ்சி'' எனவும் வழங்குவர். இது 261 அடிகளைக் கொண்டது.

தலைவனும் தலைவியும் தம்முள் எதிர்ப்பட்டுக் காதல் வாழ்க்கைக்கு உடன்படுதலைக் குறிஞ்சி ஒழுக்கம் என்பர். பிறர் அறியாமல் களவு முறையில் பழகி வரும் தலைவியின் காதலைத் தோழி, வளர்ப்புத் தாய்க்குக் கூறுவதாக அமைந்துள்ள பாட்டு இது.

தமிழ்ச் சுவையை அறிய விரும்பி, கபிலரின் இப் பாட்டால் அகப் பொருள் சுவையை அறியப் பெற்ற ஆரிய அரசன் பிரகதத்தன் பின்னர் தமிழில் நன்கு புலமை பெற்றுப் பாடியிருக்கும் ஒரு பாடல் குறுந்தொகையில் காணப்படுகிறது. தலைவி தன் தோழிகளோடு தினைப் புனம் காக்கச் சென்றாள் ; உச்சிப் பொழுதில் மலையருவியில் நீராடினாள் ; அப்போது அங்கு வந்த தலைவன் ஒருவனின் வேட்டை நாய்களைக் கண்டு அவள் மிகவும் அஞ்சினாள் ; தலைவன் அவள் அச்சத்தைப் போக்கினான் ; அவ்வேளை மதங்கொண்ட யானை ஒன்று தலைவி மீது பாய்ந்துவர, தலைவன் யானையிடமிருந்து அவளைக் காப்பாற்றினான். புது வெள்ளத்தில் அவள் விழுந்து தத்தளித்த போதும் தலைவன் அவளை நீர்ப்

பெருக்கினின்று அள்ளி எடுத்து அணைத்துக் கரை சேர்த்தான்; காதல் பிறக்கிறது. அன்று முதல் தலைவன் தலைவியைக் காண அன்றாடம் வந்து கொண்டிருந்தான். அவன் வரும் வழியில் நேரும் இடையூறுகளையும், மணம் செய்து கொள்வதற்குக் காலம் கடத்தலையும் எண்ணித் தலைவி வருந்தினாள். எனவே அவள் உடல் மெலிந்தது. வளர்ப்புத்தாய், அவள் மெலிவுக்குத் தெய்வந்தான், காரணம் என அஞ்சினாள். தலைவியின் தோழி, அவள் ஒருவன்பால் காதல் வயப்பட்டிருக்கும் உண்மையை வளர்ப்புத் தாய்க்கு அறிவித்துத் தன் கடமையைச் செய்தாள்.

இவ்வாறு களவுக் காலத்தில் நிகழும் பல செய்திகள் கதைபோலத் தொடராக இப்பாட்டில் கூறப்பட்டுள்ளன. குறிஞ்சி நில மக்களின் பழக்க வழக்கங்கள் இப்பாட்டில் கூறப்பட்டுள்ளன. 99 வகைப் பூக்கள் இப்பாட்டில் கூறப் பட்டுள்ளன. பெண்கள், பூக்களாலும், தளிர்களாலும் தம்மை அழகு செய்து கொள்வர் என்பதும் தெரிய வருகிறது.

'முத்து, மணி, பொன் முதலியவற்றால் செய்த உயர்ந்த அணிகலன் கெட்டுவிட்டாலும், அதனைத் திருத்தி அமைத்து முன்போலத் திருத்தி ஆக்கலாம். ஆனால் பண்பும் ஒழுக்கமும் குறைந்தால் முன்போலத் திருத்தி அமைக்க முனிவர்களாலும் ஆகாது'. என்பன போன்ற அறிவுரைகள் நிறைந்துள்ளது இப்பாட்டு.

'மக்கள் தத்தம் விருப்பத்துக்கேற்ப வழிபடும் எல்லாக் கடவுள்களின் உருவங்களும், உலகின் நாயகனான ஒரே கடவுளின் பல்வேறு வடிவங்களே' என்ற கருத்தில் 'வேறு பல் உருவிற் கடவுள்' என்ற தொடர் இப்பாட்டில் வருகிறது.

## பட்டினப் பாலை

பட்டினம் என்பது கடற்கரையில் உள்ள பேரூர்களுக்கெல்லாம் பொதுப் பெயர் ஆகும். எனினும் பட்டினம் என்று அடைமொழியின்றிக் கூறினால் அது காவிரிப்பூம் பட்டினம் (பூம்புகார்) என்ற நகரத்தையே குறிக்கும். காவிரிப்பூம் பட்டினத்தைச் சிறப்பித்துப் பாலைத் திணையில் அமைந்த பாட்டானமையால் இதனைப் பட்டினப் பாலை என்றனர். இது, 301 அடிகளையுடையது.

பாலை என்னும் சொல் பிரிவு என்னும் பொருள் கொண்டது. கரிகாற் சோழனைக் குறித்து கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியதே இப் பட்டினப் பாலை. இதைப் பாடினமைக்காகப் புலவருக்குச் சோழன் பதினாறு நூறாயிரம் பொன் பரிசளித்தான்.

சோழர் தலைநகரமாகிய காவிரிப்பூம் பட்டினத்தின் வரலாறு நூலாகப் பட்டினப்பாலை விளங்குகிறது. காவிரிப்பூம் பட்டினம் கடலால் கொள்ளப்பட்டமையால், அந்நகரம் இப்போது ஒரு சிற்றூராகக் காணப்படுகிறது.

கரிகாற் சோழன, இளமையில் சிறையிருந்து பகைவரை வென்று ஆட்சியைக் கைகொண்ட வெற்றிச் சிறப்பு இதில் கூறப்பட்டுள்ளது.

சோழ நாட்டில் காடாக இருந்த இடங்களை வெட்டி அழித்து நாடாக மாற்றிக் குடிகளை வாழச் செய்து, குளங்களை வெட்டி, பல்வேறு செல்வங்களையும் பெருக்கி, பெரிய நிலைகளை உடைய மாடங்கள் அமைத்து உறையூரை விரிவுறச் செய்து செங்கோல் நடாத்திய சிறப்பு இப்பாட்டால் தெரிகிறது.

காவிரிப்பூம் பட்டினத்தில் தெய்வங்களுக்கு நடைபெறும் திருவிழாக்கள் குறித்து கட்டப்பெற்ற கொடிகளும், விலைப் பண்டங்களை அறிவிப்பதற்குக் கடைகளில்

கட்டப்பட்ட கொடிகளும், பல நூல்களைக் கற்றுப் புலமையுற்றவர்கள், பிறரோடு வாது செய்யக் கருதிக் கட்டிய கொடிகளும் வேறு பல பெருங்கொடிகளும் பறந்து கொண்டிருந்தன என்பர்.

வணிகர்கள் இலாபத்தை வெளிப்படையாகச் சொல்லிப் பொருளை விற்றனர் ; வேற்று மொழி பேசும் பல நாட்டு மக்களும் காவிரிப்பூம் பட்டினத்து மக்களோடு கலந்து இன்புற்று வாழ்ந்தனர்; வாணிபப் பண்டங்களுக்கெல் லாம் சோழ அரசனுடைய புலி முத்திரையிட்டுப் பண்டங்களின் அளவுக்கு ஏற்பச் சுங்கம் வாங்கினார்கள்; கடல் வழி வந்த குதிரைகளும், தரைவழி வந்த மிளகுப் பொதிகளும், இமயத்திலிருந்து வந்த பொன்னும் மணி களும், பொதிகை மலையில் பிறந்த சந்தனமும் அகிலும், தென்கடல் முத்தும், கீழ்கடல் பவளமும், கங்கையாற்றுப் பொருள்களும், காவிரி வளங்களும் ஈழநாட்டு உணவுப் பண்டங்களும், காழகநாட்டு நுகர் பொருள்களும், சீனம் முதலிய நாடுகளிலிருந்து வந்த கற்பூரம், பனிநீர், குங்குமம் முதலான பொருள்களும் நிறைந்து கிடந்த தெருக்களைக் கொண்டு திகழ்ந்தது காவிரிப்பூம் பட்டினம்.

நெய்தல் நில மக்கள் சுறாமீனின் கொம்பை மணலில் நட்டு தெய்வத்தை வழிபட்டனர்.

பரதவர் முழுமதி நாட்களில் கடலில் மீன் பிடிக்கச் செல்லாமல், ஆடல் பாடல்களில் ஈடுபட்டு இன்பமாக இருந்தனர்; மக்கள் தீவினை நீங்குவதற்குக் கடலில் நீராடினர் ; கரும்பு ஆலைகள் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்தன. காவிரிப்பூம் பட்டினத்தில் சோம குண்டம், சூரிய குண்டம் என இரண்டு ஏரிகள் இருந்தன ; (திருவெண்காட்டில் தற்போது உள்ள சந்திர தீர்த்தமும், சூரிய தீர்த்தமுமே அவை என்பர்) என்பன போன்ற செய்திகள் பலவற்றைப் பட்டினப்பாலையில் காணலாம்.

## மலை படு கடாம்

இது, பல் குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்து வேள் நன்னன் சேய். நன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இரணிய முற்றத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனாரால் பாடப் பெற்றதாகும்.

இரணிய முட்ட நாடு என்பது மதுரை நகருக்கு வடகிழக்கே உள்ள ஆனை மலை, அழகர் கோயில் முதலான ஊர்களைத் தன்னகத்தே கொண்ட ஒரு பெரு நிலப்பரப்பாகும். நாட்டின் பெரும் பிரிவிற்குக் கோட்டம் என்று பெயர். பல் குன்றம் என்பது பல மலைகளைக் கொண்ட நாடு என்பதைக் குறிக்கும். நன்னனுடைய தலைநகரம் செங்கண் மா என்பதாகும். செங்கண்மா இப்போது செங்கம் என்ற பெயரோடு வட ஆற்காடு மாவட்டத்தில் திருவண்ணாமலைக்கு அருகில் உள்ளது.

நன்னனிடம் பரிசில் பெற்று வந்த கூத்தன் ஒருவன்; மற்றொரு கூத்தனைப் பரிசில் பெற அவனிடம் ஆற்றுப் படுத்தியதாக அமைந்துள்ள பாடல் இது. எனவே இதற்குக் கூத்தர் ஆற்றுப்படை என்ற வேறு பெயரும் உண்டு. தமிழில் உள்ள ஆசிரியப் பாவாலான பாக்களுள் அதிக அடிகளைக் கொண்ட பாடல் இதுவே. இது 583 அடிகளைக் கொண்டுள்ளது.

மலைபடு கடாம் என்பதற்கு மலையில் எழுந்த மதம் என்று பொருள். மலை என்பது யானையாக உருவகம் செய்யப்பட்டு யானையிடத்து உண்டாகின்ற மதம் என்ற பொருளைக் கொண்டுள்ளது.

மதம் பிடித்த யானை பேரொலி எழுப்பும். அவ்வொலி, நன்னனது நவிர மலையில் உண்டாகின்ற பலவகை முழக்கத்திற்கு உவமையாக இப்பாட்டில் சொல்லப் பட்டுள்ளது. நவிர மலை என்பது திருவண்ணாமலைக்கு வடமேற்கே திரிசூலகிரி, பர்வதமலை என்ற பெயரில் தற்

போது வழங்கப்பட்டு வருகிறது. நவிர மலை டல குன்று களைக் கொண்ட ஒரு மலை.

பல்வேறு வழிகள் ஒன்றுகூடும் இடங்களில், அவ்வழி கள் இன்ன இன்ன ஊருக்குச் செல்லுகின்றன என்னும் குறிப்பைக் கொண்ட கற்கள் நடப்பட்டிருந்தன; வழிச் செல்பவர்கள் தாம் சென்ற வழியைத் தம் பின்னே வருவோர்க்கு அறிவிப்பதற்காக, ஊகம் புல்லை முடிந்து இடும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர்; எருமையின் பாலைக் காய்ச்சி மூங்கில் குழாயின் உள்ளே ஊற்றித் தயிர் தோய வைக்கும் வழக்கம் இருந்தது. ஆட்டுத் தோலினால் செய்து வாரினால் தைக்கப்பட்ட படுக்கை இருந்தது என்பன போன்ற செய்திகள் மலைபடு கடாம் வாயிலாக நமக்குத் தெரிய வருகிறது.

எல்லரி, குழல், குறுந்தூம்பு, சிறுபறை, சீறியாழ், தட்டை, தண்ணுமை, துடி, தூம்பு, பதலை, பன்றிப் பாறை பாண்டில், பேரியாழ், முழவு முதலிய இசைக் கருவி கள் இருந்தன என்பதை இப்பாட்டிலிருந்து அறிய முடி கிறது.

# 6. பதினெ கணக்கு நூல்கள்

நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணை எழுபது, ஐந்திணை ஐம்பது, திணை மொழி ஐம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி, கைந்நிலை ஆகியவை பதினெண்கீழ்க் கணக்கு நூல்களாகும்.

## திருக்குறள்

பதினெண்கீழ்க் கணக்கு நூல்களிலேயே மிகச் சிறந்தது திருக்குறள் என்பது அனைவரும் அறிவர் மனித குலம் முழுமைக்குமான வாழ்க்கை வழி முறைகள் வகுத்துரைக்கப்பட்ட ஓர் அற்புதப் படைப்பு.

இந்நூலால் தமிழ் மொழிக்கும், தமிழ் மக்களுக்கும், தமிழ் நாட்டிற்கும் உலகப் புகழ் ஏற்பட்டுள்ளது என்பது உண்மை. திருக்குறள் என்பது அழகிய குறள் வெண்பாவினாலாகிய நூல் என்று பொருள்படும்.

அறத்துப் பால், பொருட் பால், காமத்துப் பால் என்ற மூன்று பிரிவுகளுடையது. அறத்துப் பால் 38 அதிகாரங்களையும், பொருட் பால் 75 அதிகாரங்களையும், காமத்துப் பால் 25 அதிகாரங்களையும், ஆக 133 அதிகாரங்

களாக பிரிக்கப்பட்டுள்ளது. ஓர் அதிகாரத்துக்குப் பத்துப் பாடல்களாக மொத்தம் 1330 பாடல்களையும் கொண்டது குறள்.

பொருட் பாலைப் பரிமேலழகர், அரசியல், அங்க வியல், ஒழிபியல் என மூன்றாகப் பிரித்தார்.

மணக்குடவரும் பரிப் பெருமாளும், அரசியல், அமைச்சியல், பொருளியல், நட்பியல், துன்பியல், குடியியல் என ஆறாகப் பிரித்தனர்.

போக்கியார், அரசியல், அமைச்சியல், அரணியியல், கூழியியல், படையியல், நட்பியல், குடியியல் என ஏழாகப் பிரித்தார் என்பதை அவர் தம் பாடலால் அறிகிறோம்.

**"அரசியல் ஐயைந்து, அமைச்சியல் ஈரைந்து,**
**உருவல் அரணிரண்டுஒன் றொன்கூழ்—இருவியல்**
**திண்படை, நட்புப் பதினேழ் குடிபதின் மூன்று**
**எண் பொருள் ஏழாம் இவை."**

என்பது போக்கியார் பாடல்.

**"ஆண்பால் ஏழ் ஆறிரண்டு பெண்பால் அடுத்து அன்பு**
**பூண்பால் இருபால்ஓர் ஆறாக— மாண்பாய**
**காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்**
**நாமத்தின் வள்ளுவனார் நன்கு."**

என்பது மோசிகீரனார் பாடல். ஆண்பாற் காமம் கூறுவன 7 அதிகாரங்களும், பெண்பாற் காமம் கூறுவன 12 அதிகாரங்களும், இருபாற் காமம் கூறுவன ஆறு அதிகாரங்களும் ஆகும்.

திருவள்ளுவர் வள்ளுவர் குலத்தைச் சேர்ந்தவர் என்றும், தாய், தந்தையர் ஆதி, பகவன் என்றும் மனைவியார் வாசுகி அம்மையார் என்றும் கூறுகின்றனர். இவர்

பிறந்த ஊர் சென்னையில் உள்ள மயிலாப்பூர் என்றும், சிலர் மதுரை என்றும், இவரை ஆதரித்த வள்ளல் ஏலேல சிங்கர் என்ற வணிகர் என்றும் பலர் பலவிதமாகக் கூறுவர்.

திருவள்ளுவர் எந்தச் சமயத்தைச் சார்ந்தவர் என்று தெளிய முடியாவண்ணம் பொது நோக்கு உடையவராகத் திகழ்கிறார். இவர் கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பர். ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் என்றே பலரும் கருதுகின்றனர்.

திருவள்ளுவர் முழுக்க முழுக்க மனித நலம் பற்றியே பொது நோக்குடன் குறள் அமைத்தாலும், அன்பு, அறிவு, ஆற்றல், பண்பு இப்படிப் பல குணங்களைக் குறித்து தெளிவாக எழுதியிருப்பினும் இறை பக்தியையும் சுட்டிக் காட்டத் தவறினாரில்லை.

1330 குறட்பாக்களில் கடவுள் வாழ்த்து என்று 10 பாடல்களே திருவள்ளுவர் எழுதியுள்ளார். இடை இடையே இறைவனைக் குறித்து எழுதியிருப்பினும் அவர் இறை வணக்கமாகவே, இறை பக்தியைக் குறிப்பிட்ட பாடல்கள்.

1. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
   பகவன் முதற்றே உலகு.

2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
   நற்றாள் தொழாஅர் எனின்.

3. மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
   நிலமிசை நீடுவாழ் வார்.

4. வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
   யாண்டும் இடும்பை இல.

5. இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
   பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

6. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

7. தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மணக்கவலை மாற்றல் அரிது.

8. அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

9. கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

10. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

கடவுள் வாழ்த்து என்று வரும் பத்துப் பாடல்களுமே இறை பக்தியைக் காட்டுவது தான்.

1. எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. அது போல உலகம் இறைவனை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது.

2. தூய அறிவு வடிவாக விளங்கும் இறைவனுடைய நல்ல திருவடிகளைத் தொழாமல் இருப்பாரானால், அவர் கற்ற கல்வியினால் ஆகிய பயன் ஒன்றுமில்லை.

3. அன்பரின் அகமாகிய மலரில் வீற்றிருக்கும் இறைவனின் சிறந்த திருவடிகளை இடைவிடாமல் நினைக்கின்றவர் இன்ப உலகில் நிலைத்து வாழ்வார்.

4. விருப்பு வெறுப்பு இல்லாத கடவுளின் திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்க்கு எப்போதும் எவ்விடத்திலும் துன்பம் இல்லை.

5. இறைவனின் உண்மைப் புகழை விரும்பி அன்பு செலுத்தும் மக்களிடம் அறியாமையால் விளையும் இருவகை வினையும் சேர்வதில்லை.

6. ஐம்பொறி வாயிலாகப் பிறக்கும் வேட்கைகளை அவித்த இறைவனுடைய பொய்யற்ற ஒழுக்க நெறியில் நின்றவர், நிலை பெற்ற நல்வாழ்க்கை வாழ்வர்.

7. தனக்கு ஒப்புமை இல்லாத தலைவனுடைய திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்க்கு அல்லாமல், மற்றவர்க்கு மனக்கவலையை மாற்ற முடியாது.

8. அறக்கடலாக விளங்கும் இறைவனின் திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்க்கு அல்லாமல் மற்றவர் பொருளும் இன்பமுமாகிய மற்றக் கடல்களைக் கடக்க முடியாது.

9. கேட்காத செவி, பார்க்காத கண் முதலியனபோல் எண் குணங்களை உடைய இறைவனின் திருவடிகளை வணங்காதவரின் தலைகள் பயனற்றவைகளாம்.

10. இறைவனுடைய திருவடிகளைப் பொருந்தி நினைக்கிறவர் பிறவியாகிய பெரிய கடலைக் கடக்க முடியும். மற்றவர் கடக்க முடியாது.

திருவள்ளுவர் இறை பக்தியோடு துவங்கிய திருக்குறளில் முதல் பத்துப் பாட்டின் கருத்தும் இறைவனைப் பற்றியதே. அவர் எழுதிய மற்றவைகளின் சிறப்பு உலகம் வியக்கும் அறிவு பூர்வ தத்துவங்கள். அரசில் இருந்து அன்றாட வாழ்வில் அல்லல்படும் மக்கள் வரை அறிய வேண்டிய அறம் உடையது. பொருட்பாலில் அவர் தெரிவிக்கும் கருத்துக்கள் உலகம் உள்ள அளவு உணரப்

பட வேண்டிய ஒன்றாகும். அப்படியே காமத்துப்பால் என்பது தலைவனும் தலைவியும் கொள்ளும் காதல், களவு, எதிர்பார்ப்பு, ஏமாற்றம், மனம், குணம், ஊடுதல், கூடுதல் இப்படி எல்லாமே சுருக்கமாக, தெளிவாக, அழுத்தமாக எழுதி ஏற்றம் பெறுகிறார்.

குறளுக்கு உரை கண்டவர்கள் பத்து பேர் என்று ஒரு பழம் பாடல் தெரிவிக்கிறது. எனினும் ஐவரின் பெயர்களே நாம் அறியக் கிடக்கின்றன. மணக்குடவர், பரிமேலழகர், பருதி, காளிங்கர், பரிப்பெருமாள் என்பாரே அவர்கள்.

## நாலடியார்

'நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி' என்பது பழமொழி. நாலும் என்பது நாலடியாரையும், இரண்டும் என்பது திருக்குறளையும் குறிக்கும். 'பழகு தமிழ்ச் சொல் அருமை நாலிரண்டில்' என்ற பழமொழியும் நாலடியார் சிறப்பை நவிலும்.

நீதி நூலான திருக்குறளுக்கு அடுத்தபடி நாலடியாரைச் சொல்லலாம். நான்கு அடிகளால் வெண்பாவிற்கு உரிய இலக்கணம் பெற்று வந்தமையால் நாலடியார் என்று பெயர் பெற்றது. இதற்கு வேளாண் வேதம் என்றும் நாலடி நானூறு என்றும் வேறு பெயர்கள் உண்டு. நாலடியார், குறிப்பிட்ட ஓர் ஆசிரியரால் பாடப்பட்ட நூல் அன்று. தங்கள் நாடு பஞ்சத்தில் ஆட்பட்டதால் பாண்டிய மன்னரால் 8000 சமண முனிவர்கள் பாதுகாக்கப் பட்டனர். அவர்கள் தம் நாடு செழிப்புற்ற பின் நாடு திரும்பினர்.

பாண்டிய மன்னன் விடை கொடுத்து அனுப்பவில்லை. மன்னனுக்கே தெரியாது முனிவர்கள் ஒவ்வொருவரும் ஒரு பாட்டை எழுதி தம் இருக்கையில் வைத்துவிட்டு

அரசனுக்கே தெரியாமல் தம் நாட்டுக்குச் சென்று விட்டனர். அதனால் சீற்றமடைந்த அரசன் அந்த ஏடுகள் அனைத்தையும் வைகை ஆற்றில் எறியும்படி ஆணையிட்டான். அந்த ஏடுகளுள் 400 பாடல்கள் நீரில் எதிர் ஏற அவை சிறந்த பாடல்களாக அரசன் எண்ணி அவற்றைத் தொகுப்பித்தான். இதுவே நாலடியார் பிறந்த கதை என்றும் கூறுவர்.

நாலடியாரை தொகுப்பித்தப் புலவர் யார் என்று தெரியவில்லை. இதற்கு முதலில் உரை கண்டவர் பதுமனார் என்பவர். அவர் 400 பாடல்களையும் 40 அதிகாரங்களாக வகுத்து ஒவ்வோர் அதிகாரத்துக்கும் பத்து பாடல்களாக அமைத்திருந்தனர்.

குறளுக்கு உரை கண்டவர்களுள் ஒருவரான தருமர் இதனை அறத்துப் பால், காமத்துப் பால், பொருட் பால் என மூன்று பிரிவாகப் பிரித்து, அறத்துப் பாலில் துறவறவியல், இல்லறவியல் என்று இரண்டு இயல்களை யும், பொருட்பாலில் அரச இயல், நட்பு இயல், பொது இயல், பகை இயல், பல்நெறி இயல் என்றும், காமத்துப் பாலில் இன்ப இயல், துன்ப இயல் என்றும் பிரித்தனர்.

'எண் பெருங்குன்றத்து எண்ணாயிரம் இருடி, பண் பொருந்தப் பாடிய பா நானூறும்' என்றும், 'வெள்ளாண் மரபுக்கு வேதம் எனச் சான்றோர் எல்லோரும் கூடி எடுத்துரைத்த சொல் ஆகும் நாலடி நானூறும்' என்று வரும் தனிப் பாடல்களின் வரிகள் சமணப் புலவர் பலரால் பாடப் பெற்றது நாலடியார். இதில் ஆங்காங்கே இயற்கையும் இறை பக்தியும் சேர்ந்துள்ளது.

## பழமொழி

400 வெண்பாக்கள் அடங்கிய நூல். ஒவ்வொவ் வொரு வெண்பாவிலும் ஒரு பழமொழி அடங்கியுள்ளது.

இதனைப் 'பழமொழி நானூறு' என்றும் கூறுவர். பழமொழி என்பது ஒரு நாட்டின் பண்பாட்டை விளக்குவதாகும்.

இதன் ஆசிரியர் மூன்றுறை அரையனார். அவர் சமண சமயத்தைச் சார்ந்தவர். கி. பி. எட்டாம் நூற்றாண்டு காலத்தவர்.

கரிகால் வளவன், தன் கையை வெட்டி உண்மை நீதியை உணர்த்திய பொற்கைப் பாண்டியன், புகார் நகர சிறப்பு பற்றிய செய்திகள், கடையேழு வள்ளல்களின் கொடைத் திறமையும், தன் மகனைத் தேர்க் காலில் இட்டு நீதி வழங்கிய மனுநீதி சோழனைப் பற்றிய செய்தியும், கழுவேற்றுதல் போன்ற கொடிய தண்டனை பற்றிய செய்தியும் இப்பழமொழி செய்யுள்கள் வாயிலாகத் தெரிய வருகின்றன.

இதனை முத்தகச் செய்யுள் என்று கூறுவர். இதில் காணப்படும் பழமொழிகள் பல திறத்தவை. ஒவ்வொரு வெண்பாவும் அதில் அமைந்துள்ள பழமொழியின் விளக்கமாக, அந்த வெண்பாவோடு கருத்து முடிவுற்றதாக அமைந்துள்ளது.

பழமொழிகள் சில :

**ஆயிரம் காக்கைக்கு ஓர் கல்.**
**உமிக் குற்றிக் கை வருந்துவர்.**
**தனிமரம் காடாதல் இல்.**
**தீ நாள் திருவுடையார்க்கு இல்.**
**பாய்பவோ வெந்நீரும் தீ ?**
**பொருள் கொடுத்துக் கொள்ளார் இருள்.**
**கல் தேயும் தேயாது சொல்.**

இதில் தீய நாட்கள் என்கின்ற துன்ப நாட்கள் இறை பக்தி உள்ள திருவுடையார்க்கு இல்லை என்பது போன்றவைகள் காணப்படுகின்றன.

## நான்மணிக் கடிகை

நான்மணிக் கடிகை என்பதற்கு 'நான்கு இரத்தினத் துண்டங்கள்' என்று பொருள். பதுமராகம், நீலகத்தி, குருவிந்தம், கோவாங்கு என்பவை நான்மணிகளாகும். ஒவ்வொரு செய்யுளிலும் இரத்தினத் துண்டங்கள் போன்ற நான்கு பொருளை இதன் ஆசிரியர் விளம்பி நாகனார் கூறியிருக்கிறார். இவர் வைணவ சமயத்தைச் சேர்ந்தவர். இதில் பலவகை வெண்பாக்களும், மூன்று பிற பாக்களுமாக 101 செய்யுள்கள் அடங்கியுள்ளன. இரண்டு கடவுள் வாழ்த்துச் செய்யுள்கள் இருக்கின்றன.

செய்வனவும், செய்யத் தகாதனவும் கூறப்படும் நான்கினால் அமைந்த இந்நூல் நான்கு இரத்தினத் துண்டங்களினால் ஆன அணி அணிந்தவர் உடலுக்குத் தரும் அழகைப் போல் அமைந்துள்ளது.

## திரிகடுகம்

மருத்துவ நிபுணர்கள் வாதம், பித்தம், சிலேோமம் ஆகிய மூன்று நாடிகளின் நடப்பினை யொட்டியே உடலில் தீமையும், நன்மையும் நடக்கும் என்பர். சுக்கு, மிளகு, திப்பிலி முதலியன அம்மூன்று நாடிகளையும் சீராகச் செயல்பட வைக்கிறது என்பர். அதுபோல மூன்று சிறந்த கருத்துக்கள் அடங்கிய செய்யுட்கள் திரிகடுகத்தில் இருக்கிறது.

**"உலகில் கடுகம் உடலின்நோய் மாற்றும்;**
**அலகில் அகநோய் அகற்றும்— நிலைகொள்**
**திரிகடுகம் என்னும் திகழ்தமிழ்ச் சங்கம்**
**மருவு நல்லாதன் மருந்து."**

இப்படி சிறப்புப் பாயிரச் செய்யுள் இந்நூலுக்குத் திரிகடுகம் என்று பெயர் வந்த காரணம் தெரியவரும்

இதன் ஆசிரியர் நல்லாதனார். இவர் வைணவர். திரிகடுகம் கடவுள் வாழ்த்துடன் 101 செய்யுள்களாகும்.

## சிறு பஞ்ச மூலம்

சிறு பஞ்ச மூலம் என்பதற்குச் சிறிய ஐந்து வேர்கள் என்று பொருள். சிறிய ஐந்து வேர்கள் என்று குறிக்கப் படுபவை, சிறுவழுதுணை வேர், நெரிஞ்சில் வேர், சிறுமல்லி வேர், பெருமல்லி வேர், கண்டங்கத்தரி வேர் என்பனவாம்.

**"சிறிய வழுதுணைவேர், சின்னெருஞ்சிமூலம்**
**சிறுமலி, கண்டங்கத்தரி வேர்— நறிய**
**பெருமலி, ஓர் ஐந்தும் பேசுபல் நோய்தீர்க்கும்**
**அரிய சிறு பஞ்ச மூலம்."**

இந்தப் பாடலில் சிறு பஞ்ச மூல வேர்களை நாம் அறிய முடிகிறது. உடல் நோயைத் தீர்ப்பதற்கு, ஐந்து வேர்களும் பயன்படுதலைப் போல், இந்நூலின் செய்யுட் களிலே அமைந்துள்ள ஐந்து ஐந்து சிறந்தக் கருத்துக்கள் உயிர்க்கு உறுதி தரத்தக்கனவாய் உள்ளன.

இதில் வீடுபேறு அடைதல், துறவறம் முதலியவைப் பற்றி விளக்குகிறது. சோதிடம், சித்த மருத்துவம் முதலி யவைகளும் எடுத்துச் சொல்லப்படுகிறது.

**"மல்இவர் தோள் மாக்காயன், மாணாக்கன் மாநிலத்துப்**
**பல்லவர் நோய்நீக்கும் பாங்கினால் கல்லா**
**மறுபஞ்சம் தீர்மழைக் கைமாக் காரியாசான்**
**சிறுபஞ்ச மூலம் செய் தான்."**

இதன் மூலம் ஆசிரியர் மாக்காயனார் மாணாக்கர் காரியாசான் என்பது தெரியவரும். இவர் சமண சமயத் தவர். கொறுக்கை எனும் ஊரில், எட்டாம் நூற் றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர்.

கடவுள் வாழ்த்துடன் 103 செய்யுள் உள்ளன. இதில் 85 முதல் 89 பாடல் வரையுள்ள 5 பாடல்கள் கிடைக்கவில்லை. காரியாசான் கணிதமேதை ஏலாதி யாசிரியருடன் சேர்ந்து பயின்றவர். இவர் ஆயுள் வேத நூற்பயிற்சியும், வடமொழிப் புலமையும் உள்ளவர் என்பது இதன் மூலம் அறிய முடிகிறது.

## முதுமொழிக் காஞ்சி

முதுமொழிக் காஞ்சியை இன்னிலைக் காஞ்சி என்றும் சொல்வர். காஞ்சி என்பது நிலையாமையையுணர்த்தும் ஒழுக்கமாகும். நிலையாமையையுணர்த்துகின்ற முது மொழிகள் கொண்டதே முதுமொழிக் காஞ்சி. இது 100 செய்யுட்களைக் கொண்டது.

சிறந்த பத்து, அறிவுப் பத்து, பழியாப் பத்து, துவ்வாப் பத்து, அல்ல பத்து, இல்லைப் பத்து, பொய்ப் பத்து, எளியப் பத்து, நல்கூர்ந்த பத்து, தண்டாப் பத்து என்ற பெயரில் பத்து பத்துச் செய்யுட்களை உடையது. ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு முதுமொழியை உட்கொண்டிருக்கும். இதன் ஆசிரியர் மதுரைக் கூடலூர் கிழார். ஐங்குறுநூறைத் தொகுத்தவரும் இவர்தான்.

முதுமொழிக் காஞ்சி என்பது காஞ்சித் திணையின் துறைகளுள் ஒன்று. அறிவுடையோர் குற்றம் நீங்கி ஆராயும் உலகியலுள்ள முடிந்த பொருளாகிய அறம், பொருள், இன்பங்களை அறியச் செய்வது முதுமொழிக் காஞ்சி.

## ஏலாதி

ஏலாதி என்பது ஏலக்காய் போன்ற ஆறுவகைப் பொருள் சேர்ந்த ஒருவகைக் கூட்டு மருந்து. ஏலம், இலவங்கம், சிறுநாவற்பூ, சுக்கு, மிளகு, திப்பிலி என்பன

வற்றை அளவுப்படி சேர்த்து இம்மருந்தைச் செய்வர்: ஏலம் ஒரு பங்கு, இலவங்கப்பட்டை 2 பங்கு, சிறுநாவற்பூ (நாக கேசரம்) 3 பங்கு, மிளகு 4 பங்கு, திப்பிலி 5 பங்கு, சுக்கு 6 பங்கு என்ற அளவில் சேர்த்துக் கொள்வர். ஆறு பொருட்களால் ஆன மருந்து உடல் நோயைத் தீர்ப்பது போல, இந்நூலில் உள்ள செய்யுட்களில் அடங்கியுள்ள ஆறு ஆறு கருத்துக்களும் உயிருக்குற்ற நோயைக் களையும்.

இதில் கடவுள் வாழ்த்து நீங்கலாக 80 பாடல்கள் அடங்கியுள்ளன. இதன் ஆசிரியர் மாக்காயனார் மாணாக்கர் கணிமேதாவியார் ஆவார். கணி என்ற அடைமொழி கணித்தல் எனும் சோதிடம் முதலிய தொழிலைக் குறிப்பதால் இவர் சோதிட அறிவு நிறைந்தவர் என்று தெரிகிறது. திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலின் ஆசிரியரும் இவரே. கணிமேதையாரும், காரியாசானும் மாக்காயனாரிடம் ஒன்றாகப் பயின்றவர்கள்.

## ஆசாரக் கோவை

ஆச்சாரம்—ஒழுக்கம்; கோவை—தொகுதி. ஆசாரக் கோவை என்பது ஒழுக்கத்தின் தொகுதி. இது ஒழுக்கத்தின் நிலை பற்றிய செய்திகள். இதனை வடமொழி சுக்ரஸ்மிருதி என்பதன் மொழி பெயர்ப்பாகும். இதன் மூலம் வடநூலாகும்.

இது பொது அறத்தையும், உண்ணல், உடுத்தல் நீராடல் ஆகிய மாந்தரின் அன்றாட வாழ்க்கை நெறிகளையும் விளக்குகிறது. இதன் ஆசிரியர் சைவ மதத்தைச் சார்ந்தவர். வண்கயத்தூர் எனும் ஊரைச் சார்ந்தவர் என்பதும், பெருவாயின் முள்ளி என்னும் பெயரினர்

என்பதும் இந்தச் சிறப்புப் பாயிரத்தின் வாயிலாகத் தெரிய வருகிறது.

நூறு வெண்பாக்களையும், சிறப்புப்பாயிரத்தையும் கொண்டது இந்நூல். இன்னிசை வெண்பா, நேரிசை வெண்பா, குறள் வெண்பா, பஃறொடை வெண்பா முதலிய வெண்பா வகையெல்லாம் இந்நூலில் உண்டு.

இதைச் செய்யலாம், இதைச் செய்தல் கூடாது என்றும்; இதனால் இன்ன நலன்கள்— இதனால் இன்ன தீமைகள் எனவும்; நீதி நேர்மை, அறம், இறை பக்தி போன்றவைகளை இந்நூலில் காணலாம்.

## இன்னா நாற்பது

இன்னா நாற்பது என்பது, இன்னலைத் தரும் பொருள்களை இன்னா என்று கூறும் வெண்பாக்களைக் கொண்ட இந்நூலுக்கு அப்பெயர் வழங்குகிறது. கடவுள் வாழ்த்து உட்பட 41 வெண்பாக்கள் கொண்டவை.

கபிலதேவர் இதன் ஆசிரியர் கபிலர் அல்லர் எனபாரும் உண்டு. கபிலதேவர் என்பது ஒரே பெயர். இவர் சமயப் பொது நோக்குடையவர்.

இன்னா என்றால் துன்பம் என்கின்ற பொருளிலேயும், இனிமையன்று, தகுதியன்று என்கின்ற பொருளிலேயே வருகிறது. இப்பாடல்கள் செய்யத் தகாதவை எது எது என்பதைப் புலப்படுத்துகிறது.

## இனியவை நாற்பது

இனியவை எவையோ அதனையெடுத்துக்காட்ட இனியவை நாற்பது என்னும் 40 செய்யுட்கள் இதில் காணப்படுகிறது.

இதன் ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் என்பவர். இவரதுஇயற்பெயர் என்றும்,

தந்தையார் பெயர் பூதனார் என்றும் கூறுவர். இதன் காலம் ஐந்தாம் நூற்றாண்டு ஆகும்.

எது எது நன்மை தரும் என்பதையே இதில் குறித்துள்ளார். இதனால் இது இனிதாகும் என்பதை நன்கு தெரியலாம்.

## கார் நாற்பது

அகப் பொருள் பற்றிய நூல் இது. கார்காலம் பற்றிக் கூறும் தனி நூல் இது. 40 செய்யுட்களைக் கொண்டது. கார் காலம் முல்லைத் திணைக்குரிய முதற்பொருள், இதன் ஆசிரியர் மதுரை கண்ணங் கூத்தனார். இவர் ஊர் மதுரை.

கண்ணன் என்பது இவரது தந்தையார் பெயர். கார் காலத்து வருவேன் என்று பிரிந்து சென்ற தலைவன் வராமை கண்டு, தலைவி பிரிவாற்றாமையால் வருந்துவதாக அமைந்தது. இது 40 வெண்பாக்களைக் கொண்ட நூல் ஆகும்.

## களவழி நாற்பது

போர்க் காலத்தைப் பற்றிய செய்யுட்களைக் கொண்டது. 40 செய்யுட்களைக் கொண்டது. இதில் ஒவ்வொரு இறுதியடியும் 'அட்டகளத்து' என்றே முடிகிறது.

பொய்கையார் இதன் ஆசிரியர். இவர் சேர நாட்டைச் சேர்ந்தவர். சேரன் கணைக்காலிரும் பொறைக்கும், சோழன் செங்கணானுக்கும் கழுமலம் என்னும் இடத்தில் நிகழ்ந்த போரில் சோழனிடம் சேரன் சிறைப்பட்டான். அவனைச் சிறையினின்றும் மீட்பதற்கு சோழனைப் புகழ்ந்து, சேரனின் நண்பர் பொய்கையார் களவழி நாற்பது பாடினார்.

பொய்கையார் இருவர் இருந்தனர் என்றும், அவர் களுள் ஒருவர், பிற்காலச் சோழனாகிய தஞ்சை விஜயாலயன் என்பவனது போர்க்களத்தைப் பாடியதே களவழி நாற்பது என்பார்.

## திணைமாலை நூற்றைம்பது

அகப்பொருள் பற்றிய ஐந்து திணைகளையும் மாலை போல் தொடுத்துக் கூறும் 150 செய்யுட்களைக் கொண்ட நூல் இது.

குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் என்ற வரிசையில் நிலங்களை அமைத்து, அதனின் ஒழுக்கங் களைக் கூறப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் கணிமேதை யார். கணிமேதையார் என்பவரும் கணிமேதாவியார் என்பவரும் ஒருவரே என்பர்.

## ஐந்திணை எழுபது

இது அகப்பொருள் பற்றிய ஐந்து திணைகளிலும் ஒவ்வொன்றும் 14 பாடல்களாக 70 பாடல்கள் பெற்றது. அவற்றுள் முல்லைத் திணையில் 25, 26 ஆகிய இரண்டு பாடல்களும்; நெய்தல் திணையில் 69, 70 பாடல்களும் கிடைக்கப் பெறவில்லை.

இதன் ஆசிரியர் மூவாதியார். இவர் சமண சமயத்தவர்.

## ஐந்திணை ஐம்பது

ஐந்திணை ஐம்பது, இது ஐந்து திணைகளுடையது. ஒவ்வொரு திணைக்கும் பத்து பத்துச் செய்யுட்கள் கொண்டது. இதன் ஆசிரியர் மாறன் பொறையனார்.

**'பண்பு உள்ளி நின்ற பெரியார் பயன்தெரிய**
**வண்புள்ளி மாறன் பொறையன் புணர்த்தியாத்த**
**ஐந்திணை ஐம்பதும் ஆர்வத்தின் ஓதார்**
**செந்தமிழ் சேரா தவர்.'**

என்று இந்நூலின் சிறப்புப்பாயிரம் கூறுகிறது. இந்நூலை ஆர்வத்தோடு கற்காதவர் செந்தமிழ் அறிவு பெறாதவர் என்று சிறப்புப் பாயிரம் கூறுகிறது. இவர் வைதீக சமயத்தவர் என்பர்.

## திணைமொழி ஐம்பது

திணைமொழி ஐம்பது என்று ஐம்பது செய்யுட்களை யுடைய நூல் ஒன்று உண்டு. இதனை இயற்றியவர் சாத்தந்தையார் மகனார் கண்ணஞ்சேந்தனார். இவரும் வைதீக சமயத்தவர் என்பர்.

## கைந்நிலை

கைந்நிலை, கை- ஒழுக்கம். ஒரு திணைக்கு 12 பாடல் களும், 5 திணைகளுக்கு 60 பாடல்களும் கொண்டது இந்நூல். இந்நூலில் பாலை, முல்லை ஆகிய இரு திணை களிலும் 18 பாடல்கள் சிதைந்து உள்ளன.

7, 8, 14 முதல் 17 வரை 20, 26 முதல் 35, 38 ஆகிய பாடல்கள் சிதைந்து காணப்படுகின்றன. இதன் ஆசிரியர் மாறோக்கத்து முள்ளி நாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங்காடனார் என்பவர் ஆவார். காவிதி என்பது அரனால் அளிக்கப்பெறும் பட்டமாகும்,

இன்னிலை என்பது பொய்கையார் பாடியது. மதுரையாசிரியர் பூதனார் தொகுத்தது. கடவுள் வாழ்த்து பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றியது. அறம் 10 பொருள் 9, இன்பம் 12, வீடு 14 ஆக 45 வெண்பாக் களைக் கொண்டது. கைந்நிலையில் இன்னிலையைச் சேர்த்தே கூறுவர்.

# 7. ஐம்பெருங் காப்பியம்

## 1. சிலப்பதிகாரம்

சேர அரசன் செங்குட்டுவனின் தம்பி இளங்கோ என்பவரால் இயற்றப்பட்டது.

கண்ணகி மலை மீதிருந்து, கணவன் கோவலனோடு விண்ணிற் சென்ற காட்சியைக் கண்ட குன்றக்குரவர் இளங்கோவடிகளுக்கு உரைக்க, மதுரை மாநகர் கண்ணகியால் எரியுண்டதை மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனாரும் இளங்கோவடிகளுக்குக் கூறி இக் கதையை ஒரு காப்பியமாக எழுதுமாறு வேண்டினர். இளங்கோவடிகள் கண்ணகி, கோவலன், மாதவி எனும் மூவர் வரலாற்றையும் இயல், இசை, கூத்து எனும் முத்தமிழிலே பாடினார். இதனை முத்தமிழ்க் காப்பியம் என்றும் போற்றுவர்.

இதில் புகார்க் காண்டம், மதுரைக் காண்டப், வஞ்சிக் காண்டம் எனும் மூன்று பெரும் பிரிவுகள் உள்ளன. இப் பிரிவுகளில் சேர, சோழ, பாண்டியன் மூவரசர்களின் பெருமைகளும் பேசப்படுகின்றன. மூன்று காண்டங் களிலும் 30 காதைகள் அடங்கியுள்ளன.

புகார்க் காண்டத்தில் மங்கல வாழ்த்துப் பாடல் முதல் நாடுகாண் வரை 10 காதைகளும், மதுரைக் காண்

டத்தில் காடுகாண் காதை முதல் கட்டுரைக் காதை வரை 13 காதைகளும், வஞ்சிக் காண்டத்தில் குன்றக் குரவை முதல் வரந்தரு காதை வரை 7 காதைகளும் ஆக 30 காதைகள் அடங்கியுள்ளன. காதை என்பது காண்டம் எனும் பெரும் பிரிவின் உட்பிரிவாகும்.

இதில் கூறப் பெறும் முக்கியமான மூன்று நீதிகள்.

1. அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாகும்.
   (அரசியலில் தவறு செய்கிறவர்களை அறக் கடவுள் தண்டிக்கும்)

2. உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்.
   (கற்பிற் சிறந்த காரிகையரை அறிவுடையவர் போற்றுவர்)

3. ஊழ்வினை வந்து உருத்தூட்டும்.
   (தலைவிதிப் பயன் தொடர்ந்து வந்து பாதிக்கும்)

**கதை:**

புகார் நகரத்தில் வணிக குலத்தைச் சேர்ந்த மாசாத்துவன் மகன் கோவலனுக்கும், மாநாய்கன் மகள் கண்ணகிக்கும் திருமணம் நிகழ்ந்து, சில காலம் இன்புற்று வாழ்ந்திருந்தனர். பின்னர் கணிகையர் குலத்தைச் சேர்ந்த ஆடலழகி மாதவியின் மாலையை 1008 பொற்கழஞ்சுகள் கொடுத்து வாங்கி, அவள் ஆடலில் மயங்கி அவள் பின் சென்று, கண்ணகியை மறந்திருந்தான் கோவலன்.

இந்திர விழாவின்போது கோவலனும், மாதவியும் கானல் வரிப் பாடல் பாட, அஃரவர் பாடிய பாடலின் பொருள் பிறர் மேல் அன்பு கொண்டதாகத் தோன்ற அதனால் கோவலன் மாதவியை வெறுத்துக் கண்ணகியை அடைந்தான்.

கண்ணகியோடு புது வாழ்வு தொடங்க மதுரை மாநகருக்குக் கவுந்தியடிகள் துணையுடன் புறப்பட்டுப் போய், கண்ணகியின் ஒற்றைச் சிலம்பை விற்க, மதுரை வீதிகளில் சென்றபோது, ஒரு பொற்கொல்லனிடம் விலை கூற, அவனும் விற்றுத் தருவதாகக் கூறி, வஞ்சனையாகத தான் கவர்ந்து கொண்ட அரசியனது சிலம்பே இது வென்று மெய்ப்பித்துவிட எண்ணங் கொண்டு, அரச னிடம் சென்று, கோவலனைக் கள்வன் என்று சொல்ல, அரசனும் ஆராய்ந்து பாராமல் 'கோவலனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வாருங்கள்' என்று கட்டளையிட்டு விட்டான். கோவலன் கொலையுண்டான்.

கவுந்தி அடிகளால் இடைக்குல நல்லாள் மாதரியிடம் அடைக்கலமாக விடப்பட்ட கண்ணகிக்கு செய்தி எட்ட அவள் கடுஞ் சீற்றத்துடன் அரசன் அவைக்குச் சென்று தன் கணவன் கள்வன் அல்லன் என்று தன் காற்சிலம்பினை உடைத்து அதனுள்ளிருந்த மாணிக்கக் கற்களைக் காட்ட, தான் அரசியல் தவறியமையறிந்து மன்னன் ''யானே கள்வன்'' என்று விழுந்து உயிர் துறந்தான். அரசனின் மனைவியும் தன் கணவனின் பாதகங்களைப் பணிந்து வீழ்ந்து தானும் உயிர் துறந்தாள். அப்போதும் சீற்றம் தணியாத கண்ணகி, தன் இடமுலையைத் திருகி எறிந்து மதுரை நகரையே எரித்தாள். அப்போது மதுரபதித் தெய்வம் அவள் முன் தோன்றியது. முற்பிறவியில் கோவலன் சங்கமன் என்பவனை ஒற்றன் என்று தன் அரசனிடம் முறையின்றிக் காட்டிச் கொடுத்துக் கொலை யுண்ணுமாறு செய்தான். அச்சங்கமன் மனைவி நீலி என்பாள் பதினான்கு நாட்கள் வருந்தி மலைமீது உயிர் விட்டதைப் போன்று இவன் மனைவியும் உயிர் விடுவாள் என்ற சாபத்தையும் பிறப்பையும் கண்ணகிக்கு உணர்த்தி யது அந்தத் தெய்வம்.

கண்ணகி மேற்றிசை வாயில் புகுந்து, வைகைக் கரை யின் வழியே சென்று திருச்செங்குன்றினைச் சேர்ந்து

வேங்கை மரத்தின் அடியிலே சென்று நின்றனள். பதினான்கு நாட்கள் கழிந்த பின் கோவலன் பூத்தேரில் வான் வழியே வந்தான் கணவனுடன் வானுலகம் புகுந்தாள் கண்ணகி.

செங்குட்டுவன் மலை வளம் காணச் சென்றான். குன்றக் குரவர், கோவலன் தேவர்களுடன் வந்து, கண்ணகியை வானகம் அழைத்துச் சென்றதைக் கூறினர். அங்கிருந்த சாத்தனார் கண்ணகி வழக்கு உரைத்ததையும், மதுரை தீயுண்டதையும் கூறினார். செங்குட்டுவன் பத்தினித் தெய்வமான கண்ணகிக்குக் கல்நட்டு வழிபட எண்ணினான்.

செங்குட்டுவன் வடநாடு சென்றான்; ஆரிய மன்னர் பலரையும் வென்றான்; கனக விசயர்களைச் சிறை பிடித்தான், இமயத்திலே பத்தினிக்குக் கல்லும் கொண்டான், அதனை கனக விசயர் தலையில் ஏற்றினான்; கங்கையில் அக்கல்லை நீர் படை செய்து தன் நாடு கொண்டு வந்தான். கண்ணகிக்குச் சிலையமைத்து அப்பத்தினிக் கடவுளைப் பாராட்டினான்.

## 2. மணிமேகலை

இதற்கு மணிமேகலைத் துறவு என்ற பெயரும் உண்டு. சிலப்பதிகாரத்தையும், மணிமேகலையையும் இரட்டைக் காப்பியங்கள் என்றும் கூறுவர்.

இதனை இயற்றியவர் மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார் எழுதினார். சாத்தனார் என்பது இயற்பெயர். வணிக மரபினர் நெல் முதலிய தானியங்களை (கூலங்களை) மதுரையில் விற்று வாழ்ந்து வந்தனர். சிலர் இவர் சீத்தலை என்ற ஊரில் பிறந்தவர் என்றும் கூறுவர். சிலர் சீத்தலை என்று அமைந்தமைக்கு ஒரு கதையையே கூறுவர்.

சீத்தலைச் சாத்தனார் மதுரைத தமிழ்ச் சங்கப் புலவ ராக இருந்தபோது, தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றத்தின் பொருட்டு வரும் நூல்களில், பிழைகளைக் காணும் போது எல்லாம் அவர் இத்தகைய பிழைகளைக் காணும் படியான இழிவான நிலைமை தமக்கு வந்து விட்டதே என்று வருந்தித் தம் தலையில் எழுத்தாணியால் குத்திக் கொள்வாராம் அவ்வாறு அடிக்கடி குத்திக் கொண்ட தனால் அவரது தலை சீழ் பொருந்தியதாக இருந்ததாம். அது பற்றியே சீத்தலைச் சாத்தனார் எனும் பெயர் வந்த தாம்.

சிலப்பதிகாரம் கதை நிகழ்ந்த காலத்தில், சாத்தனார் வாழ்ந்தவர். கண்ணகி மதுரையை எரித்த போது அவர் மதுரையில் உள்ள வெள்ளியம்பலத்தில் உறங்கிக் கொண் டிருந்தாராம். இவர் தான் இளங்கோ அடிகளின் தமையன் செங்குட்டுவனுக்குக் கண்ணகி வரலாற்றை உணர்த்தியவர்.

இவர் காலம் 1800 ஆண்டுகட்கு முற்பட்டது. இவர் பௌத்த மதத்தில் பெரும் பற்று உடையவர் ; எனினும் மற்ற சமயத்தவரும் விரும்பிப் படிக்கும் வண்ணம் இக்காப்பியத்தைப் படைத்திருக்கிறார். இதில் விழாவறை காதை முதல் பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை வரை 30 காதைகள் அடங்கியுள்ளன.

**கதை:**

கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்தவள் மணிமேகலை. கோவலன் கொலையுண்டதை அறிந்த மாதவி பௌத்தத் துறவியானாள் தன் மகள் மணிமேகலையையும் தவ வழியில் செலுத்தினாள்.

ஒரு நாள் மணிமேகலை மலர் பறிக்கும் பொருட்டு தன் தோழி சுதமதியுடன் உவவனம் சென்றாள். அங்கு உதயகுமாரன் எனும் அரச குமாரன் அவள் மீது காதல்

கொண்டான். அவள் பளிங்கு மண்டபத்திலே ஒளிந்து கொண்டாள். பின் இந்திர விழா காணவந்த மணிமேகலா தெய்வம் அவள் மணி பல்லவத் தீவுக்குத் கொண்டு செல்லப்பட்டாள். உருவை மாற்றிக் கொள்ளவும், வானில் பறக்கவும், பசியின்றி இருக்கவும் மணிமேகலா தெய்வம் அவளுக்கு மூன்று வரங்கள் தந்தது.

அத்தீவில் மணிமேகலை தீவதிலகை எனும் பெண் தெய்வத்தைக் கண்டு, அவள் யோசனையால் புத்த பீடிகையை வணங்கித் தன் பழம் பிறப்புணர்ச்சியைப் பெற்றாள். பழம் பிறப்பில் தன் கணவனாக இருந்த இராகுலனே உதயகுமாரனாகப் பிறந்தான் என்றும் அவள் உணர்ந்தாள்.

மணிமேகலை புத்த பீடிகையை வணங்கியிருந்த போது அமுதசுரபி எனும் அட்சய பாத்திரம் அவளுக்குக் கிடைக்கப் பெற்றது. அதிலிருந்து எடுக்க எடுக்க உணவு வளர்ந்து கொண்டேயிருக்கும். அது ஆபுத்திரன் கையில் இருந்ததாகும்.

மணிமேகலை அமுதசுரபியோடு புகார் நகர்க்கு வந்தாள். அறவண அடிகளைச் சந்தித்து யாவும் கூறினாள். பசித்தோர்க்கு உணவு வழங்க, தெருவில் வந்து நின்றாள். யானைத் தீ எனும் பசி நோய்க்கு விருச்சிக முனிவரால் ஆளாக்கப்பட்ட காய சண்டிகை என்பாள், மாற்றுருவில் நின்று கொண்டிருந்த மணிமேகலை முன்வந்தாள். கற்புடைய மங்கை ஆதிரையிடம் முதலில் அமுதசுரபியில் பிச்சை ஏறபது நலம் என்று காயசண்டிகை கூறினாள். ஆதிரையிடம் பிச்சை ஏற்றதும் அமுதசுரபியில் உணவு வளர்ந்து கொண்டே வந்தது. அதிலிருந்து ஒரு பிடி அன்னம் இட முனிவரின் சாபத்தால் துய்ப்புற்றுக் கிடந்த காயசண்டிகையின் யானைத் தீ நோய் அறவே நீங்கி விட்டது.

மணிமேகலை உலக அறவி என்னும் இடத்துக்குச் சென்று பசித்தோர் பலருக்கும் உணவு படைத்து வந்தாள். அவள் துறவியாகி விட்டதறிந்து மனம் வெதும்பிய அவள் துறவியாகி விட்டதறிந்து மனம் வெதும்பிய அவள் பாட்டி சித்திராபதி உதயகுமாரனோடு அங்கே வந்தாள். உதயகுமாரனுக்கு மணிமேகலை நிலையாமையை விளக்கினாள். உதயகுமாரன் அவள் உள்ளத்தை உணரவில்லை. மணிமேகலை சப்பாபதி எனும் காவல் தெய்வத்தின் கோயிலுக்குச் சென்று காயசண்டிகை வடிவம் பெற்று வெளி வந்து அன்னதானம் செய்து கொண்டிருந்தாள்.

காய சண்டிகையைத் தேடிக் காவிரிப்பூம் பட்டினம் வந்த காஞ்சனன். காயசண்டிகை வடிவிலிருக்கும் மணிமேகலையை அவளே என்று எண்ணிவிட்டான். உதயகுமாரன் அதை அறியான். சம்பாபதிக் கோயிலுக்குக் காஞ்சனன் சென்றிருந்த அதே நேரத்தில் உதயகுமாரனும் அங்கே சென்று இருந்தான். தன் மனைவியைக் காதலிக்கும் காமுகனாக உதயகுமாரனைத் தவறாகக் கருதி, தன் வாளால் வெட்டி வீழ்த்தி விட்டான். உதயகுமாரன் இறப்பிற்குக் காரணம் மணிமேகலையே என்று கருதிய மன்னன் அவளைச் சிறை செய்தான்.

செய்தியறிந்து சித்திராபதி, மாதவி, சுதமதி ஆகியோர் இராசமா தேவியிடம் வந்தனர். அறவண அடிகளும் அரசியின் முன் வந்தார்கள். புத்த தருமத்தைக் கூறியதும் மணிமேகலை விடுவிக்கப்பட்டாள்.

பின்னர் மணிமேகலை ஆபுத்திரன் ஆண்ட சாவக நாடடைந்து அறம் செய்தாள். வஞ்சி நகர் அடைந்து கண்ணகியின் படிமத்தை வணங்கினாள். பல சயவாதிகளின் கொள்கைகளை கேட்டறிந்தாள். காஞ்சிக்கு வந்து அறவண அடிகளிடம் பௌத்த தர்மங்களை அறிந்தாள்.

இறுதியில் தவம் மேற்கொண்டு, தன் பிறவித் துன்பம் நீங்குமாறு நோன்பினைக் கைக்கொண்டாள்.

## 3. சீவக சிந்தாமணி

இது சமண சமய நூலாகும். தமிழில் முதன் முதலாக இலம்பகம் என்ற பிரிவுகளுடையது இந்த நூலே. இலம்பகம் என்றால் மாலை என்று பொருள். இது நாமகள் இலம்பகம் முதல் முத்தி இலம்பகம் வரை 13 இலம்பகங்களைக் கொண்டது. இதன் செய்யுட்களின் எண்ணிக்கை 2700.

விருத்தப் பாவால் ஆனது இக்காப்பியம். இது சிந்தித்த வற்றையெல்லாம் தரும் சிந்தாமணி என்னும் தெய்வமணி யைப் போலவே, புலவர்கள் சிந்தித்தவற்றை எல்லாம் தருதலால் சிந்தாமணி எனப் பெயர் பெற்றது என்பர்.

சீவகனைச் சுடுகாட்டில் கந்துக்கடன் கண்டெடுத்த போது 'சீவ' என்று அசரீரி ஒலித்ததால் சீவகன் என்று கதாநாயகனுக்கும், சீவக சிந்தாமணி என்று, இக்காப்பியத்திற்கும் பெயர் வந்தது என்பர்.

சீவகன் எட்டு மங்கையர்களை மணந்த காரணத்தால் இந்நூலுக்கு மணநூல் என்று வேறு பெயரும் வந்தது என்றும் கூறுவர்.

இதன் ஆசிரியர் திருத்தக்க தேவர். சோழர் குலத்தில் பிறந்தவர். இளமையில் துறவு பூண்டவர். சமண சமயத்தைச் சேர்ந்தவர். அம்மதத்தைப் பரப்பும் நோக்குடனே இந்நூலை இயற்றினார் என்பர். இவரது ஆசிரியர் குமாரசேனர் என்னும் முனிவர். இவர் தமது புலமையைத் தம் ஆசிரியர்க்கு எடுத்துக் காட்டும் பொருட்டு 'நரிவிருத்தம்' என்னும் பெயர் கொண்ட ஒரு நூலைப் பாடினார் என்றும் சொல்லப்படுகிறது.

கவிச்சக்ரவர்த்தி கம்பர் தாம் பாடிய இராம காதைக்கு ஓர் உந்துதலாக இந்நூலைப் போற்றியிருக்கிறார் என்பது இதன் சிறப்பாகும்.

**கதை:**

ஏமாங்கத நாட்டின் தலைநகர் இராசமாபுரம். அதனை ஆண்டவன் சத்சந்தன். அவன் மனைவி விசயை. சத்சந்தன் தன் மனைவியின் மீது காதல் மிக்கவனாய் அரசியல் பொறுப்பினைக் கட்டியங்காரன் எனும் அமைச்சனிடம் ஒப்படைத்து இருந்தான்.

வஞ்சக அமைச்சன் சமயம் பார்த்துச் சத்சந்தனைக் கொன்று விட்டான். அச்சமயம் கருவுற்றிருந்த விசயை மயில் ஊர்தியின் உதவியால் தப்பிச் சென்று, ஒரு சுடுகாட்டில் சீவகனைப் பெற்றாள். சுடுகாட்டில் விசயையின் நிலைக்கு இரங்கிய ஒரு தெய்வம், அவளது உயிர்த் தோழி சண்பக மாலை வடிவில் வந்து அவளுக்கு ஆறுதல் கூறியது. அப்போது அங்கு வந்த கந்துக்கடன் என்னும் வணிகன் அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு போகும் வரை அவர்கள் மறைந்து கொண்டிருக்க வேண்டும் என்று அத்தெய்வம் யோசனைக் கூறியது.

கந்துக்கடன் சீவகனை எடுத்துக்கொண்டு போய் வளர்த்தான். அச்சணந்தி என்ற ஆசிரியரிடம் சீவகன் பல கலைகளையும் கற்றுத் தேர்ந்தான். பின்னர் ஒருநாள் ஆசிரியர் சீவகனுக்கு அவனது கதையைக் கூறினார். சீவகன் கட்டியங்காரனைப் பழிதீர்த்துக் கொள்ள துடியாய்த் துடித்தான். இடையில் வேடர்களால் கவர்ந்து செல்லப்பட்ட பசுக்களை மீட்டுத் தந்து, இடையர்குலத் தலைவனாகிய நந்தகோன் மகள் கோவிந்தை என்பாளைத தன் நண்பனாகிய பதுமுகனுக்கு மணஞ் செய்து வைத்தான்.

காந்தருவதத்தை என்ற அரசகுமாரியுடன் இசைப் போரில் கலந்து கொண்டு யாழ் மீட்டி பாடி அவளை வென்று மணந்து கொண்டான். குணமாலை, சுரமஞ்சா ஆகிய இருவரின் நறுமணப் பொடிப் போட்டியில்

சரியானத் தீர்ப்பு வழங்கியும் மத யானையிடமிருந்து காப்பாற்றியும் குணமாலையை மணந்து கொண்டான்.

பாம்புக் கடியால இறந்துபோனப் பதுமையை உயிர்ப் பித்து அவளை மணந்தான். மீண்டும் யாருக்கும் நாணப் படாமல் தன்னைக் கண்டதும் நாணங் கொண்ட கேமசரியை மணந்தான்.

தன் வில்லாண்மையை ஏமமாபுர மன்னனுக்குக் காட்டி அவன் அன்பைப் பெற்று, அவன் புதல்வர்களுக் கெல்லாம் வில்வித்தை கற்றுத் தந்து, அவன் மகள் கனக மாலையை மணநதான்.

இராசமாபுரத்தின் வணிகத் தெருவில், ஆடிக் கொண் டிருந்த விமலையைக் கண்டு காதலுறறு அவளையும் மணந்தான். ஆடவரைக் காணாமலேயே கன்னி மாடத் தில் வாழும் விரதம் பூண்டிருந்த சுரமஞ்சரியை முதியவர் வேடத்தில் அணுகி, இனிமையாகப் பாடி, அவள் மனத்தை மாற்றி மணந்து கொண்டான். பின்பு கட்டியங்காரனைக் கொன்று தன் தாயின் துயர் துடைத்து இழந்த நாட்டைப் பெற்றான் சீவகன்.

## 4. குண்டலகேசி

இதற்குக் குண்டலகேசி விருத்தம் என்ற பெயரும் உண்டு. இதில் சொல்லும் பொருளும் விளங்கா நிலையில் பல இடங்கள் அமைந்திருப்பதால் இதனை அகலக்கவி என்றும் கூறுவர். இநனை இயற்றியவர் நாகு தத்தனார் என்று சிலரும், நாத குப்தனார் என்று சிலரும் கூறுகின் றனர். இந்நூலின் காலம் சரியாகத் தெரியவில்லை. சிலம்பு, மேகலைக்குப் பின் னரும வளையாபதி, சிந்தாமணிக்கு முன்னரும் இந்நூல் தோன்றியிருககு வேண்டும் ஏன்று தெரிகிறது.

குண்டலகேசிக் காப்பியமாக 25 செய்யுட்களும், முதல் அடிகளையுடையதும் விடுபட்ட அடிகளையுடையதுமாக

நீலகேசி உரையில் காணப்படும் 180 செய்யுட்களும், புறத்திரட்டில் காணப்படும் 19 செய்யுட்களும்தான் குண்டலகேசியின் செய்யுட்களாகக் கிடைத்துள்ளன.

சமயப் பூசலால் இந்நூல் இவ்வாறு அழிந்து போயிற்று என்பர். குண்டலகேசியின் வரலாறு, பாளி மொழியில் எழுதப்பட்ட பௌத்தநூலாகிய 'தேரி காதை' யிலும், தம்மபாதா, அங்குத்தர நிகாயா என்னும் நூல்களிலும், 'நீலகேசித் தெருட்டு' என்னும் சமணத் தமிழ் நூல உரையிலும் காணப்படுகிறது.

**கதை:**

குண்டலகேசி இராச கிருகம் எனும் நகரை ஆண்டு வந்த அரசனின் அமைச்சன் மகள். அவள் அந்நகர அரசவைப் புரோகிதன் மகனைக் காதலித்தாள் என்று ஒரு கதையுண்டு.

குண்டலகேசி வைசிய வணிகன் மகள் என்றும், காளன் என்னும் அதே இனத்துக் காளையை அவள் காதலித்தாள் என்றும் கூறுவர்.

குண்டலகேசி தன் கணவனை மலையுச்சியினின்றும் தள்ளிக் கொன்று விட்டாள்.

குண்டலகேசி பின்பு சமண மதத்தைச் சார்ந்தாள். சமணர் இவள் கூந்தலைக் களைந்து விட்டனர். தலையில் மீண்டும் முளைத்த மயிர் சுருள் சுருளாக இருந்ததால் குண்டலகேசி எனும் பெயர் பெற்றாள் என்பர்.

சமணம் சார்ந்த குண்டலகேசி அச்சமயக் கொள்கைகளை நன்கு கற்றுப் பௌத்த சமயங்களாகிய பிறவற்றை எதிர்த்து அச்சமயத்தவரை வாதத்தில் வென்று தன் சமயக் கொள்கைகளைப் பரப்பி வந்தாள். அக்காலத்தில் வாதிடுவோர் நாவல் மரத்தை நட்டு வாதுக்கு அழைப்பது வழக்கம். அப்பக்கம் வந்த புத்தரும் அவர் சீடர்

சாரி புத்தரும் அந்நாவல் மரத்தின் வரலாறு அறிந்தனர். சாரி புத்தர் நாவல் மரத்தைச் சாய்த்து வாதில் குண்டலகேசியையும் வென்றார். அவளும் சாரி புத்தர் திருவடிகளில் விழுந்து சமணத்தை விடுத்து புத்த சமயத்தைச் சார்ந்தாள். புத்த பெருமான் முன் சென்று துறவு கொண்டாள். அன்றிலிருந்து சமணத்தையும், வைதீகத்தையும் தூற்றி புத்த மதத்தைப் போற்றி வாழ்ந்து, இறுதியில் முக்தி பெற்றாள் என்பர்.

## 5 வளையாபதி

இந்நூலைப் பற்றிய தெளிவான முழுமையான வரலாறு ஏதும் கிடைக்கவில்லை.

**கதை :**

நவகோடி நாராயணன் செட்டி என்பவன் வேறு சாதிப் பெண்ணை மணந்தான். அவளை விட்டு நீங்குமாறு அவன் இனத்தவர் வற்புறுத்தினர். அதனால் அவன் அவளை நீக்கி விட்டான். அவனை நீங்கிய நிலையில் கருவுற்று இருந்த அவள் ஆண் மகவைப் பெற்றாள். அந்த மகன் தன் தாயிடம் உண்மையறிந்து, தன் தந்தையிடம் சென்று, தான் அவன் மகனே என்றான்.

தந்தை மறுத்து விட்டான். பின், தாயே அவன் அவர் மகன் தான் என்று காளியின் முன்னர் மெய்ப்பித்தாள். அதன் பின்னர் அவளையும் மகனையும் ஏற்றுக் கொண்டு இல்லறம் நடத்தினான். இது தான் வளையாபதியின் கதையாகச் சிலரால் சொல்லப் படுகிறது. ஆனால் இக் கதைக்குச் சான்று ஏதும் கிடைக்கவில்லை. இக்கதையின் நாயகன் பெயரும் சரியாக அறியக்கூடவில்லை.

குண்டலகேசி எனும் பெயரால் வந்த பௌத்த நூலுக்கு எதிராக ஒரு சமணர் வளையாபதி என்னும்





பெண்ணைக் காவியத் தலைவியாகக் கொண்டு இந் நூலைப் படைத்திருக்கக் கூடும் என்று கூறுவோரும் உண்டு.

வளையாபதியை பௌத்த நூல் என்று சிலரும் சமண நூல் என்று சிலரும் கருத்துத் தெரிவிக்கின்றனர். புறத்திரட்டில் 66 செய்யுட்களும், சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லாரால் மேற்கோளாகக் காட்டப்படும் 2 செய்யுட்களும் வளையாபதி பாடல்களாகக் கருதப்படுகின்றன.

இந்நூலின் காலம் கி. பி. பத்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்றும், சீவகசிந்தாமணி நூலுக்கு முற்பட்டது என்றும் கருத்துக்கள் நிலவுகின்றன.

## 8. ஐஞ்சிறு காப்பியங்கள்

ஐஞ்சிறு காப்பியங்கள் சூளாமணி, நீலகேசி, யசோதர காவியம், நாக குமார காவியம், உதயண குமார காவியம் என்பவையாகும். இவை சமண சமயக் கொள்கைகளைக் கொண்ட காப்பியங்களாகும்.

### 1. சூளாமணி

இதனைச் சூடாமணி என்றும் கூறுவர். இது சருக்கம் என்ற பிரிவுகளைக் கொண்டது. நாட்டுச் சருக்கம் முதல் முத்திச் சருக்கம் வரை 12 சருக்கங்கள் இக்காப்பியத்தில் அடங்கியுள்ளன.

இதன் ஆசிரியர் தோலா மொழித் தேவர். இது இவரது இயற்பெயர் அன்று என்பர்.

நல்வினை தீவினை எனும் இருவினைகளும் நீங்கினால் தான் பிறவா நிலைபெற முடியும் என்றும், நல்வினையைப் பொன் விலங்கு என்றும். தீவினையை இரும்பு விலங்கு என்றும் இவை இரண்டுமே ஆன்மாவைப் பிணிப்பவை என்றும் இந்நூல் விளக்குகிறது.

**கதை :**

போதனமா நகரத்தைப் பயாபதி என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவனுக்கு இரண்டு குமாரர்கள். விசயன், திவிட்டன் என்று அவர்களுக்குப் பெயர்.

வித்யாதர உலக அரசனான சுவலனசடி, தன் மகள் சுயம்பிரபை என்பவளைத் திவிட்டனுக்கு மணமுடிக்க நினைக்கிறான். அச்சுவகண்டன் எனும் வித்தியாதரப் பேரரசன் திவிட்டனை அடக்கப் பெருஞ்சினம் கொள்கிறான். அரிகேது என்பவனைச் சிங்கமாக செல்லும் படி அவன் ஆணையிடுகிறான். அவனைத் திவிட்டன் அடக்கப் புறப்பட்டுப் பேரிரைச்சல் போடுகிறான். அரிகேது அச்சப்தத்துக்கு அஞ்சி ஒரு முழையில் (புதரில்) புகுந்து கொள்கிறான்.

அம்முழையில் ஏற்கனவே இருந்து வெளிவந்த உண்மையான சிங்கத்தைத் திவிட்டன் வாயைப் பிளந்து கொன்று விடுகிறான். திவிட்டனின் வீரத்தை மெச்சி சுயம்பிரபையை மணமுடித்து வைக்கின்றனர்.

அச்சுவகண்டன் போருக்குப் புறப்படுகிறான், தன் படையோடு திவிட்டன், அச்சுவகண்டன் தன் மீது செலுத்திய உருளையாலேயே அவனைக் கொள்கிறான்.

பின்னர் பயாபதி ஒரு நல்ல நாளில் தன் இரு மைந்தர்களுக்கும் முடி சூட்டுகிறான். தான் சமண முனிவர் ஒருவரைச் சார்ந்து அவர் தம் நல்லுரை கேட்டுத் துறவு பூண்டு அருகன் திருவடி அடைந்து, உலகம் யாவும் விரும்பும் சூளாமணியாகத் திகழ்கிறான்.

## 2. நீலகேசி

இதற்கு நீலகேசித் தெருட்டு என்ற பெயரும் உண்டு. இது குண்டலகேசி என்னும் பௌத்த நூலுக்கு எதிராகத் தோன்றியது என்பர். இது தரும உரைச் சருக்கம் முதல் பூதவாதச் சருக்கம் வரை 10 சருக்கங்களைக் கொண்டுள்ளது.

இதன் நூலாசிரியர் யார் என அறியக்கூடவில்லை. பிற சமயங்களையும் தத்துவங்களையும் சமண ஆசிரியர்

வாதிட்டுச் சமண சமயமே சிறந்தது என்று நிலை நாட்டியதாக இந்நூல் கூறுகிறது.

அஹிம்சையை உணர்த்தும் சமணமே எல்லா மதங்களிலும் உயர்ந்தது என்பது இந்நூலின் முடிவு.

## 3 யசோதர காவியம்

வடமொழியில் உள்ள உத்தர புராணத்தினின்றும் எடுக்கப்பட்ட இக்கதையினைத் தமிழில் இயற்றியவர் யார் என்று தெரியவில்லை. இது ஐந்து சருக்கங்களைக் கொண்டது. வடமொழி கதைக்கும் தமிழில் உள்ள கதைக்கும் சிறிது மாறுதல் தெரிகிறது.

**கதை :**

சண்டமாரி தேவி எனும் தெய்வத்துக்கு விலங்குகளையும், மனிதர் இருவரையும் பலியிட விரும்பினான் மாரிதத்தன் எனும் அரசன். அபயருசி என்ற அண்ணனையும் அபயமதி என்ற தங்கையையும் பலியிடத் தீர்மானித்தான். அபயருசி அஞ்ஞாதவனாய்த் தம் பழம் பிறப்பினை விளக்கினான். இராசபுரத்தரசன் அசோகனுக்கும் சந்திரமதிக்கும் தோன்றியவன் யசோதரன். அபயமதியே முன் பிறவியில் சந்திரமதியாக இருந்தாள். அசோகன் துறவு பூண்ட காலத்து அரசுரிமை பெற்றுத் தன் மனைவி அமிர்தமதியோடு இனிதே ஆட்சி நடத்தி வந்தான். அப்போது அமிர்தமதி குஷ்ட நோய் பெற்ற அஷ்டபங்கன் எனும் யானைப் பாகன் பாடிய மாளவ பஞ்சமம் என்னும் பண்ணினால் மனம் நெகிழ்ந்து கள்ள நட்பு கொண்டவளானாள். அவன் தன் அன்னையிடம் சென்று தான் கண்ட தீய கனவு ஒன்றினைச் சொல்வது போல் தன் மனைவியின் அடாத செயலைக் குறிப்பாக உணர்த்தினான். அவள் அதைப் புரிந்து கொள்ளாமல் மாக்கோழியைச் சண்டமாரிக்குப் பலியிடுமாறு கூறினாள்.

அவனும் அவ்வாறே செய்ய, அது கூவிக் கொண்டே உயிர் விட்டது. அப்போது அதன் வேதனையைக் கண்டு மனம் வருந்தி, துறவு கொள்ள விரும்பி, தன் மகன் யசோமதிக்கு முடி சூட்டினான். அப்போது அமிர்தமதி அரசனுக்கும் அவன் மகனுக்கும் விஷம் சேர்த்து விருந்து அளித்தாள். அவர்கள் இருவரும் இறந்தனர்.

முன்பு மாக்கோழியைக் கொன்ற தீச்செயலுக்காக மயில், நாய், பன்றி, கருநாகம், கோழி முதலிய விலங்குகளாகப் பிறக்க, யசோமதி அவ்விரு கோழிகளையும் கொல்ல, அவை புட்வாலியினிடத்தே அபயமதியாகவும் அபய ருசியாகவும் தோன்றி மக்கட் கதியை அடைந்தன.

மாக்கோழியைக் கொல்வதற்கே இவ்வளவு துன்பம் என்றால் மனித உயிரைக் கொல்வதற்கு எவ்வளவு துன்பம் நேரும் என்று எண்ணிப் பார் என்று மாரிதத்தனுக்கு அபயருசி கூற, அவன் உடனே உயிர்ப் பலியை நிறுத்தி விட்டு அரசு துறந்தான். சுதத்தன் என்னும் சமண முனிவரை அடைந்து, நோன்பிருந்து முக்தியடைந்தான் என்பர்.

## 4. உதயண குமார காவியம்

இதனை உதயணன் கதை, பெருங்கதை, கொங்குவேண் மாக்கதை எனவும் அழைப்பர். இதன் கதாநாயகன் உதயணன். அவன் உதய காலத்தில் பிறந்தவன். எனவே இப்பெயரினைப் பெற்றான்.

இதன் ஆசிரியர் கொங்குவேளிர் என்பவர். இது தொடர்நிலைச் செய்யுளால் அமைந்தது. ஆறு காண்டங்களைக் கொண்டது. பல காண்டங்களில் சிற்சில அடிகள் காணப்படவில்லை.

இக்காப்பியத் தலைவன் உதயணன் பல கலைகளிலும் தேர்ந்தவனாக விளங்குகிறான். போர்ப் பயிற்சி, யாழ்

மீட்டுதல், விலங்குடன் பேசுதல், வானத்தில் பறத்தல், வாழைக் குருத்தில் நகத்தால் சித்திரங்கள் வரைதல், பெண்களுக்கு வகை வகையாகச் சூட்டுதல் போன்றவை அவன் அறிந்த கலைகளுள் சில.

இக்காப்பியத்தில் இயந்திர யானை எனும் யானைப் பொறி பற்றிக் கூறப்பட்டுள்ளது.

## 5. நாக குமார காவியம்

இது பெயரளவில் 'நாக குமார காப்பியம்' என்று சொல்லப்படுகிறதே ஒழிய இதற்குரிய நூல் காணப்படவில்லை. இக்காப்பியமே இறந்துபட்டது என்பர். இதனை இயற்றியவர் யார் என்பதும், என்ன கதையென்றும்கூட தெரியவில்லை.

# 9. சைவ சமய இலக்கியம்

சைவ சமயத்தில் இறைவன் அருளை அடைவதற்குரிய நான்கு சாதனங்களாகச் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கினைச் சான்றோர் குறிப்பிட்டுள்ளனர். இதனையே வட நூலார் தாச மார்க்கம், சத்புத்ர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் என நான்காகக் கூறுகின்றனர்.

சைவசமயக் குரவர்கள் எனப் போற்றப் படுபவர்கள் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் எனும் நால்வர் ஆவார்கள். சைவத்தைச் சார்ந்து முக்தி பெற்று அடியவர்கள் அறுபத்து மூவர் ஆவர். அவர்களை நாயன்மார்கள் என்பர். திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர் எனும் சமயக் குரவர்கள் மூவர் பாடிய பக்திப் பாமாலை 'தேவாரம்' எனப்படும். இவர்களை 'மூவர்முதலி' என்றும், தேவாரம் பாடிய மூவர் என்றும் அழைப்பர்.

மூவர் பாடிய தேவாரமும் மாணிக்கவாசகரின் திருவாசகமும், ஒன்பதின்மரின் திருவிசைப்பாவும், திருமூலர் திருமந்திரமும், ஆலவாயுடையார் திருமுகப் பாசுரமும், காரைக்காலம்மை, காடவர்கோன், சேரமான் பெருமாள் நாயனார், கபில தேவ நாயனார், நக்கீர தேவ நாயனார், பட்டினத்துப் பிள்ளை நம்பியாண்டார் நம்பி முதலியோர் தொகுத்த பாமாலைகளும், சேக்கிழார்

இயற்றிய பெரிய புராணமும், பன்னிரு திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன. முதல் பதினோரு திருமுறைகளை வகுத்தவர் நம்பியாண்டார் நம்பி ஆவார். திருஞான சம்பந்தர் தேவாரம் 1, 2, 3 திருமுறைகளாகும். திருநாவுக்கரசர் (அப்பர்) தேவாரம் 4, 5, 6 திருமுறைகளாகும். சுந்தரர் தேவாரம் ஏழாந் திருமுறையாகும். மணிவாசகரின் திருவாசகம் எட்டாம் திருமுறையாகும் ஒன்பதின்மர் பாடிய திருவிசைப்பா ஒன்பதாந் திருமுறையாகும்,

ஒன்பதின்மரின் பெயர்கள் :—

திருமாளிகைத் தேவர், சேந்தனார், சேதிராயர், கண்டராதித்தர், பூந்துருத்தி, நம்பி காடவநம்பி, திருவாலி அமுதனார், புருடோத்தம நம்பி, கருவூர்த் தேவர், வேனாட்டடிகள்.

திருமூலரின் திருமந்திரம் பத்தாந் திருமுறையாகும். பன்னிருவரின் பெயர்களும் பாடியவையும் :—

**திருவாலவாயுடையார்** — திருமுகப் பாசுரம்.

**காரைக்காலம்மையார்** — திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், திருவிரட்டை மணிமாலை, அற்புதத் திருவந்தாதி.

**கல்லாடர்** :— திருககண்ணப்ப தேவர் திருமறம்.

**நக்கீரர்** :— திருமுருகாற்றுப் படை, கைலை பாதி காளத்தி பாதி அந்தாதி, காரெட்டு, பெருந்தேவ பாணி, திருவெழு கூற்றிருக்கை, திருவலஞ்சுழி மும்மணிக் கோவை, கோபப் பிரசாதம், போற்றிக் கலிவெண்பா, ஈங்கோய் மலை எழுபது.

**கபிலதேவர்** :— மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை, திருவந்தாதி.

**பரணர் :—** திருவந்தாதி.

**சேரமான் பெருமாள்—** பொன் வண்ணத்தந்தாதி.

**ஐயடிகள் காடவர் கோன்—** சேத்திரத் திருவெண்பா.

**நம்பியாண்டார் நம்பி :—** ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவெற்றியூர் ஒரு பா ஒரு பஃது.

**அதிரா அடிகள், இளம் பெருமானடிகள் (இருவர்) :—** மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவை, சிவபெருமான் திருமும்மணிக் கோவை.

**சேக்கிழாரின் பெரிய புராணம் :—** பன்னிரண்டாம் திருமுறை.

## திருஞான சம்பந்தர்

சீர்காழியிலே அந்தண குலத்திலே சிவபாத விருதயருக்கும் பகவதி அம்மையாருக்கும் தவப் புதல்வராய்த் தோன்றியவர். பார்வதியின் ஞானப் பாலுண்டு குழந்தைப் பருவத்திலேயே பாடும் திறம் பெற்றவர். எனவே இவர் ஞானக் குழந்தை என்று அழைக்கப் பெற்றார். தந்தையாரின் தோளில் அமர்ந்து சிவத்தலங்கள் பலவும் சென்று, பக்திப் பாமாலைகள் தொடுத்து, பதினாறு வயதுக்குள்ளாகவே 383 திருப்பதிகங்களில் 4147 பாடல்களைப் பாடினார்.

இவர் திருமறைக் காட்டில் கோயிற் கதவங்கள் மூடுமாறும், காவிரியாற்றில் செலுத்துவோரின்றி ஓடம் செல்லுமாறும், திருமயிலையில் பூம்பாவை குடத்தினின்றும் உயிர் பெற்று எழுமாறும் பாடி அற்புதங்கள் நிகழ்த்தியிருக்கிறார்.

பாண்டி நாட்டில் குலச்சிறையார் எனும் அமைச்சரும் மங்கையர்க்கரசியார் எனும் அரசியாரும், அரசன்

கூன்பாண்டியனைச் சமண சமயத்தினின்றும் சைவ சமயத்துக்கு மாற்ற வேண்டும் என ஞானசம்பந்தரைத் தம் நாட்டிற்கு அழைக்க இவர் அங்குச் சென்று மன்னன் கூன் பாண்டியனுக்கு இருந்த மாளாத வெப்ப நோயைத் திருநீற்றாலும், தீப்பாட்டாலும் நீக்கியதோடு அனல் வாதம், புனல் வாதங்களில் சமணர்களை வென்று சைவ சமயத்தின் மாண்பை யாவரும் உணருமாறு செய்திருக்கிறார்.

இவர் சிவபெருமானிடமிருந்து ஐந்து எழுத்துக்கள் பொறித்த பொற்றாளங்கள், முத்துச் சிவிகை, சிவசின்னங்கள், ஆயிரம் பொற்குழிகள், படிக்காசு முதலியவற்றைப் பெற்ற பெருமையுடையவர். இவர் காலம் கி. பி. 601 முதல் 650 வரை என்பர்.

## திருநாவுக்கரசர்

திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் புகழனார்க்கும் மாதினியார்க்கும் புதல்வராகத் தோன்றியவர். இவர்க்குப் பெற்றோர் இட்ட பெயர் மருள் நீக்கியார். இவர் தம் தமக்கையார் திலகவதியார் ஆவார். இவர் தாய் தந்தையாரை யிழந்த நிலையில் தமக்கு ஆதரவாக இருந்த தமக்கையார் திலகவதியாரால் பேணப்பட்டு, கல்வியறிவும் ஊட்டப்பெற்றவராவார்.

பாடலிபுரத்தில் சென்று சமண சமயம் பற்றி அறிந்து சமண சமயத்தைச் சார்ந்தார் என்றும், அப்போது இவர்க்குத் தருமசேனர் எனும் பெயர் இருந்தது என்றும் அறிகிறோம்.

இவர் சைவத்தை விடுத்துச் சமணத்தைச் சார்ந்ததால் மனம் வருந்திய திலகவதியார் திருவதிகை வீரட்டானத்துக் கோயில் கொண்ட பெருமானை இரவும் பகலும் வணங்கி வேண்டி வந்தமையால், சிவபெருமான்

இவர்க்குச் சூலை நோய் தந்து பின்னர் ஆட்கொண்டான் என்பர்.

சமணத்தை விடுத்து மீண்டும் சைவம் சார்ந்த இவரைச் சமணர்கள், சமண அரசன் மகேந்திர பல்லவன் ஆதரவு கொண்டு துன்புறுத்தினர் என்றும், இறைவன் அருளால் எல்லாத் துன்பங்களிலிருந்தும் மீண்டார என்றும், மகேந்திர பல்லவனும் சைவ சமயத்தைச் சார்ந்து, திருவதி கையில் 'குணபர தீச்சரம்' எனும் கோயில் கட்டினான் என்றும் அறிகிறோம்.

இவர் திருஞான சம்பந்தரால் 'அப்பரே!' என அழைக்கும் பேறு பெற்றவர். இவர் 81 ஆண்டு காலம் வாழ்ந்தார். இல்லறத்தில் இறங்காமல் இறையருள் பெற்றவர் இவர். இவர் பாடியுள்ள தலங்களின் எண்ணிக்கை 126 ஆகும்.

## சுந்தரர்

திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் சடைய னாருக்கும் இசை ஞானியர்க்கும் மகனாகத் தோன்றியவர் சுந்தரர். பார்வதி தேவியின் இரு பணிப் பெண்களாகிய அநிந்திதை, கமலினி எனும் பெண்கள் மீது இவர் காதல் கொண்டார். எனவே இம்மூவரையும் மண்ணுலகில் பிறக்கச் செய்து இல்லறம் செய்து தம்மை மீண்டும் அடையுமாறு ஆண்டவன் அருளினான் என்பர்.

குழந்தை சுந்தரரை நரசிங்க முனையதரையர் எனும் அரசர் எடுத்து வளர்த்தார். மணப்பருவம் அடைந்த வுடன், புத்தூர் சடங்கவி சிவாச்சாரியார் மகளை மணம் புரிய ஏற்பாடாயிற்று. மணப்பந்தலில் சிவபெருமான் கிழ வேதியராய்த் தோன்றி ஓர் ஓலையைக் காட்டிச் சுந்தரரை அடிமையாகக் கொண்டார். இவ்வாறு இறைவன் சுந்தர ரைத் தடுத்தாட் கொண்டார். இறைவனைச் சுந்தரர்

வன்மையாகப் பேசியதால் அவரை 'இறைவன் வன்றொண்டர்' என்றும் அழைப்பர்.

திருவாரூரில் சுந்தரரை இறைவனே மணக்கோலம் கொள்ளுமாறு கூறினார். சுந்தரரைத் தமக்குத் தோழர் என்றும் கூறினார். எனவே சுந்தரர் தம்பிரான் தோழர் என அழைக்கப் பெற்றார்.

சிவபெருமானைப் பாடிப் பல அற்புதங்களை நிகழ்த்தி தமது பதினெட்டாம் வயதில் முத்தி அடைந்தார்.

## மணிவாசகர்

பாண்டி நாட்டில் திருவாதவூரில் அந்தணர் குலத்தில் மாணிக்க வாசகர் தோன்றினார். இவரை வாதவூர் அடிகள் என்றும் அழைப்பர். இவரது இயற்பெயர் இன்னது என்று புலப்படவில்லை. தென்னவன் பிரம ராயன் என்ற பட்டத்தோடு பாண்டிய மன்னனின் அமைச்சராய் இருந்தார். இவருக்காக இறைவன் நரி களைப் பரிகளாக்கித் திருவிளையாடல் புரிந்தார் என்பர். மூதாட்டி வந்திக்காகக் கூலியாளாகி இறைவன் பிரம்படி பட்டது இவர் பொருட்டே என்பர்.

இவர் பாடிய பாமாலை திருவாசகம் எனப்பட்டது. 'திருவாசகத்துக்கு உருகார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' எனும் பழமொழியை வைத்து அதன் மேன்மையை நாம் அறிந்து கொள்ளலாம்.

திருவாசகம் 51 பிரிவுகளையுடையது. திருவாசகத்தை ஜி. யு. போப் எனும் மேனாட்டு அறிஞர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இவர் காலம் பற்றி கி. பி. மூன்றாம் நூற்றாண்டு என்றும், ஐந்தாம் நூற்றாண்டு என்றும் எட்டாம் நூற்றாண்டு என்றும் பல கருத்து வேறு பாடுகள் நிலவுகின்றன.

## திருமூலர்

பத்தாம் திருமுறையான திருமந்திரம் பாடியவர் திருமூலர். தமிழகத்தில் வாழ்ந்த எண்ணற்ற சித்தர்களுள் முதலிடம் பெற்றவர் திருமூலர். இவர் காலத்தைக் கி.பி. 100க்கும் 900க்கும் இடைப்பட்டது என்பர்.

திருமந்திரம் 3000 செய்யுட்களைக் கொண்டது. எண் வகை சித்திகளையும், சைவ சித்தாந்தக் கருத்துக் களையும் கூறுவது திருமந்திரம்.

'அன்பே சிவம்', 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற கருத்துத் திருமந்திரக் கருத்துக்களே. மாயா தத்துவம், மனோ தத்துவம், ஆன்ம தத்துவம் முதலிய வற்றையும் இந்நூல் விளக்குகிறது. இந்நூற் பொருள் முற்றும் கற்றவர்க்கேயன்றி மற்றையோர்க்கு எளிதில் விளங்கா தன்மையுள்ளது.

## சேக்கிழார்

சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையை நம்பி யாண்டார் நம்பி, திருத்தொண்டத் திருவந்தாதியாகப் பாடினார். அதனைச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் என விரித்துப் பாடியுள்ளார். மூவர் தேவாரங் களும், கல்வெட்டுக்களும், தல புராணங்களும் இவர்க்குத் துணையாக இருந்தன. திருத்தொண்டர் புராணமே பெரிய புராணம் எனப்படுகிறது.

இது 13 சருக்கங்களில் 4253 பாடல்களைக் கொண் டுள்ளது. இவரது காலம் கி.பி. 1012—1042 என்பர். சேக்கிழார் உத்தம சோழப் பல்லவராயர் என்னும் பட்டத்துடன் அநபாயச் சோழனுக்கு அமைச்சராக இருந்தார். இராசேந்திர சோழன் என்றும் இரண்டாம் குலோத்துங்கன் என்றும் அழைக்கப்பட்டவன் அநபாயன்.

அநபாயச் சோழன் சீவகசிந்தாமணி காப்பியத்தில் உள்ளத்தைக் கொள்ளை கொடுத்துச் சமணசமயச் சார்புடையனாதலைத் தடுப்பதற்காக, அறுபத்து மூன்று நாயன்மார்களின் கதையை அருந்தமிழிலே அவனுக்கு எடுத்து ஓதினார். பின்பு தில்லையில் அவர்கள் வரலாற்றை அழகு தமிழிலே பக்திச் சுவை ததும்ப வடித்துத் தந்தார்.

இதனை ஒரு பெருங்காப்பியமாகப் போற்றுவாரும் உளர். பெரிய புராணம் தமிழக வரலாற்றையும், கலை, சமயம், தலங்கள் முதலியவற்றையும் தெளிவுற விளக்கும் வரலாற்றை உடைய காப்பியமாக விளங்குகிறது என்பர்.

சேக்கிழார் தொண்டை நாட்டில் உள்ள குன்றத் தூரில் சைவ வேளாளர் மரபில் தோன்றியவர். இவருடைய இயற்பெயர் அருண்மொழித் தேவர், சேக்கிழார் என்பது குடிப்பெயர் என்பர்.

சிவனடியார்கள் வரலாற்றைத் தில்லையில் இவர் பாடத் தொடங்கியபோது, சிவபெருமானே 'உலகெலாம்' என்று அடியெடுத்துக் கொடுத்தார் என்பர்.

சேக்கிழார், திருத்தொண்டர் புராணத்தை ஓராண்டில் எழுதி முடித்தார்,அரசன் அநபாயச் சோழன் சேக்கிழாரை யானை மீதேற்றி, தன் கையால் குடை பிடித்து, சாமரம் வீசி, நகர்வலம் செய்வித்து, நடராசப் பெருமான் முன் நூலை அரங்கேற்றச் செய்தான். "தொண்டர் சீர் பரவுவார்" எனும் பட்டப் பெயரும் வழங்கிச் சிறப்பித்தான்.

## திருப்புகழ்

திருப்புகழ் அருணகிரி நாதரால் இயற்றப் பெற்றது. இவர் ஒரு விலை மாதுக்கும் செட்டியாருக்கும் பிறந்தவர் என்பர். இளமையிலேயே சிற்றின்பத்தை மிகவும் விரும்பி

உழன்று கெட்டுப் பின்னர் முருகப் பெருமான் அருளால் அவன் புகழ் பாடினார். அப்பாடல்களே திருப்புகழ்.

சந்த விருத்தத்தால் அமைந்த இத்திருப்புகழ்ப் பாக்களில் சொல்லும், பொருளும், இசையும், தாளமும், பக்தியும் சிறந்து திகழ்கின்றன. ஆறுபடை வீட்டையும், சிதம்பரம், வள்ளிமலை, திருககழுக்குன்றம் முதலிய தலங்களையும் கற்பார் மனமுருகுமாறு பாடியுள்ளார்.

திருப்புகழ் தவிர கந்தரனுபூதி, கந்தர் அலங்காரம் திரு வகுப்பு வேல் விருத்தம், உடற்கூற்று வண்ணம் முதலியவற்றையும் இவர் பாடியுள்ளார்.

## கந்த புராணம்

கச்சியப்ப சிவாச்சாரியாரால் இயற்றப் பெற்றது கந்த புராணம். பெரும்பாலும் கட்டளைக் கலிப்பாவால் அமைந்த இபபுராணத்தை நோக்கின் முருகப்பெருமானின் பிறப்பு, பெருமை, புகழ் பாடப் பெறுகின்றன.

## திருவிளையாடற் புராணம்

இது பரஞ்சோதி முனிவரால் பாடப் பெற்றது. சிவ பெருமானின் திருவிளையாடல்களை விளக்கும் சைவ இலக்கியமாக இது திகழ்கிறது, பரஞ்சோதி முனிவர் மதுரையில் பிறந்தவர். சைவ சமயத்தைச் சார்ந்தவர். இவரது ஊர் வேதாரணியம் என்பாரும் உளர் இவர் நானூறு ஆண்டு காலத்துக்கு முன்பு வாழ்ந்தவர் என்பர்.

திருமலை நாயக்கன் காலத்தில், இநநூல் அவ்வரசன் அவைக்களத்தில் அரங்கேற்றப் பட்டது என்பர். அரங்கேற்றம் செய்தவன் பரஞ்சோதி முனிவரின் மகன் சரசுவதி பண்டாரம் ஏன்பர். திருவிளையாடற் புராணம் 64 படலங்களைக் கொண்டது.

## வேறு பிற புராணங்கள்:

| பாடியவர் | | நூலின் பெயர்கள் |
|---|---|---|
| நிரம்ப அழகிய தேசிகர் | : | சேது புராணம், திருப்பரங்கிரிப் புராணம். |
| அதிவீரராம பாண்டியன் | | கூர்ம புராணம், இலிங்க புராணம், காசி காண்டம், நைடதம். |
| கச்சியப்ப முனிவர் | | விநாயக புராணம், தணிகை புராணம். |
| வீரகவிராயர் | | அரிச்சந்திர புராணம். |
| சிவஞான முனிவர் | | கா[illegible] புராணம். |
| சிவப்பிரகாசர் | | காளத்தி புராணம். |

# 10. வைணவ இலக்கியம் (நாலாயிரம்)

விஷ்ணுவைக் கடவுளாக வழிபடுபவர்கள் வைணவர்கள் எனப்படுவர். விஷ்ணு என்பதற்கு 'நிறைவு' என்று பொருள்.

வைணவ சமயத்தைத் தழைக்கச் செய்தவர்கள் ஆழ்வார்கள்' எனப்படும் பன்னிருவர் ஆவர். அவர்கள் அருளிய பக்தி பாமாலைகளே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் ஆகும். 12 ஆழ்வார்களும் பாடியவை 3776 பாடல்கள். திருவரங்கத்து அமுதனார் பாடிய இராமாநுஜர் நூற்றந்தாதியையும் சேர்த்து 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' எனத் தொகுத்துள்ளனர். தொகுத்தமைத்தவர் 'நாதமுனிகள்' என்பவர். இவர் காலம் கி.பி. 9ஆம் நூற்றாண்டு.

## பன்னிரு ஆழ்வார்கள்

பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை ஆழ்வார், நம்மாழ்வார், மதுரகவி ஆழ்வார், குலசேகர ஆழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடி ஆழ்வார், திருப்பாண் ஆழ்வார், திருமங்கை ஆழ்வார் எனப்படுவர்.

## 1. பொய்கை ஆழ்வார்

இவர் காஞ்சீபுரத்தில் திருவெஃகா என்னும் பதியில் உள்ள ஒரு பொய்கையில் பொற்றாமரை மலரில் (கி.பி. 7-ம் நூற்றாண்டில்) சித்தாத்திரி ஆண்டு, ஐப்பசித் திங்கள் வளர் பிறையில் பொருந்திய அட்டமி திதியில் செவ்வாய்க்கிழமை திருவோண நட்சத்திரத்தில் திருமாலின் ஐந்து படைகளில் ஒன்றாகிய பாஞ்சசன்னியம் என்று கூறப்படும் திருச்சங்கின் அம்சம் உடையவராய்ப் பொய்கை ஆழ்வார் அவதரித்தார் என்பர்.

இவர் திருமாலினிடத்து என்றும் வெகுவான அன்புடையவராய் இலங்கினார். அவர் "என் அன்பு திருமாலை அணுகு என்று சொல்கின்றது;

எனது நா அப்பெருமானுடைய ஆழி ஏந்திய தோளை ஏத்து எனச் சொல்கின்றது; என் செவிகள் அவ்விறைவனது புகழைக் கேள் என்கின்றன; என் கண்கள் பிறப்பு, இறப்பு இல்லாத அவ்விறைவனைக் காண் என்று சொல்கின்றன" என்பார்.

திருமாலினது குணங்களையும், செயற்கருஞ் செயல்களையும் சொல்லி வாழ்த்துவார்; திருமாலின் திருவடிகளைப் போற்றாதார்க்கு வீட்டின்பம் இல்லை என்பார். இங்கனம் கண்டோர் அனைவரும் பாராட்டி வணங்கிப் போற்றும் உண்மை அறிவுச் செல்வராய்ப் பொய்கையார் விளங்கினார்.

இவரால் பாடப்பட்ட பெருமை பொருந்திய நகரங்கள்; 1. திருவரங்கம், 2. திருவிண்ணகர், 3. திருக்கோவலூர், 4. திருவெஃகா, 5. திருவேங்கடம், 6. திருபாற்கடல், 7. பரமபதம் முதலிய ஊர்களும், அங்கு நிலை பெற்ற இறைவனையும் ஆகும்."

## 2. பூதத்தாழ்வார்

'தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து' என்று ஔவையாரால் புகழ்ந்துரைக்கப்பட்ட தொண்டை நாட்டில் பல்லவ மன்னர்களால் சிறந்த ஒரு நகரம் அமைக்கப்பட்டது. அந்நகரம் சென்னைக்குத் தெற்கில் கடற்கரையில் உள்ளதால் அதற்குக் 'கடல் மல்லை' என்று பெயரிடப்பட்டது. மாமல்லன் என வழங்கப் பெற்ற பல்லவ மன்னனால் தோற்றுவிக்கப்பட்ட நகரமாதலினால் அதற்கு மாமல்லபுரம் என்றும், மகாபலி புரம் என்றும் மக்களால் பெயரிட்டு வழக்கில் வந்தது. மாமல்லனின் கலை வளத்தைச் சிற்பங்களின் வாயிலாகச் சித்தரித்து, மக்கள் யாவரும் கண்டு களிக்கும் வண்ணம் எழில் அமைந்த கலைக் கூடமாகக் காட்சி அளிக்கும் இம்மகாபலிபுரத்தில் திருமால் சயனத் திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். இறைவன் ஏனைத் திருப்பதிகளில் பாம்பினையிற் பள்ளி கொண்டிருப்பான். ஆனால் இப் பதியில் தலத்தில் பள்ளி கொண்டிருக்கின்றான்.

ஆகையால், இப்பதியினைக் 'கடல் மல்லைத் தல சயனம்' என்றும் சொல்லுவர்.

நரசிம்மவர்ம பல்லவனின் கலை மாண்பினை விளக்கும் கலைக் கோயிலாக உள்ள இம்மகாபலிபுரத்தில் மல்லிகைப் புதரின் நடுவில் நீலோற்பல மலரில் (கி. பி. 7ம் நூற்றாண்டில்) சித்தார்த்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள் வளர்பிறையில் அமைந்த நவமி திதியில் புதன் கிழமை அன்று அவிட்ட நட்சத்திரத்தில், திருமாலின் ஐம்படைகளில் ஒன்றாகிய கௌமோதகி என்னும் கதாயுதத்தின் அம்சமாய் பூதத்தாழ்வார் அவதரித்தார் என்பர்.

பூதத்தாழ்வாரின் மனம் திருமாலின் திருவடிகளையே நாடியது. எனவே, அவர் இவ்வுலக வாழ்க்கையைச்

சிறிதும் விரும்பவில்லை. அவர் மனக் கோயிலில் திருமாலை அமைத்து அவ்விறைவனை ஞானநீர் கொண்டு ஆட்டி, அப்பெருமான் திருவடிகளில் அன்பாகிய மலரை இட்டு, என்றும் அவனை ஆராதிப்பார். அவர் திருமாலின் திருவடிகட்குச் செந்தமிழ்ப்பாக்களால் ஆயினவும் என்றும் வாடாத வளம் பெற்ற நிலையில் அமைந்தனவுமாகிய செஞ் சொற்களால் ஆன பாமாலையைச் சாத்தியதால் 'யானே ஏழ்பிறப்பும் தவம் உடையேன்' என்று கூறுவார். 'திருமாலைச் செங்கண் நெடியானை எங்கள் பெருமானைக் கைகூப்பி வணங்கப் பெற்றதனாலின், யான் இனி ஒரு குடை கீழ் மண்ணுலகை ஆள்வதையும் வேண்டேன்; தேவர்கட்கும் தேவனாய்த் தேவருலகை ஆள்வதையும் வேண்டேன், என்று சொல்லுவார். அவரைக் கண்டவர்கள் 'இவர் நம்மைப் போன்ற மக்கட் பிறப்பினர் அல்லர்; தெய்வப் பிறப்பினர்' என்று வணங்கித் துதிப்பார்கள். இங்ஙனம் கண்டோர் அனைவரும் பாராட்டி வணங்கிப் போற்றும் உண்மை அறிவுச் செல்வராய்ப் பூதத்தாழ்வார் விளங்கினார்.

பூதத்தாழ்வார் பாடியருளிய இரண்டாம் திருவந்தாதியில்,

**"யானே தவம்செய்தேன் ஏழ்பிறப்பும் எப்பொழுதும்**
**யானே தவம் உடையேன் எம்பெருமான்— யானே**
**இருந்தமிழ்நன் மாலை இணையடிக்கே சொன்னேன்**
**பெருந்தமிழன் நல்லேன் பெரிது."**

என்னும் செய்யுள் ஒன்றாகும். இச்செய்யுளின்கண் அவர் தாம் நல்லவராக ஆயினமைக்கு உரிய காரணத்தைக் கூறியுள்ளார்.

இவரால் பாடப்பட்ட பெருமை பொருந்திய நகரங்கள்: 1. திருவரங்கம், 2. தஞ்சை, 3. திருக்குடந்தை, 4. திருமாலிருஞ்சோலைமலை 5. திருக்

கோட்டியூர், 6. திருத்தண்கால், 7. திருக்கோவலூர், 8. திருக்கச்சி, 9. திருப்பாடகம், 10. திருநீர்மலை, 11. திருக்கடன் மல்லை, 12. திருவேங்கடம், 13. திருப்பாற் கடல் முதலிய ஊர்களும், அங்கு நிலை பெற்ற இறைவனையும் ஆகும்.

## 3. பேயாழ்வார்

தொண்டை நாட்டில், சென்னையைச் சார்ந்து சிறந்து விளங்கும் செல்வர்கட்கும், கலையறிவிற் சிறந்த அறிஞர்கட்கும் இருப்பிடமாகவும்; சைவ வைணவர்களின் கோயில்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் தலமாக வும், செல்வர்கள் பலர் பூம்பொழில்களோடு கூடிய பெரிய பெரிய மாளிகைகளை அமைத்துக் கொண்டு வாழ்வதற்கு வகையுள்ள உறைவிடமாகவும் விளங்குவது திருமயிலை என்னும் நகரமாகும்.

இத்தகைய சீரும் சிறபபும் ஒருங்கமைந்த திருமயிலை என்னும் இந்நகரத்தில் வைணவர்களின் திருக் கோயி லாகத் திகழும் ஆதிகேசவப் பெருமாள் கோயிலின் திருக் கிணற்றில செவ்வல்லி மலரின்கண் (கி. பி. 7-ம் நூற்றாண்டு) சித்தாத்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள், வளர்பிறையில் (சுக்ல பட்சம்) பொருந்திய தசமி திதியில் வியாழக்கிழமையின்று சதய நாளில் எம்பெருமானின் ஐம்படைகளுள் ஒன்றாகிய நாந்தகம் என்னும் வாளின் அம்சம் உடையவராய்ப் பேயாழ்வார் அவதரித்தார் என்பர்.

பேயாழ்வார் மனம் இளமையிலேயே கல்வியில் சென்று பதிந்தது. எல்லா நூற்பொருள்களும் அவருக்கு இனிது விளங்குவனவாயின. அவரது மனம் காந்தத்தில் ஊசி பொருந்துவது போலத் திருமாலின் திருவடித் தாமரைகளில் சென்று பொருந்தி அவற்றிலேயே நிலைத்து விட்டது. அதனால் அவர் எப்பொழுதும் அருந்தமிழ்ப்

பாக்களால் பரமன் புகழினைப் பாடிப்பாடி, அதனால் களிப்பு மிக்கவராய் ஆடி ஆடித் திரிவார். அவரைக் கண்டவாகள், 'இவர் கருவிலேயே ஞானமாகிய திருவுடையராய் அவதரித்தவர்; இவரை மெய்ஞானச் செல்வர் என்று போற்றுவார்கள்; இவரை வணங்கி னால் நாம் மக்கட் பிறப்பை எய்தியதனால் அடைவதற் குரிய பயனை அடைவோம்' என அவருடைய திருவடி களை வணங்குவார்கள். இவ்விதம் கண்டோர் அனை வரும் வணங்கும் வாய்ப்புடையவராய் விளங்கினார் பேயாழ்வார்.

அவர் பாடியருளிய மூன்றாம் திருவந்தாதியில்;

**"தொட்ட படை எட்டும் தோலாத வென்றியான்**
**அட்ட புயகரத்தான் அஞ்ஞான்று— குட்டத்துக்**
**கோள் முதலை துஞ்சக் குறித்தெழுந்த சக்கரத்தான்**
**தாள் முதலே நங்கட்குச் சார்வு."**

என்னும் பாடல் ஒன்று. திருமாலின் திருவடிகளே மக்கட்குப் பற்றுக் கோடாகும் என்னும் கருத்தினை இப்பாடல பகர்கின்றது.

இவரால் பாடப் பெற்ற தலங்கள் :

1. திருவரங்கம், 2. திருக்குடந்தை, 3. திருவிண்ணகர். 4. திருமாலிருஞ் சோலைமலை, 5. திருக் கோட்டியூர், 6. அட்டபுயகரம், 7. திருவேளுக்கை, 8. திருப்பாடகம், 9. திருவெஃகா, 10. திருவல்லிக்கேணி, 11. திருக் கடிகை, 12. திருவேங்கடம், 13. திருப்பாற்கடல், 14, பரமபதம் முதலிய ஊர்களும் அங்கு நிலைபெற்ற இறைவனையும் ஆகும்.

முதலாழ்வார்கள் என மக்களால் போற்றிப் புகழப் படும் பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகிய மூவரும் சம காலத்தவர்கள். அவர்கள் மாந்தருடன் கூடியிருத்தற்கு மன இசையாதவர்களாய், ஒருவரை ஒருவர் அறியாமல்

ஒருநாள் இருந்த ஊரில் மறுநாள் இராமல், ஊர் ஊராய்ச் சென்று இறைவனைச் சேவித்துக் கொண்டிருந்தார்கள். இவர்கள் இங்ஙனம் இருக்கையில் இறைவன இம்மூவரை யும் சேர்ப்பித்தல் வேண்டும் எனத் திருவுளம் கொண்டு, திருக்கோவலூருக்குச் செல்ல வேண்டும் என்னும் எண்ணத்தை இம்மூவருக்கும் உண்டாக்கியருளினான் என்பர். அதனால் இம்மூவரும் தனித்தனியாகத் திருக் கோவலூருக்குச் சென்று அத்தலத்தில் உள்ள திருமகள் நாதனைத் துதித்தார்கள்.

உலகத்து உயிர்களை உறங்கச் செய்யும் ஆற்றல் வாய்ந்த மாலைப் பொழுதும் வந்தது. எங்கும் இருள் கவிந்தது. இம்மூவருள் பொய்கையார் முதற்கண் ஒரு வைணவருடைய அழகிய இல்லத்தை அடைந்து, அவ்வில் லத்தின் இடைகழியில் அந்த இல்லத்தாரின் இசைவு பெற்றுப் படுத்துக் கொண்டார். பின்பு பூதத்தாரும் பொய்கையார் பள்ளிக் கொண்டிருக்கும் வீட்டை யடைந்து, படுக்க இடம் கிடைக்குமோ என வினவ, அதனைச் செவிமடுத்த பொய்கையார் பூதத்தாரிடம் தாம் தங்கியுள்ள இடத்தில் 'ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்' என்று கூறி அவரையும் அவ்விடத்திற்கு எழுந்தருளும்படி அழைக்க, பூதத்தாரும் அவ்வாறே செல்ல அவ்விருவரும் அங்கு அமர்ந்தனர். அப்பொழுது ஆண்டவனின் அடியவராகிய பேயாரும் அங்குச் சென்று படுத்துக் கொள்ள இடம் கேட்க, பொய்கையார் பேயாரை நோக்கி 'இங்கு உள்ள இடத்தில், ஒருவர் படுக்க லாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்' எனக் கூறி அவரையும் அழைத்துக் கொண்டார். எனவே, முதலாழ்வார்களாகிய அம்மூவரும் அங்கு நிற்கலாயினர். பின்னர் அவர்கள் ஒருவரை ஒருவர் உசாவி உணர்ந்து கொண்டு, மிக்க மகிழ்ச்சியுடையவர்களாய் உரையாடிக் கொண்டிருக்கும் காலத்தே, திருமாலும் அவர்கள் நிற்கும் இடத்தின் இடையில் அவர்களோடு தாமும் ஒருவராய்ச்

சென்று நின்று கொண்டு, அவர்கட்கு நெருக்கத்தை உண்டாக்கினார் ; வெளியிலும் செல்ல முடியாத பெரு மழையையும் உண்டாக்கி அருளினார்.

இறைவனால் ஏற்படுத்தப்பட்ட நெருக்கத்தினை ஞானச் சுடர் விளக்கின் மூலம் அறிந்த ஆழ்வார்கள். அவர் தம் அழகிய மேனியை அகக் கண்களால் கண்டு, தம் தூய்மை பொருந்திய எண்ணத்தினால் திருமாலின் தெள்ளிய இயல்பினைத் தெவிட்டாத தீந்தமிழில் அவனியில் உள்ளோர் உய்யும் பொருட்டு அந்தாதிப் பாடலாக அறிவிக்கத் தொடங்கினர். முதற்கண் பொய்கை ஆழ்வார்,

> **"வையம் தகளியா வார்கடலே நெய்யாக
> வெய்ய கதிரோன் விளக்காக — செய்ய
> சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
> இடராழி நீங்குகவே என்று"**

எனத் தொடங்கி,

> **"ஓரடியும் சாடுதைத்த ஒண்மலர்ச் சேவடியும்
> ஈரடியும் காணலா மென்னெஞ்சே — ஓரடியில்
> தாயவனைக் கேசவனைத் தண்துழாய் மாலைசேர்
> மாயவனை யேமனத்து வை"**

என முடியும் நூறு பாட்டுக்களைக் கொண்ட ஓர் அந்தாதி யைப் பாடியருளினார்.

பொய்கையாழ்வார் முதற்கண் ஆரம்பித்து அந்தாதி பாடியதால் இவரது அந்தாதி முதல் திரு அந்தாதி என வழங்கப்பட்டது.

பின்பு, பூதத்தாழ்வார் இரண்டாவதாக இறைவன் மீது இரண்டாம் திரு அந்தாதி என வழங்கும் நூறு பாடல்களை,

**"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா — நன்புருகி
ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்"**

என்ற பாடலைத் துவக்கி,

**"மாலே நெடியோனே கண்ணனே — விண்ணவர்க்கு
மேலா வியன் துழாய்க் கண்ணியனே — மேலால்
விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே— என்றன்
அளவன்றால் யானுடைய அன்பு"**

என்ற பாடலை இறுதியாக்கி அந்தாதியை முடித்துள்ளார்.

மூன்றாவதாக பேயாழ்வார் அவர்கள் பரமனின் பான்மையைப் பறை சாற்றும் பரந்த உள்ளத்துடன், தாம் கண்ட காட்சியை முதலிருவர் போன்றே அந்தாதியாகப் பாட அவா உள்ளவராய், திருமாலின் கோலத்தைத் தெரிவிக்கும் எண்ணத்தவராய் முதற்கண்,

**"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கண் அணிநிறமும் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று"**

என்றுப் பாடி அந்தாதியின் நூறாவது செய்யுளாக,

**"சார்வு நமக்கென்றும் சக்ரத்தான் தண்துழாய்த்
தார்வாழ் வரைமார்பன் தான்முயங்கும்—காரார்ந்த
வான்அமரும் மின்னிமைக்கும் வண்தா மரைநெடுங்கண்
தேன் அமரும் பூமேல் திரு"**

என்ற பாடலை அந்தாதியின் இறுதிச் செய்யுளாகப் பாடி பரந்தானின் பண்பினை மூன்றந்திரு அந்தாதியை முடித்தார்.

இங்ஙனம் முதலாழ்வார்கள் மூவரும் திருக்கோவலூரில் கூடிப் பரமனை வேண்டி அந்தாதிப் பாடினார்கள்.

## 4. திருமழிசையாழ்வார்

"தொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என்று தமிழகம் தழைக்க நீதி நூல் வகுத்த ஔவையாரால் பாராட்டப் பெற்ற தொண்டை நாட்டில், கடலுக்கு மேற்கில் காஞ்சீபுரத்திற்குக் கிழக்கில் ஓர் தலம் உளது. அது திருமழிசை எனும் பெயர் பெற்றது. பார்க்கவர் என்னும் முனிவர் திருமாலைக் குறித்து "தீர்க்க சத்திர யாகம்" செய்யும் இடமாகவும் அமைந்திருந்தது. அம் முனிவரது மனைவியார் கருவுற்றுப் பன்னிரண்டு திங்கள் கழித்து (கி. பி. 7ஆம் நூற்றாண்டு) சித்தாத்திரி ஆண்டு தைத் திங்கள் தேய்பிறையில் பிரதமை திதியில் ஞாயிற்றுக் கிழமை அன்று மக நட்சத்திரத்தில் திருமாலின் ஆழி அம்சமாய் கை கால் முதலிய உறுப்புக்கள் இல்லாத ஒரு பிண்டத்தைப் பெற்றெடுத்தார். பார்க்கவ முனிவரும் அவர் மனைவியுமாகிய கனகாங்கி என்னும் தேவ மாதும் மன வருத்தம் கொண்டு அப்பிண்டத்தை ஒரு பிரம்புப் புதரின் கீழே போட்டுவிட்டுப் போனார்களாம். பிறகு ஆழியங்கையனாகிய திருமால் திருமகள் சமேதராய் அங்கே எழுந்தருளி அப்பிண்டத்தை அன்புடன் நோக்கி அருள் புரிய அதனால் அப்பிண்டம் ஓர் அழகிய ஆண் மகவாகும் உறுப்புக்கள் அமையப் பெற்றது என்பர்.

**"சிக்கென்று சின்னக்கால் சீருடைப்பின் கண்ணுயிராய்**
**ஒக்கஉறுப் பாய்ந்தறிவார் உண்ணிறைந்தான்"**

என்கிறபடியே, எல்லா அவயவங்களும் அமைந்த அழகுள்ள ஆண் குழவியாகி அழத் தொடங்கிற்று.

இறைவனின் திருவருளால் உயிர் அமையப் பெற்று பசி தாகங்களில் ஈடுபட்டு, மக்கள் இல்லாத பிரம்புப் புதரில் அழுது கொண்டிருந்த அக்குழந்தையின் முன் எம்பெருமான் எழுந்தருளி இவருடைய பசி தாகம் தீரும் படி அருள்பாலித்து விட்டுச் சென்றார்.

அங்கு அப்பொழுது திருவாளன் என்றொருவன் பிரம்பு அறுக்கப் போய், அவ்விடத்தில் இக்குழந்தையின் அழுகுரலைக் கேட்டுத் தேடிச் சென்று அக் குழந்தையைக் கண்டு மிக்க மகிழ்ச்சியுடன் அதனை எடுத்து, பெற்றோர் கள் அங்கு ஒருவரும் காணப்படாததினால் 'தனக்கு மகப்பேறு இல்லாத குறையைத் தீர்க்கக் கருதிய இறைவன் இக்குழவியை நமக்களித்தான்' என்று மகிழ்ச்சியோடு தனது மனைவியான பங்கயச் செல்வியார் கையில் கொடுத்து கிடைத்த வரலாற்றையும் சொன்னாராம்.

பார்க்கவ முனிவருக்கும் அவரது மனைவியாகிய கனகாங்கிக்கும் மகனாகி, திருவாளன், பங்கயச் செல்வி ஆகிய இருவரின் செல்வ மைந்தராகி, திருமழிசை என்னுந் தலத்தில் அவதரித்த காரணத்தினால் திருமழிசை யாழ்வார் என்ற திருநாமத்தோடு வளர்ந்தார்.

உலக தத்துவங்களை உணர பற்பல சமயங்களிலும் புகுந்து ஆராய வேண்டும் என்கின்ற கருத்தினைக் கொண்ட இவர் சாக்கியம், சமணம் என்னும் சமயங்களில் உள்ள நூல்களை ஓதியுணர்ந்தார். பின்பு சைவ சமயத்தை அடைந்து சிவாக்கியர் என்னும் திருநாமத் துடன் சைவராய் விளங்கி அச்சமய நூல்களை ஆராய்ந்த வாறே அவர் பல தலங்களுக்குச் சென்று சிவபிரானைச் சேவித்து விட்டுத் திருமயிலையை அடைந்தார். அங்குப் பூஞ்சோலையில் இருந்த பேயாழ்வார் சிவ வாக்கியர் என்ற பெயருடன் சைவராக விளங்கும் திருமழிசை ஆழ் வாரைத் தடுத்தாட் கொள்ள வேண்டும் என்னும் நோக்கத் துடன் அவரிடம் முதற்பொருளாய் விளங்கி முக்தி நிலை அளிக்கும் முதல்வன் திருமகள் நாதனாகிய திருமாலே என்று நிலைநாட்டி விளக்கினார். இவ்வாறு சைவராக இருந்து சைவ மதத்தில் சிவ வாக்கியர் என்னும் பெயருடன் விளங்கிய திருமழிசையாழ்வாருக்கு பேயாழ் வார் நாராயணனின் திருமந்திரத்தை முறைப்படி உபதேசிக்க, திருமழிசையார் ஸ்ரீவைணவர் ஆனார்

பின்பு ஆழ்வார் தம்முடைய திருவவதாரத் தலமான திருமழிசைக்கு எழுந்தருளி, சாத்துகைக்குத் திருமண் வேண்டி கல்லிச் சோதித்த இடத்தில் திருமண் அகப்படாமல் வருந்தி துயில் கொள்ள, அவரது கனவில் திருவேங்கடநாதன் எழுந்தருளி திருமண் உள்ள இடத்தைக் குறிப்பிட்டுக் கூறியருளினான். இவரும் அங்கே திருமண் கண்டு எடுத்துப் பன்னிரண்டு திருநாமம் அணிந்து கொண்டு,

**"ஆல நிழல்கீழ் அறநெறியை நால்வர்க்கு**
**மேலை யுகத்துரைத்தான் மெய்த்தவத்தோன்—ஞாலம்**
**அளந்தானை ஆழிக் கிடந்தானை ஆல்மேல்**
**வளர்ந்தானைத் தான்வணங்கு மாறு"**

என வணங்கினார்.

பின்பு திருமழிசையாழ்வார், வைகுந்த மாநகரைத் தரத்தக்க பெருமையுடைய கும்பகோணம் என்னும் திருக்குடந்தையில், ஏரார் கோலம் திகழக் கிடக்கும் ஆராவமுதனைக் கண்டு துதிக்க எண்ணமுடையவராய், காஞ்சியினின்றுப் எழுந்தருளும்போது, இடையில் உள்ள பெரும்பலியூர் என்கின்ற கிராமத்தில் சென்று ஒரு திண்ணையிலேயிருந்து வேதம் ஓதிக் கொண்டிருந்த அந்தணர்கள் இவரைக் கண்டு 'நான்காம் வருணத்தினனாகிய இவன் கேட்கும்படி நாம் வேதம் ஓதக் கூடாது' என எண்ணித் தவிர்த்திருக்க, ஆழ்வாரும் அவர்கள் கருத்தை அறிந்து திண்ணையை விட்டிறங்கினார். மறையர்கள் உடனே வேதம் ஓதத் தொடங்கி, விட்ட இடத்து வாக்கியம் தோன்றாமையால் தட்டுத் தடுமாற, ஆழ்வாரும் அதைக் கண்டு குறிப்பால் காட்டியருள, பின்பு அவர்களுக்கு விடுபட்ட வாக்கியம் தோன்றி, அவர்கள் தெளிந்து வந்து ஆழ்வாரை வணங்கி, பிழையைப் பொருத்தருள்க என வேண்ட பக்திசாரரும் அவர்களுக்குப் பல இன்மொழிகளைக் கூறி விடைபெற்றுக் கொண்டு சென்றார்.

திருக்குடந்தை என்னும் கும்பகோணத்தை அடைந்த ஆழ்வார் ஆராவமுதனை வேண்டி பின் தாம் அது வரையில் பாடிய பாசுரங்களையெல்லாம் காவிரி நீரில் விட்டார்.

அவற்றுள் நான்முகன் திருவந்தாதிப் பாசுரங்களும் திருச்சந்த விருத்தப் பாசுரங்களும் எதிர்த்து வர அவற்றை எடுத்துக் கொண்டு ஆராவமுதனை வேண்டினார். பிறகு அவ்விரண்டு நூல்களையும் உலகத்திற்கு உதவி அப்பதியில் பல்லாண்டுகள் எழுந்தருளியிருந்தார் என்று சொல்லப்படுகிறது.

இங்ஙனம் திருமழிசையாழ்வார் அன்ன ஆகாரங்களை விட்டு காய் கிழங்குகளைச் சிறிது அமுது செய்து, நெடுங்காலம் நானிலத்தில் நாடுய்யும் நல்வழியினைப் பாசுரங்கள் மூலம் உணர்த்தியருளினார் என்பர். இவருடைய பாசுரங்கள் யாவும் தத்துவப் பொருளை உணர்த்துவதோடு வைகுந்த நாதனின் அன்பை உண்டாக்கி, இயற்கை வருணனைகள் எழிலாக அமையப் பெற்று பொருட்செறிவும், மிடுக்கும், இன்பமும் வாய்ந்தனவாய் விளங்குகின்றன.

திருமழிசையாழ்வாரால் பாடப் பெற்ற பாடல் தலங்கள்:

1. திருவரங்கம், 2. அன்பில், 3. திருப்பேர் நகர், 4. கும்பகோணம், 5. கவித்தலம், 6. திருக்கோட்டியூர், 7. திருக்கூடல், 8. திருக்குறுங்குடி, 9. திருப்பாடகம், 10. திருவூரகம், 11 திருவெஃகா, 12. திருவெவ்வுளூர், 13. திருவேங்கடம், 14. திருப்பாற்கடல், 15. துவாரகை, 16. பரமபதம் ஆகியவையாகும்.

## 5. நம்மாழ்வார்

நம்மாழ்வார் அவதரித்த நாடு பாண்டிய நாடு. ஔவையாரால் "பாண்டியா, நின்னாடுடைத்து நல்ல

தமிழ்'' என்று போற்றிய புகழ் வாய்ந்த பாண்டிய நாட்டில் திருக்குருகூரில் சதுர்த்த வருணத்தில் (கி.பி. 9ம் நூற்றாண்டு முதற்பகுதியில்) பிரமாதி ஆண்டு வைகாசித் திங்கள் பன்னிரெண்டாம் நாள் வளர் பிறையில், பௌர்ணமி திதியில், வெள்ளிக்கிழமை அன்று விசாக நட்சத்திரத்தில் கடக லக்னத்தில் சேனை முதலிகள் அம்சராய் நம்மாழ்வார் அவதரித்து அருளி னார் என்பர்.

இவ்வாழ்வாரின் மற்ற திருநாமங்கள் காரிமாறன், மாறன், சடகோபன், பராங்குசன், குருகைப் பிரான், திருக்குருகூர் நம்பி, வகுளாபரணன், அருள்மாறன், தென்னரங்கன் பொன்னடி, திருநாவீறுடைய பிரான் என்பனவாகும். இவருடைய தந்தையின் பெயர் பொற்காரியார். தாயின் பெயர் உடைய நங்கையார். வேளாளர் குலச் செல்வர்.

பிற்காலத்தில் நம்மாழ்வார் திருவாக்கினின்றும் ஒழுகிய தமிழ் அமிழ்தும், அதன் கருத்துச் சுவையுமே அவருக்கு அப்பெயரைத் தந்தன. அன்பில் ஆர்வமுடை யார் அனைவரும் அவரை 'நம் அறிஞர்', 'நம்அன்பர்' என்று துதிப்பார்கள். அத்தகைய சான்றாண்மைக் குணம் படைத்தவரது திருவாக்கை ஓதும் வாய்ப்பைப் பெறும் எல்லா சமயத்தாரும் அவரை 'நம் சமயத்தவர், நம் சமயத்தவர், எனப் போற்றுவர். பாவன்மையுடை யவர் அவரை பாவலர் எனவும், தத்துவ ஆராய்ச்சியினர் அவரை 'நம் தத்துவ மூர்த்தி' எனவும் தழுவுவர். ஒரு சமயத்தவர்க்கோ, ஓரினத்தவர்க்கோ மட்டும் உரிமை யாகாமல் அனைவர்க்கும் உரியவர் ஆகும் பேற்றினை பெற்றார்.

பிற்காலத்தில் இத்தனை புகழினைப் பெற்ற நம்மாழ்வார் பிள்ளைத் தன்மையில் பால் உண்ணாமலும், அழாமலும், அசையாமலும், மலர் கண்கள் திறவாமலும்

இருந்தமை வியத்தகு செயலாகவும், பெற்றோர்க்கு எல்லை கடந்த வருத்தத்தைத் தரும் செயலாகவுமே இருந்தது.

அழகிய நம்பி என்பவர், தாம் இயற்றியருளிய குரு பரம்பரை என்னும் நூலில், நம்மாழ்வார் பெற்றோருக்கு ஏற்பட்ட வருத்தத்தைப் பற்றிக் கூறும் செய்யுட்கள் கல்லையும் நெகிழ்வித்துக் கரையச் செய்வன.

உடைய நங்கையார் வருந்துதலைக் கண்ட காரியார் மிக்க வருத்தம் அடைந்து, அவ்வூர் திருக்கோயிலுக்கு எடுத்துச் சென்று இறைவன் முன் குழந்தையைக் கிடத்தி அதற்கு 'மாறன்' என்னும் திருநாமத்தைச் சூட்டி, அப் பெருமானை வேண்டி வணங்கிப் போற்றிக் குழந்தைக்கு அருள் புரிய வேண்டினார்கள்.

நம்மாழ்வார் நலம் பெற்ற பின் நீண்ட நாட்கள் யோகத்தில் இருந்து வந்தார். மதுரகவியார் நம்மாழ்வாரின் அவதாரச் சிறப்பை அறிந்து யோகத்திலிருந்து வந்த நம்மாழ்வாரிடம் சென்று, பதினாறு கலைகளும் நிரம்பிய மதியெனப் பொலியும் திருமுகத்தினராய் யோகத்தில் எழுந்தருளியிருந்த ஆழ்வாரை அணுகி தம் இரண்டு கைகளையும் நன்றாக ஓசையெழுமாறு தட்டினார். உடனே ஆழ்வார் கண் திறந்து மதுரகவியாரை நோக்கினார்.

மதுரகவியார் ஆழ்வாரை நோக்கி ''உயிரற்றதாகிய இயற்கையினால் ஆகிய உடம்பில் அணு வடிவாயுள்ள ஆன்மா வந்து புகுந்தால் எதனை அனுபவித்துக்கொண்டு எவ்விடத்தில் இன்பம் உண்டென்று எண்ணியிருக்கும்?'' என்ற பொருள் அடங்கிய, ''செத்தத்தின் வயிற்றிற் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'' என்று கேட்டார். அதற்கு ஆழ்வார் 'அந்த உடலின் தொடர்பினால் ஆகும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் இவ்வைந்தினால் வரும் இன்ப துன்பங்

களை அநுபவித்துக் கொண்டு அவ்விடத்திலேயே இன்புற்றேன் ; இளைத்தேன் என்று சொல்லிக் கொண்டே கிடக்கும்' என்ற பொருள் அடங்கும்படி, ''அத்தை தின்று அங்கே கிடக்கும்'' என்று திருவாய் மலர்ந்தருளினார். உடனே மதுரகவியார் அவருடைய திருவடிகளிலே தம்முடைய முடியுற வணங்கிக் கை கூப்பி நின்று, ''அன்புடையீர், அடியேனை ஆட்கொண்டருளவீர்'' என்று வேண்டினார் என்பர்.

உடனே நம்மாழ்வார் மதுரகவியாரைப் பார்த்து, ''நாம் இறைவனை அனுபவித்ததற்குப் போக்கு வீடாகச் சொல்லும் செய்யுட்களால் நீர் பாட்டோலையை அலங்கரிப்பீராக'' எனத் திருவாய் மலர்ந்தார்.

நம்மாழ்வார் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி எனும் நான்கு தமிழ் மறைகளை அருளினார். நான்கனுள் திருவிருத்தத்தை ருக்கு வேத சாரம் என்றும், திருவாசிரியத்தை யசுர் வேத சாரம் என்றும், பெரிய திருவந்தாதியைச் சாம வேத சாரம் என்றும் கூறுவர்.

உலகு உய்யச் சொல் மலர்களாகிய பாமாலைகளால் பரந்தாமனைப் பாடிய நம்மாழ்வார் திருப்புளியடியில் முப்பத்தோராண்டு எழுந்தருளியிருந்தார்.

மதுரகவி ஆழ்வார் கூட நம்மாழ்வாரை பதினொரு செய்யுட்களில் புகழ்ந்து பாடியுள்ளார். ஆழ்வார்களுள் நம்மாழ்வாரை அவயவி (உறுப்பி) எனவும் ஏனைய ஆழ்வார்களை இவருக்கு அவயவங்கள் (உறுப்புக்கள்) என்றும் கூறுவர்.

1. திருவிருத்தம் நூறு செய்யுட்களைக் கொண்டது.
2. திருவாசிரியம் ஏழு செய்யுட்களைக் கொண்டது.
3. பெரிய திரு அந்தாதி எண்பத்தேழு செய்யுட்களைக் கொண்டது.

4. திருவாய்மொழி ஆயிரத்து நூற்றிரண்டு செய்யுட்களைக் கொண்டது.

வைணவர்களின் தமிழ் வேதமாகிய நாலாயிரத்துள் முதல் மூன்றும் மூன்றாம் ஆயிரத்துள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. திருவாய்மொழி நான்காம் ஆயிரமாக அமைக்கப்பட்டிருக்கின்றது.

நம்மாழ்வாருடைய பாடல்களில் இறையுணர்வு, அன்பு இன்பம் பொதுமையின் சிறப்பு கவிதையின் எழில் முதலியன காணப்படும்.

நம்மாழ்வாரால் பாடப் பெற்ற பாடல் தலங்கள் :

1. திருவரங்கம், 2. திருப்பேர் நகர், 2. கும்பகோணம்' 4. திருவிண்ணகர், 5. திருக்கண்ணபுரம், 6. திருமாலிருஞ் சோலைமலை, 7. திருமோகூர், 8. திருக்கூர், 9. ஆழ்வார் திருநகர், 10. திருவரமங்கை, 11. திருப்புளிங்குடி, 12. திருப்பேரை, 13. திருவைகுந்தம், 14. வரகுணமங்கை, 15. பெருங்குளம் 16. திருக்குறுங்குடி, 17. திருக்கோவலூர், 18. திருவனந்தபுரம், 19. திருவண்பரிசாரம், 20. திருக்காட்கரை, 21. திருமூழிக்களம், 22. திருப்புலியூர், 23. திருச்செங்குன்றூர், 24. திருநாவாய், 25. திருவல்லவாழ், 26. திருவண்வண்டூர், 17. திருவாட்டாறு, 28. திருக்கடித்தானம், 29. திருவாறன், 30. திருவேங்கடம், 31. திருவயோத்தி, 32. துவாரகை, 33. வடமதுரை, 34. திருப்பாற்கடல், 35. பரமபதம், முதலியனவாகும்.

## 6 மதுரக்கவியாழ்வார்

இவர் பாண்டிய நாட்டில் திருக்கோளூர் என்னும் ஊரில் பிராமணர் மரபில் மணிவிளக்காய் (கி. பி. 9ஆம் நூற்றாண்டு முற்பகுதியில், ஈசுவர ஆண்டு சித்திரைத் திங்கள் வளர்பிறையில் பொருந்திய சதுர்த்தசி திதியில் வெள்ளிக்கிழமையன்று சித்திரை நட்சத்திரத்தில்

ஸ்ரீவைந்தே அம்சராய் மதுரகவியாழ்வார் அவதரித்தார் என்பர்.

இவர் தமிழ் மொழியிலும், வடமொழியிலும் சிறந்த புலமை பெற்று, சிறந்த ஒழுக்கம், திருமாலிடம் அன்பு, அருள் முதலியன தம்மிடம் வாய்க்கப் பெற்றவராயிருந் தார். தமிழ் மொழியில் மதுரமான கவிதைகளைப் பாடிய காரணம் பற்றி இவருக்கு மதுரகவிராயர் என்னும் பெயர் அமைந்துள்ளது.

மதுரகவிராயர் புண்ணியப் பதிகள் என்னும் 1. அயோத்தி, 2. மதுரை, 3. கயை, 4. காசி, 5. காஞ்சி, 6. அவந்தி, 7. துவாரகை என்னும் ஏழு பதியும் சென்று வேண்டி பூசித்து மறுபடியும் அயோத்தியை அடைந்து, அங்கு அர்ச்சாவதார வடிவாய் எழுந்தருளியிருக்கின்ற இராமபிரானையும், பிராட்டியையும் சேவித்துத் திருவடி தொழுது கொண்டு அங்கு வாழ்ந்து வந்தார்.

ஒரு நாளில் இவர் திருக்கோளூர் எம்பெருமானைத் திசை நோக்கித் தொழக் கருதித் தென் திசையில் கண் செலுத்திய பொழுது, அத்திசையில் வானுற வளர்ந்து விளங்கிய ஒரு பேரொளியைக் கண்டார்.

அஃது இன்னதென்றறியாமல் 'கிராம, நகரங்கள் எரிகின்றனவோ? காட்டுத்தீயோ? என ஐயுற்றுத் திகைத்து நின்றார். இங்ஙனமே இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து கண்டதால் பெருவியப்புற்று, அவர் அதனைக் காணும் அவாவினராய்ப் புறப்பட்டு அச்சோலையைக் குறியாகக் கொண்டு நெடுவழி கடந்து நடந்து திருக்குருகூரை அடைந்தார். அவ்வொளி அப்பகுதியில் ஆழ்வார் நுழைந்ததும் மறைந்து விட்டது.

மதுரகவியார் அவ்வூரிலுள்ளாரைப் பார்த்து, 'இங்கு ஏதேனும் சிறந்த சேதி உண்டா? என வினவ அவர்கள் நம்மாழ்வாரது வரலாற்றைக் கூறினார்கள், மதுர

கவிராயர் அவ்வரலாற்றைக் கேட்டுக் கோயிலினுள்ளே சென்று ஆழ்வாரின் அருளைப் பெற்று, அவர் அருட் செயல்களைப் பாட்டோலையில் எழுதினார். முன்பு குறிப் பிட்டபடி நம்மாழ்வாரையே பதினாறு செய்யுட்களையும் கொண்ட பாமாலையை ஒன்றாகப் பாடினார். அப் பாலையின் முதற் பா 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' எனத் தொடங்குவதால் அதற்குக் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்பது பெயராயிற்று.

மதுரகவி ஆழ்வார் தமது ஆசிரியராகிய நம்மாழ்வா ருக்குப் புலவகை விழாக்களையும் ஆராதனைகளையும் நடத்தி வந்ததோடு, ஆழ்வாரது அருந்தமிழ் மறைகளின் பொருள்களைப் பலரும் உணரும்படி உரைத்துச் சிலகாலம் எழுந்தருளியிருந்து, பின்பு சிந்தையும் மொழியுஞ்செல்லா நிலையான பேரின்ப பெருவீட்டை அடைந்தார்.

## 7. குலசேகராழ்வார்

''வேழமுடைத்து மலை நாடு'' என்று ஔவையாரால் பாராட்டப் பெற்ற சேரநாட்டினைச் சேரமன்னர்கள் தமிழகத்தின் தலைமை வேந்தர்களாகத் திகழ்ந்து ஆட்சி புரிந்து வந்தார்கள். அங்ஙனம் ஆட்சி புரிந்த அசசேர மன்னர் மரபில் திடவிரதன் என்பவன் அன்புக்கும் அருளுக்கும் இருப்பிடமானவனாகத் தோன்றினான். அம்மன்னன் கொல்லி நகரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தி வந்தான். திருமாலிடத்து அன்புடை யோனாய், வீரமும் கொடையும் ஒருங்கமைந்தவனாய் விளங்கினான்.

அவ்வேந்தருக்கு வீரமகனாக குலசேகர் உதித்தார். குலசேகர் கொல்லி நகரில் (கி. பி. 8ம் நூற்றாண்டு) பரா பவ ஆண்டு மாசித் திங்கள் வளர்பிறையில் அமைந்த துவாதசி திதியில் வெள்ளிக்கிழமையன்று புனர்பூச

நட்சத்திரத்தில் கௌஸ்துப அம்சராய் அவதரித்தார் என்பர்.

இவர் இளமைப் பருவத்திலேயே தென்மொழி, வடமொழி முதலியன நன்கு பயின்று மன்னர்கட்குரிய யானை ஏற்றம், குதிரை ஏற்றம், வில், வாள் முதலிய படைக்கலப் பயிற்சி முதலியன கற்றுத் தேர்ந்து 'இவரை ஒப்பாரும் மிக்காரும் இலர்' என்னும்படி சிறந்து விளங்கினார். இவரது தந்தையாரும் குலசேகரரின் சீரிய நிலையினைக் கண்டு இவரை இளவரசராக்கினார்.

குலசேகரர் தமது தந்தையாருக்குப் பின் நாட்டின் ஆட்சி முறையை ஏற்றுச் சிறந்த முறையில் செங்கோலோச்சினார். இவரது சிறப்பில் பொறாமை அடைந்த சோழனும் பாண்டியனும் ஒன்று கூடிப் போர் தொடுத்தனர். அவர்களைக் குலசேகரர் வென்று தமிழகத்தின் சக்ரவர்த்தியாக விளங்கினார்.

இதனை "கொல்லி நகர்க்கிறை கூடல் கோமான்" "கொல்லி காவலன் மாலடி முடிமேல் கோலமாம் குலசேகரன்" என்ற ஆறு, ஏழாம் திருமொழியினால் உணரலாம்.

பாண்டிய வேந்தன், குலசேகரரது ஆண்மையின் திறத்தை வியந்து, தன் செல்வப் புதல்வியை அவருக்கு மணம் செய்து கொடுத்தான். குலசேகரருக்குள்ள அகப்பற்று, புறப்பற்றினை நீக்கி அவருக்கு இறைப்பற்று வெகுவாகியதால் அவருக்கு தத்துவம் விளங்கியது. அவர் தம் வாழ்நாட்கள் "ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய்க் கழிந்தொழிந்தன" என்பார்.

"ஆதிமூலமே என்றழைத்த யானையைக்காத்தவனும், சிருங்கி பேரத்துப் புளிநர் வேந்தனாகிய குகனைத் தனது தோழன் என்றழைத்து 'என் தம்பி உன்து தம்பியாவான்' என்று கூறியவனும், அரசவையில் அரவக்கொடியோனால் அல்லலுற்று அவதிப்பட்ட பாஞ்சாலிக்குப் பொன்

ஆடைகள் அருளியவனுமாகிய எம்பெருமானுடைய அருஞ்செயல்களை எண்ணி ஏத்தாது கழித்த நாட்கள் யாவும் பிறந்தும் பிறவாத நாட்கள் ஆகும்'' என்பார்; திருமலைக் கண்டு களிக்கும் நாள் என்றோ என ஏங்கு வார். இதனையே அவர் தாம் பாடிய பெருமாள் திரு மொழியிலும் நினைவில் கூறுகின்றார்.

பின்னர் இறைவனது நினைவில் ஈடுபட்ட குல சேகரரது மனம், இறைவனது எழில் மிக்க காதையைக் கேட்டலில் விருப்பம் கொண்டது.

நாளடைவில் அவரது மனம் முழுவதும் அரசின் மேல் போகாது வைணவ பக்தர்களின் மீது நாட்டம் கொண்டு நட்பு மேலோங்கியது. அவர்களின் நட்பை அழிக்க அமைச்சர்கள் திட்டம் வகுத்து, குலசேகரர் பூசை செய் யும் பெருமானித்துள்ள நவமணி மாலையை மறைத்து வைத்தனர். அரசன் அதனைப்பற்றி வினவ 'வைணவர்கள் தான் எடுத்திருக்க வேண்டும்' என்று கூற, குலசேகரர் அமைச்சர்களின் கூற்றை மறுத்தவராய், ஒரு குடத்தில் நல்ல பாம்பு ஒன்றையிட்டுக் கொண்டு வரச் செய்தார். அங்ஙனமே பாம்பு ஒன்று குடத்தில் கொண்டு வரப் பட்டது. குலசேகரர் 'வைணவர்கள் எடுத்திரார் என்பது உண்மையானால் இப்பாம்பு என்னைத் தொடாது, தீண்டாது ஆகுக' எனக் கூறிக் குடத்தினுள் கையைவிட, பாம்பு தீண்டாமலே இருந்தது. பின்பு, குலசேகரர் அப் பாம்பிற்கு யாதும் தீங்கு செய்யாமல் அதன் இடத் திலேயே கொண்டு விடுமாறு உத்தரவு இட்டார்.

அமைச்சர்கள் அரசனிடம் தாங்கள் செய்த பிழை யைக் கூறி மன்னிக்குமாறு அரசனின் பாதமலர்களை வணங்கினார்கள். பின்னர் அரசன் அமைச்சர்களை நோக்கி ''இவ்வுலக வாழ்வில் எனது மனம் ஈடுபடாமல் உள்ளது, இவ்வரசு எனக்கு வேண்டாம்'' என்றுரைத்துத் தமது மூத்த மகனுக்கு முடிசூட்டிவிட்டு அனைவரிடமும்

விடைபெற்று, திருமாலின் அடியவர்களுடன் இறைவனை நாவுற வாழ்த்தி மகிழலானார்.

இவர் பெரிய பெருமாளாகிய இராமனிடத்தில் அன்புடையவர் ஆதலினால் இவரைப் 'பெருமாள்' என்றும், 'குலசேகரப் பெருமாள்' என்றும் வைணவப் பெரியார்கள் கூறலாயினர்.

இவர் அருளிய திருமொழிகளின் தொகைக்கு "பெருமாள் திருமொழி" என்னும் பெயர் வழங்கலாயிற்று. இவர் அருளியவை பத்துத் திருமொழிகள். இரண்டு, ஐந்து, ஆறு ஆகிய திருமொழிகள், பத்து செய்யுட்களைக்கொண்டது. மூன்றாந் திருமொழி ஒன்பது செய்யுட்களைக் கொண்டது. ஏனைய திருமொழிகள் ஒவ்வொன்றும் பதினோறு செய்யுட்கள் கொண்டவையாகும். ஆக இவர் அருளிய செய்யுட்கள் நூற்று ஐந்தாகும்.

குலசேகராழ்வாரால் பாடப்பட்ட தலங்கள்:

1. திருவரங்கம், 2. திருக்கண்ணபுரம், 3. திருச்சித்திரக் கூடம், 4. திருவிறறுவக்கோடு, 5. திருவேங்கடம், 6. திருவயோத்தி, 7. திருப்பாற்கடல் முதலியனவாகும்.

## 8. பெரியாழ்வார்

பாண்டிய நாடு முத்தும் முத்தமிழும் பெற்றதனால் பொலிவுற்று விளங்கும் நாடாக இருந்தது. அப்பாண்டிய நாட்டில் புத்தூர் என்னும் ஊரை அடுத்த காட்டில் வாழ்ந்த வேடர் குலத் தலைவனுக்கும், அவனது மனைவிக்கும் (மல்லி) வில்லி, கண்டன் என்னும் இரு புதல்வர்கள் பிறநது, வேட்டையாடுவதில் வல்லவர்களாக இருந்தார்கள்.

ஒரு நாள் வில்லியும், கண்டனும் வேட்டையாடப் புறப்பட்டுச் சென்றனர். கண்டன் புலியைப் பின்

தொடர்ந்து சென்று அம்புகள் ஏவிய பொழுது, அம்பிற்குத் தப்பிய புலி கண்டனைச் கொல்லவும், பின்னால் வந்த வில்லி இக்காட்சியைக் கண்டு வருந்தி திருமாலை எண்ணி அழுது வேண்டியதால் தம்பி கண்டன் உயிர் பெற்று எழுந்தான் என்றும் பின் வில்லி பெருஞ் செல்வம் பெற்றான் என்றும் அதனால் அவன் அந்த இடத்தில் திருமாலுக்கு உயர்ந்த ஒரு கோயிலை எழுப்பினான் என்றும் சொல்வர்.

கோயிலும் கோயிலைச் சார்ந்த வீதிகளும் பின்னாளில் அழகிய ஊராயிற்று. அந்த ஊருக்கே வில்லிபுத்தூர் என்ற பெயரும் அமையப் பெறறது. அவ்வூரைச் சூழ்ந்த இடத்திற்கு 'மல்லி நாடு' என்ற பெயரைத் தன் தாயின் நினைவாக வில்லி பெயரிட அப்பெயரே அந்நாட்டிற்கு வழங்கப் பெறுவதாயிற்று.

வில்லிபுத்தூரில் குடியேறிய மறையவர்களும் முகுந்த பட்டர் என்னும் முன் குடிமி சோழிய பிராமணர் அவர் கட்கும், பதும வல்லி என்னும் நங்கைக்கும் ஓர் ஆண் மகவு பிறந்தது. அந்த ஆண் மகவே பிற்காலத்தில் போற்றிப் புகழப்படும் பெரியாழ்வார் ஆவார்.

பெரியாழ்வார் ஸ்ரீ வில்லிபுத்தூரில் (கி.பி 9ம் நூற்றாண்டில்) குரோதன ஆண்டு ஆனித் திங்கள் வளர் பிறையில் பொருந்திய ஏகாதசி திதியில் ஞாயிறு அன்று சுவாதி நட்சத்திரத்தில் கருட அம்சத்தில் அவதரித்தார் என்பர்.

இவரின் பெற்றோர் இவருக்கு விட்டு சித்தன் என்ற பெயர் வைத்துத் தக்க வயதில் கல்வி கற்பித்து பின்னர், இவருக்குத் திருமாலுக்குத் தொண்டு செய்யப் பணிந்தனர்.

மூதாதையர் ஈட்டு வைத்திருந்த செல்வத்தில் ஒரு பெரும்பங்கைக் கொண்டு தோட்டம் அமைத்து பலவகை மலர்ச் செடிகளைப் பயிரிட்டு அம்மலர்களால் அழகிய

மாலைகளைக் கட்டி, அப்பதியில் உள்ள வடபெருங் கோயிலின்கண் எழுந்தருளியிருந்த திருமாலுக்குச் சார்த்தி வருவாராயினர்.

அப்போது பாண்டிய நாட்டில் வல்லபதேவன் என்னும் அரசன் செங்கோலோச்சி வந்தான். அவன் பாண்டியர் தம் குலத்திற்கு ஓர் எழில் மிக்க விளக்குப் போன்று இருந்தான். பல கலைகளைத் தேர்ந்தவன். அவன் எல்லா துறைகளிலும் சிறந்து விளங்கினான். எனினும், அவன் அறக்கள வேள்வியிலும் மாட்சிமை அடைய வழி யாது எனச் சிந்தித்து, உண்மைப் பொருளை உணர்தலே அதற்கு வழியென்று முடிவு செய்தான். அவ்வமயம் வேத வேதாந்தங்களைக் கற்ற செல்வநம்பி என்னும் புரோகிதர் அரசனிடம் வர அவரை நோக்கி அரசன் "அந்தமில் இன்பத்தை எவ்வாறு பெறலாம்?" எனக் கேட்டான். அதற்கு செல்வநம்பி 'வேத முடிவாகிய பரம்பொருள் இன்னது என்பதை வித்வான்கள் மூலம் நிச்சயித்து அவ்வழியாலே பெறலாம்' என்றார். அரசனும் 'அங்ஙனமே ஆகுக' என்றான். பின்னர் அரசன் தனது அரியணைக்கு முன்புறத்தில் ஒரு தோரணக் கம்பத்தை நட்டு, கிழிச்சீரையிலே பெரும் பொற்குவியலை இட்டு, அப்பொற்கிழியை அக்கம்பத்தில் கட்டித் தொங்க விட்டு,'தாம் கூறும் உண்மைப் பொருளால் இப்பொற்கிழி தானே அறுந்து விழு படி எவர் செய்கின்றாரோ அவருக்கு இப்பொற்கிழி உரியதாம்' என்று எல்லா இடங்களுக்கும் பறையறைத்து, தூதர்கள் மூலமும் அறிவித்தான். பலர் வந்து சொல் மாரி பொழிந்தும் பொற்கிழி அறுபட வில்லை.

விட்டுச்சித்தர் கனவில் தோன்றி பாண்டியன் அவைக்குச் சென்று பொற்கிழி தானே அறும் வண்ணம் உண்மைப் பொருளை உணர்த்தும்படி இறைவன் கூற, இறைவன் பணியை மேற்கொண்டு, மறுநாள் காலை பாண்டியனது நகர் சேர்ந்தார். பாண்டிய வேந்தனாகிய

வல்லபதேவரும், செல்வநம்பியும் விட்டுச்சித்தரை வரவேற்றனர். விட்டு சித்தரைக் கண்ட அரசன் வணங்கி ''அருளிற் சிறப்புடையீர்! தங்கள் வருகையால் என் மனம் மகிழ்ச்சியுற்றது'' என்று அரசனது அவையில் சிறந்ததோர் இருக்கை ஈந்து அமரச் செய்தான்.

அப்பொழுது அங்கிருந்த புலவர்கள் விட்டுச்சித்தரை அவமதிக்கும் முறையில் பார்த்து, ''கற்றார் அவையில் சென்று ஒன்றை கூறுதலால் உண்டாகும் இழிவை எண்ணாது வந்தமை, குருட்டுக் கண் இருட்டைக் கண்டு அஞ்சுமோ?'' என்று விட்டுச்சித்தரைக் குறித்து ஏளனம் செய்தனர்.

திருமாலின் திருவருள் பெற்றதன் காரணமாக அவையின் இடையில் வந்து, அவை வணக்கம் கூறிய விட்டுச்சித்தர், வேத முடிவாயுள்ள உண்மைப் பொருளை தம் சொற்கள் கொண்டு விளக்கவுரையாற்றினார். விட்டுச்சித்தரால் ஆற்றப்பட்ட அவ்விளக்கங்களைக் கேட்டார்ப் பிணிக்குத் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாகிய சொற்களால் அமைந்த ஆய்வுரையாகவும், அச்சொல்லை வெல்லுந் தன்மையில்லாமல், விழுமிய பொருள் பொதிந்ததாகவும், உண்மைப் பொருளை உணர்தற்கு ஏற்றதாகவும் இருந்தது. உடனே பொற்கிழி கட்டியிருந்த கம்பம் இவர் அருகே வளைந்தது. விட்டுச்சித்தரும் அதனை மகிழ்வுடன் பெற்றுக் கொண்டார். வேந்தனும்; செல்வநம்பியும், ஏனையோரும் விட்டுச்சித்தரை வணங்கிப் போற்றினர்.

மன்னன் வல்லபதேவன் 'பட்டர் பிரான்' என்னும் பட்டம் வழங்கி, பட்டத்து யானை மீது அவரையேற்றி உலாவரச் செய்தார்.

மன்னரிடமும், செல்வநம்பியிடமும் விடைபெற்றுக் கொண்டு, வில்லிபுத்தூரை அடைந்த விட்டுச்சித்தர் கிழியறுத்துக் கொணர்ந்த பொன்னைக் கொண்டு வட

பெருங்கோயிலைப் புதுப்பித்து அதனை அங்குள்ள திருமாலுக்கே உரியதாக்கினார் என்பர்.

பின்பு கண்ணனது திருஅவதாரச் சிறப்பினை நாற்பத்து நான்கு திருமொழிகளாகப் பாடினார். இவற்றின் மொத்த பாசுரங்கள் நானூற்று அறுபத்தொன்றாகும். திருப்பல்லாண்டின் பாசுரங்கள் பன்னிரண்டு ஆகும்.

ஆக விட்டுச் சித்தரால் பாடப்பட்ட பாசுரங்கள் என்னும் செய்யுட்கள் நானூற்று எழுபத்து மூன்று ஆகும். இவருடைய பாசுரங்கள் 'பெரியாழ்வார் திருமொழி' என்று வழங்கப்பட்டு, நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் முதற்கண் அமைக்கப்பட்டுள்ளன.

விட்டுச்சித்தர் திருமாலைப் பல்லாண்டு பாடி வாழ்த்தின்மையால் 'பெரியாழ்வார்' என்று இவரை வைணவப் பெரியார்கள் கூறலாயினர்.

இவரின் வேறு பெயர்கள் :- 1. பெரியாழ்வார், 2. பட்டர்பிரான், 3. வில்லிபுத்தூர் கோன், 4. கிழியறுத்தான், 5. புதுவைக் கோன்.

இவரால் பாடப்பெற்ற தலங்கள் :- 1. திருவரங்கம்' 2. திருவெள்ளாறை, 3, திருப்பேர் நகர்,4. கும்பகோணம், 5. திருக்கண்ணபுரம், 6. திருச்சித்திரக் கூடம், 7. திருமாலிருஞ்சோலை மலை, 8. திருக்கோட்டியூர், 9. திருவில்லிபுத்தூர், 10. திருக்குறுங்குடி, 11. திருவேங்கடம், 12. திருவயோத்தி, 13. சாளக்கிராமம், 14. வதரியாச்சிரமம், 15. திருக்கங்கைக் கரை கண்டம், 16. துவாரகை, 17. வடமதுரை, 18. திருவாய்பாடி, 19. திருப்பாற்கடல், 20. பரமபதம் முதலியனவாகும்.

## 9. ஆண்டாள்

பாண்டிய நாட்டில் திருவில்லிபுத்தூரில் பெரியாழ்வார் இறைவனுக்கு மாலை கட்டித் தருவதற்காக அமைக்

கப்பட்ட நந்தவனத்தில் துளசிச் செடிகளின் அருகே (கி.பி.9ம் நூற்றாண்டு) நள ஆண்டு ஆடி மாதம் வளர் பிறையில் சதுர்த்தசி திதியில் செவ்வாய்க் கிழமையன்று பூர நட்சத்திரந்தில் பூமிப் பிராட்டியார் அம்சமாய் பெண் குழந்தை தோன்றியது என்பர். அங்ஙனம் அவதரித்த அப்பெண் குழவியை நந்தவனத்தில் பார்த்த பெரியாழ்வார் பெருங்களிப்புக் கொண்டு அப்பெண் குழந்தையை தமது மகளாகப் பாவித்துக் கோதை எனப் பெயரிட்டு வளர்க்கலாயினார்.

திருமாலடியவர்களாக அவதரித்து, ஆழ்வார்களெனச் சிறப்பித்துக் கூறப் பெறும் பன்னிருவருள் பரமனைப் பக்தியினாலும், நாயகி பாவத்தினாலும் சொல் மலர் களாகிய பாமாலையைச் சுவைபடச்சித்தரித்ததோடுஅமை யாது, தாமே நாயகியாக வேண்டும் எனும் எண்ணத் தோடு, அரங்கனை ஆராதித்து, அவனை நாயகனாகவும் அடைந்துய்யும் பேறு பெற்ற செல்வியே இக்கோதை யாவாள். வில்லிபுத்தூரார், கோதை என்னும் அப்பெண் குழவிக்குப் பரம ஞானத்தைப் போதித்தார்.

தனது தந்தையே வியக்கும்படி இளமை தொடங்கி எம்பெருமான் பற்றியே பக்திப் பெருவேட்கை கொண்டு, அவனையே தாரம் மணஞ்செய்து கொள்ளக் கருதி, பரமனது பெருமைகளையே எப்பொழுதும் சிந்தித்தல், துதித்தல் முதலியன செய்து வாழ்ந்தார்.

பெரியாழ்வார் வடபெருங் கோயிலானுக்குச் சார்த் துதற்காகக் கட்டி வைத்த திருமாலையை அவரில்லாத காலத்து எடுத்துத் தம் குழலிலே தரித்துக் கொண்டு 'பெருமானுக்கு நான் ஒத்து இருக்கின்றேனோ' எனச் சிந்தித்தல் மகிழ்தல் வழக்கம். அத்தோடு சிறந்த அணி கலன்களையும் அணிந்து, உயர்ந்த பட்டாடையை உடுத்தித் தம்மை அலங்கரித்து அவ்வொப்பனையழகைக் கண்ணாடியில் கண்டு, தந்தையார் காணாதவாறு மலர்

மாலையைக் களைந்து முன்போலவே செண்டாகச் சுற்றி பூங்குடலையினுள்ளே வைத்து விடுதல அவரது அன்றாட வழக்கமாகக் கொண்டிருந்தார். இதனை அறியாத ஆழ்வார் அம்மாலையைக் கொண்டு சென்று இறைவனுக்குச் சார்த்தி வர பெருமானும் விருப்புடன் ஏற்று அருளினார் என்பர்.

இங்ஙனம் பல நாட்கள் சென்றபின் ஒரு நாள் வெளியில் சென்ற ஆழ்வார் விரைவில் வீட்டிற்கு எழுந்தருளிய பொழுது, மலர் மாலையைக் கோதை சூடியிருத்தலைப் பார்த்து கோபங் கொண்டு கடிந்துரைத்து, அன்று இறைவனுக்கு மாலை அணியக் கொடாமல், அத்திருப்பணிக்கு முட்டுப்பாடு நேர்ந்ததற்கு மனம் வருந்தியிருந்தார். அன்றைய நாள் இரவில் இறைவன் ஆழ்வாரது கனவில் வந்து, மாலை கொண்டு வராமைக்குக் காரணம் அறிந்து "அவள் சூடிக் கொடுத்த மாலையே மணமிகுந்தது, தமது உள்ளத்திற்கு நனி விருப்பமானது; ஆதலின் இனி அத்தன்மைத்தான மாலையையே நமக்குக் கொண்டு வருவாய்" என்றருளி மறைந்தனன் என்பர்.

பின்பு துயில் நீங்கப் பெற்ற விட்டுச்சித்தர் தமது மகளாக வாய்த்துள்ள கோதை மலர் மங்கையின் அவதாரம் என அறிந்து அவளுக்கு, 'ஆண்டாள்' என்றும், மாதவனுக்குரிய மலர் மாலையைத் தாம் சூடிக் கொண்டு பார்த்து மகிழ்ந்த பின் கொடுத்தது காரணமாக, 'சூடிக் கொடுத்த நாச்சியார்' என்றும் திருப்பெயரிட்டு அழைத்து வந்தார்.

ஆண்டாள் தமது பருவம் வளருந்தோறும் இறை அறிவும் பக்திகளும் உடன் வளர்ந்து வரப் பெற்று தமக்கு ஏற்ற காதலனாகக கருதிய பரமன் மீது காதல் அதிகரித்தவராகி, இனி அவனை ஒரு நொடிப் பொழுதும் கூடாது இருக்க முடியாது என்னுங் கருத்துடன் கண்ணனது பிரிவை ஆற்றாத ஆயர் மங்கையர் போலத் தாமும் நோன்புநோற்று உயிர் தரிப்பவராய், அவ்வெண்ணத்தைத்

திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்ற திவ்வியப் பிரபந்தம் மூலமாக இறைவனித்து விண்ணப்பஞ் செய்து வாழ்ந்திருந்தார்.

இந்நிலையில் பெரியாழ்வார் கோதையாரது திருமணம் பற்றிப் பேசத் தொங்கிய போது, ஆண்டாள் 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழ கில்லேன்' என்று சொல்ல, ஆழ்வார் 'பின்னை எங்ஙனம் நிகழ்வது?' என்று கேட்க, 'சூடிக் கொடுத்த சுடர்க்கொடி யார்' யான் பெருமாளுக்கே உரியவளாக இருக்கின்றேன்' என்றுரைத்தார்.

பின்பு கோதையார் தந்தையாகிய பெரியாழ்வரிடம் 'நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் எழுந்தருளியுள்ள இறைவனுடைய பெருமைகளை விளங்க எடுத்துக் கூறியருள வேண்டும்' என வேண்ட, அவரும் அவ்வாறே விரித்துக் கூறினார்.

அங்ஙனம் அருளிச் செய்து வருகையில், ஆண்டாள் வட மதுரையில் எழுந்தருளிய கண்ணபிரானது வரலாற்றைக் கேட்டதும் மயிர்சிலிர்ப்பும், திருவேங்கடமுடையானது வரன்முறையைச் செவிமடுத்த பொழுது முக மலர்ச்சியும், திருமாலிருஞ்சோலை மலையழகரது வடிவழகை அறிந்த மாத்திரத்தில் மன மகிழ்ச்சியும் பெற்று, திரு அரங்கநாதனது பெருமை செவிப்பட்டவுடனே அளவற்ற இன்பமடைந்து நின்றார். அவர்களுள் அரங்கநாதனிடத்தே மனத்தைச் செலுத்தி, அவனுக்கே தம்மை மணமகளாக நிச்சயித்து அரங்கனையே எப்பொழுதும் எண்ணியிருந்தார்.

கோதையாருக்குத் திருவரங்கநாதன்பால் உண்டான விருப்ப மிகுதியை அறிந்த பெரியாழ்வார், தமது மகளின் மனம் மகிழ,

**"குடதிசை முடியை வைத்துக் குணதிசைபாதம் நீட்டி**
**வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை**
**நோக்கிக்**
**கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலும்"**

திருவரங்கத்தின் வரலாற்றினைத் தெரிவித்தார்.

கோதா தேவியும் திருவரங்கநாதனைக் குறித்து,

**"கற்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ**
**திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித் திருக்குமோ**
**மருப் பொசித்த மாதவன்றன் வாய்சுவையும்**
**நாற்றமும்**
**விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே"**

என்பார்.

பின்பு கோதை நாச்சியார் தம் ஆற்றாமையைத் தணித்துக் கொள்ள எண்ணி வில்லிபுத்தூரை ஆயர்பாடியாகவும், அப்பதியிலிருந்த பெண்களையும் தம்மையும் ஆயர்குல மங்கையராகவும் வட பெருங்கோயிலை நந்தகோபன் மனையாகவும், அப் பெருமானைக் கண்ணனாகவும் கருதித் திருப்பாவையைப் பாடியருளிப் பின்பு பதினான்கு திருமொழிகளைப் பாடியருளினார். இதற்கு நாச்சியார் திருமொழி என்று பெயர்.

ஆழ்வாரும், 'நம் பெருமான் இவளைக் கடிமணம் புரிதல் கைகூடுமோ?' என்று எண்ணியிருக்கையில், திருவரங்கச் செல்வன் ஆழ்வாரது கனவில் எழுந்தருளி "உமது திருமகளைக் கோயிலுக்கு அழைத்துக் கொண்டு வாரும், அவளை யாம் ஏற்போம்" என்றருளினார். பின்பு திருவரங்கநாதர் கோயிற் பரிவாரமாகியுள்ளவர் கனவிலும் தோன்றி "நீவீர் குடை, கவரி, விருதுகள் வாத்தியங்கள் முதலியன பல சிறப்புக்களுடன் ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் போய், ஆழ்வாரின் அருமைச் செல்வியாகிய கோதையை அவரது தந்தையாருடன் நம்பால் அழைத்து

வருவீராக'' என்று பணித்தருளினன். பின்பு பாண்டிய நாட்டு வல்லபதேவன் கனவிலும் தோன்றி ''நீ பலருடன் ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்று, பெரியாழ்வாரின் மகளான கோதையை முத்துப் பல்லக்கில் ஏற்றி நம் திருவரங்கத் திற்கு அழைத்து வருவாயாக'' என்று அருளினாராம்.

அக்கனவில் திருமண வினைகள் அனைத்தையும் முறையே தாம் அன்றிரவு பலவகைக் கனவுகளைக் கண்ட தாகத் தோழியிடம் கூறினாளாம். அக்கனவினை பத்துப் பாடல்களில் அவர் பாடியுள்ளார். அவற்றுள்,

**''மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத**
**முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்**
**மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்**
**கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீநான்''**

என்பதும் ஒன்று.

பாண்டிய வேந்தன் வல்லபதேவனும் ஏவலாளரைக் கொண்டு விடியற்காலைக்குள் நகரை அலங்கரித்து திருமண விழாவிற்கு ஏற்பாடு செய்ய இறைவன் கனவில் சொன்னதைச் சொல்லி ஆழ்வாருக்கும் உணர்த்தினான். பின்பு கோயிற் பரிவார மாந்தர் பட்டநாதரை வணங்கி இரவு தம் கனவில் திருவரங்கத்து அமலன் காட்சி அளித்துக் கூறிய செய்திகளை அறிவித்தனர்.

அலங்கரித்துக் கொண்ட ஆண்டாள் திருவரங்கன் அருகே சென்று எம்பெருமானது திருமேனியின்கண் மறைந்து அவனை என்றும் பிரியாது இருப்பவளாயினார் என்பர்.

ஆழ்வாரும் திருவில்லிபுத்தூருக்குச் சென்று முன் போலவே இறைவனுக்கு மாலை அணிவிப்பதில் ஈடுபட்டுக் கொண்டு எண்பத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்திருந்து மறைந்தார்.

ஆண்டாள் பாடப் பெற்ற பாடல் தலங்கள் 1. திருவரங்கம், 2. திருக்கண்ணபுரம், 3. திருமாலிருஞ் சோலை மலை, 4. ஸ்ரீவில்லிபுத்தூர், 5. திருவேங்கடம், 6. துவாரகை, 7. வடமதுரை, 8. திருவாய்ப்பாடி, 9. திருப்பாற்கடல் முதலியனவாகும்

## 10. தொண்டரடிப் பொடியாழ்வார்

சோழநாட்டில் உள்ள திருமண்டங் குடியில் (கி. பி. 8-ஆம் நூற்றாண்டு) பராபவ ஆண்டு மார்கழித் திங்கள் தேய் பிறையில் பொருந்திய சதுர்த்தசி திதியில் செவ்வாய்க் கிழமையன்று, கேட்டை நட்சத்திரத்தில் வண்மாமலையின் அம்சராய் முன் குடுமிச் சோழியரும் வைணவரும் ஆகிய வைணவ சோழியருக்குத் தொண்டரடிப் பொடியாழ்வார் அவதரித்தருளினார்; தந்தையார் இவருக்கு விப்பிரநாராயணர் என்ற பெயரை இட்டு, உபநயனம் முதலிய வைதிகச் செயல்களைச் செய்தார் என்பர்.

விப்பிர நாராயணர் திருமணத்தில் விருப்பமற்று, பல தலங்கள் தோறும் சென்று, இறைவனை வணங்க எண்ணியவராய் முதற்கண் திருவரங்கம் பெரிய கோயிலை அடைந்தார். அங்கு பள்ளி கொண்டிருக்கும் அரங்கநாதனைச் சேவித்து, அவரது அழகில் ஈடுபட்டவ ராய், அங்கு மிக்க வனப்புள்ள நந்தவனத்தை அமைத்து, பெரியாழ்வார் போன்று இறைவனுக்கு மாலை கட்டித் தரும் திருப்பணியை மேற்கொண்டு அங்கேயே தங்க லானார்.

அக்காலத்தில் திருவரங்கத்துக்கு வடக்கிலுள்ள உத்தமர் கோயிலில், மிக்க அழகுடையவளாய்த் தேவ தேவி என்னும் பெயருடன் தேவதாசி குலத்தில் பிறந்த ஒரு நங்கை தமக்கையுடன் நடனமாட உறையூருக்குச் சென்றாள். சோழன் முன்னிலையில் நடனமாடிப் பல

பரிசுகள் பெற்றுத் திரும்புகையில் அவள் விப்பிர நாராயணரது நந்தவனத்தின் அழகில் ஈடுபட்டவளாய், அதற்குரியவனைத் தன் வயப்படுத்த எண்ணினாள். ஆனால், அவளது தமக்கை தன் தங்கையை நோக்கி 'விப்பிரநாராயணர் இறை வழிபாட்டில் ஈடுபட்டுள்ளார். ஆதலினால் அவரை உன் வயப்படுத்தல் ஆகாது, என்றாள்.

தங்கையாகிய தேவதேவி, 'அவனை என் வயப் படுத்தாவிடின் உனக்கு ஆறுமாதம் அடிமையாக இருப்பேன்' என உறுதி கூறினாள். பின்பு தேவதேவி தனியே மெல்லியதொரு செங்காவிச் சேலையை உடுத்து, அவரை அடுத்துத் திருவடிகளில் விழுந்து வணங்க, அவர் 'நீ யார் ?' என்றார். அவள், 'நான் தீவினையால் தாசி குலத்தில் பிறந்தேனாயினும் அத்தொழிலைச் செய்ய உடன்படாது தேவரீரது திருவடியைச் சரணடைந்து உயர்வு பெற நாடி வந்துற்றேன்' என்றாள். பின்பு 'செடிகளுக்கு நீர் ஊற்றல், பூப்பறித்தல்,மாலை கட்டுதல், சோலையை பாதுகாத்தல் முதலிய பணிவிடைகளில் எதை நியமித்தாலும் செய்துவரக் காத்திருக்கிறேன்' என்றாள்.

விப்பிரநாராயணனும் அவளது கபட எண்ணத்தை உணராமல் உடன்பட்டு தாம் அமுது செய்து மிகுந்த உணவினைக் கொடுத்துவர, அவளும் அதனை வாங்கி உட்கொண்டு அங்கேயே இருந்து வந்தாள்.

பல மாதங்கள் கழிந்த பின், ஒரு நாள் பெருமழை பொழிந்து கொண்டிருந்த பொழுது; கருணை உள்ள அவர் அவள் நனைந்து வருதலைப் பார்த்து, உள்ளே வந்து நிற்கும்படி கூறினார். அவளும் அருகில் வந்து தனது மென் மொழிகளாலும், மேனி மினுக்கினாலும் அவரது மனத்தைக் கவர்ந்து, அவரைத் தன் வயமாக்கிச் சில காலம் அவருடனிருந்து, பின்பு பொருள் இல்லாத அவரைப் பொருள் செய்யாது கைவிட்டுத் தன் வீட்டிற்குச் சென்று விட்டாள்.

விப்பிரநாராயணரும் அவள் பிரிவை ஆற்றாமல் அவள் வீட்டு வாயிலில் சென்று தயங்கி நின்றார். தேவ தேவி உள்ளே உள்ளே வரச் சொன்னாள். விப்பிர நாராயணரும் உள்ளங்குளிர்ந்து உடல் பூரித்து உள்ளே போய்ச் சேர்ந்தார்.

இறைவன், கோயிலில் உள்ள பொன் வட்டில் ஒன்றை தேவதேவிக்கு விப்பிரநாராயணர் தந்ததாகச் சொல்லிக் கொடுத்ததாகச் சொல்வர்.

அவ்விரவு கழிந்து பொழுது விடிந்த அளவில் பொன் வட்டில் காணாத கோயில் காப்போர் அதனை அரசனுக்கு அறிவிக்க, அரசனும் அர்ச்சகர், பரிசாரகர் முதலானவர் களைத் தண்டித்து வருத்தினான். பின்னர் ஒற்றர் மூலம் தேவதேவியின் இல்லத்தில் பொன்வட்டில் இருப்பதை உணர்ந்து, தேவதேவியை அழைத்து வினவ, அவள், விப்பிரநாராயணரின் ஏவலாளாகிய அழகிய மணவாள தாசன் மூலம் விப்பிரநாராயணர் இதனை அனுப்பினார் என்றாள்.

விப்பிரநாராயணர், 'யான் ஒன்றும் அறியேன்' என்றும், 'தமக்கு ஏவலாளன் இல்லை' எனவும் மறுத் துரைத்தார். அரசனும் களவாடிய பொருளை வாங்கினமைக்குரிய அபராதப் பொருளையும், பொன் வட்டிலையும் தேவதேவியிடமிருந்து பெற்றுப் பெருமாளுக்களித்து, பின் விப்பிரநாராயணரைச் சிறை யில் இட்டான்.

அரசனது கனவில் அரங்கநாதன் எழுந்தருளி 'தாசியிடத்துக் காதல் கொண்ட இவ்வந்தணருடைய கருமத்தைக் கழித்தற்பொருட்டு நாமே பொன்வட்டிலைக் கொண்டு போய்த் தந்து இவனைத் தண்டிப்பித்தோம்; உண்மையில் இவன் கள்வனல்லன்; தூய்மையாளனே' என்று தெரிவிக்க, அரசன் அமைச்சர் முதலானோரிடம்

அறிவித்து, அப்பொழுதே விப்பிரநாராயணரை விடு வித்து உபசரித்து அனுப்பிவிட்டான் என்பர்.

விப்பிரநாராயணர் தான் செய்த குற்றம் புரிந்து மிகவும் வருந்தினார். பெரியோர்களிடம் இப்பாவம் நீங்க வேண்டினார் பெரியோர்கள் 'பாவங்கள் யாவும் நீங்கு வதற்கு ஏற்ற பிராயச்சித்தம் பாகவதர்களுடைய திருவடித் தீர்த்தத்தை உட்கொள்வதே' என்று கூறி னாரகள்.

விப்பிரநாராயணரும் அங்ஙனமே அதனைப் பெற்றுப் பருகித் தூய்மையானார். வைணவர்களுடைய திருவடித் தூளியாய் அவர்கட்குக் கீழ்படிந்து அடிமை பூண்டு ஒழுகி அதனால் தமக்கு அதுவே பெயராக அவர் "தொண்டரடிப் பொடி" என்று நாமம் பெற்றார்.

பின்னர் தனது அனுபவத்தைப் பிரபந்த மூலமாகப் பிறர்க்கு தெரிவிக்கக் கருதி திருமாலை, திருப்பள்ளி யெழுச்சி என்ற திவ்வியப் பிரபந்தங்களை அருளிச் செய்து உலகத்தாரை வாழ்வித்து பல்லாண்டுகள திருவரங்கத்தில் வாழ்ந்தார்.

தேவதேவியும் தான் உய்வு பெற எண்ணித் தனது பொருளனைத்தையும் அரங்கனுக்கே உரியதாக்கிவிட்டு கோயிலிலே மெழுகுதல், கோலமிடுதல் முதலிய பணிகள் செய்து தன் வாழ்நாளைக் கழித்தனள்.

தொண்டரடிப் பொடி ஆழ்வாருடைய பாசுரஙகள் யாவும் இன்னிசை உடையனவாய், பக்திச் சுவை நிறைந்து தேனினும் இனிமை பயப்பனவாய்ப் பொலிகின்றன. தொண்டரடிப் பொடி ஆழ்வாரால் பாடப் பெற்ற தலங்கள் : 1. திருவரங்கம், 2. திருவயோத்தி, 3. திருப்பாறகடல்.

## 11. திருப்பாணாழ்வார்

"ஊரெனப்படுவது உறையூர்" எனப் போற்றி புகழும் சோழர் குல வேந்தர்களின் தலை நகராகும் உறந்தையம்பதி சரித்திரத்தில் பெருமைபடப் பேசப் பட்டுள்ளது. செம்பியர்களின் ஆட்சியில் சிறப்புற்றுப் பெருமை பெற்ற திருவுறையூரில் (கி. பி. 8-ஆம் நூற்றாண்டு) துன்மதி ஆண்டு கார்த்திகை மாதம் தேய் பிறையில் துவிதியை திதியில் புதன் கிழமையன்று உரோகிணி நட்சத்திரத்தில் திருமாலின் வத்ஸத்தின் அம்சமாய் திருப்பாணாழ்வார் அவதரித்தார் என்பர்.

அவ்வூர் பாணர் குலத்துப் பிறந்தானொருவன் நெற்பயிர் விளை பூமியின் அருகில் கண்டான். கண்ட அளவில் பெற்றோர் யாரும் பக்கத்தில் இல்லை. எனவே தனது நல்வினைப் பயன் காரணமாக நாராயணன் தனக்கு அருளிச் செய்த செயலோ என மகிழ்ந்து, எடுத்துச் சென்று மனைவியிடம் அளித்தான். மனைவியும் தன் மலடு தீர்ந்த மகிழ்வில் குழந்தையை அன்புடன் காத்தனள்.

திருமால் அருளால் பிறந்த இவர் தாம் புகுந்த குலத்துக்கு ஏற்ற யாழ்ப் பாடலில் தேர்ச்சி பெற்று, அதனால் பாணர் குலத்தில் சிறப்புற்று விளங்கினார். எனவே 'திருப்பாணர்' என இவரை அழைத்தனர். திருப்பாணர் பின் அரங்கநாதருக்குப் பாடல் திருத் தொண்டு செய்யும் எண்ணத்தினராய்ப் புறப்பட்டு தாம் தாழ்ந்த குலத்தில் வளர்ந்தவராதலால் திருவரங்கத்தில் அடியிடத் துணியாமல் தென் திருக்காவிரியின் தென்கரை யில் திருமுகத்துறைக்கெதிரில் நின்றுகொண்டு திருவரங்க நாதப் பெருமானைக் குறித்துப் பாடல்கள் அருளினார்.

கேட்பவர் செவியும் மனமும் குளிர, எம்பெருமான் திருவுள்ளம் மகிழப் பாடினார். இங்ஙனம் நாள்தோறும்

வைகறையில் திருப்பாணர் திருவரங்கனைக் குறித்துப் பல பாடல்களைத் தம்மை மறந்து பக்தியால் பரவசப்பட்டு பாடிக் கொண்டிருப்பார்.

திருவரங்கநாதனை ஆராதிப்பவராகிய உலோக சாரங்க முனிவர் என்பவர் காவிரியில் நீராடித் திருமண் அணிந்து துளவமணி மாலையும், தாமரை மணி மாலையும் கழுத்தில் அணிந்து கொண்டு, திருவரங்கநாதன் திருமஞ்சனத்திற்கு நீர் கொண்டு செல்லப் பொற்குடத்தைக் கையிலேந்தி அங்கு வந்தார் எதிரில் இருந்த திருப்பாணரை 'அப்பாற்செல்' என்று கூவினார். திருப்பாணார் மெய்மறந்த நிலையில் இருந்ததால் அது கேட்கவில்லை. இதனால் கோபமுற்ற முனிவர் ஒரு கல்லை எடுத்து வீசினார். அது பாணர் நெற்றியில் பட்டுக் குருதி பெருகச் செய்தது. திருப்பாணர் தெளிவு பெற்று முனிவர் எதிர்புறம் நிற்பதைக் கண்டு மனமும் உடலும் நடுங்கி அவ்விடத்தினின்று விலகி விட்டார்.

அதன் பிறகு முனிவர் பொற்குடத்தில் காவிரியின் நீரை முகந்து கொண்டு, திருவரங்கநாதன் முன் சென்றார். அப்பொழுது அரங்கநாதன் நெற்றியினின்றும் குருதி பெருகி வந்து கொண்டு இருந்தது. இதனை முனிவரும் அர்ச்சகரும் கோயில் அதிகாரிகளுக்கு அறிவிக்க, அவர்களும் இந்தச் செய்தியை அரசனுக்குக் கூற அமைச்சர்களுடன் அரசன் ஆராய்ந்தும் காரணம் காணாது, விட்டுவிட்டனர்.

அரங்கநாதர் உலோக சாரங்கருடைய கனவில் தோன்றி, 'முனிவரே நீ சென்று எம்முடைய நல்லன்பராகிய திருப்பாணரை இழிகுலத்தவர் எனக் கருதினீர். அது தவறு. இதன் பிராயச்சித்தமாக உன்னுடைய தோள் மீது ஏற்றி எம் திருமுன்பு கொண்டு வருவாயாக' என்று கட்டளையிட்டார்.

முனிவர் அதிகாலையிற் கண் விழித்து எழுந்து, கனவிற் இறைவன் இட்ட கட்டளையை நினைத்து மிகவும் வியப்படைந்தார். அரங்கரது ஆணையை நிறை வேற்ற எண்ணி அன்புடைப் பெரியார் பலரைத் தம்முடன் வரவழைத்துக் கொண்டு பாணர் பெருமாள் வழக்கமாக நின்று திருப்பாடல் தொண்டு புரியும் இடத்தை நாடிக் களிப்புடன் சென்றார்.

பாணர் பெருமாளை அணுகிய உலோக சாரங்கர், தலைமேல் கைகளைக் கூப்பி மும்முறை வலம் வந்து, மண்ணிற் கிடந்து பாணருடைய திருவடிகளை வணங்கி யெழுந்தார். பின்பு திருப்பாணாழ்வாரை நோக்கி, 'அய்யா நீர் என்னோடு வரவேண்டும் என்று பெருமாள் அடியேனுக்குக் கட்டளையிட்டு அருளினார்' என்று சொன்னார். அதற்குப் பாணர் "நீச்சனான அடியேன் திருவரங்கப் பெருநகரை மிதித்திடுதல் தகுமோ?" எனச் சொல்லி மறுத்தார்.

அதற்கு முனிவர் 'தேவரீர் நீர் மிதித்திட வேண்டா; பெருமாள் கட்டளைப்படி அடியேனது தோளில் ஏறி யருளும் என்று வேண்டினார். கடவுள் கட்டளை என்று மேலும் எடுத்துக் கூறினார். பின்னர் திருப்பாணர் தம் முடைய உயிரையும், உடலையும் இறைவனது அடிகளுக்கே உரியதாக்குகிறேன் என நின்றார். முனிவர் பாணரைத் தோளில் ஏற்றிக் கொண்டு சென்று அரங்கநாதனது திருமுன் இறக்கி விட்டார்.

திருப்பாணாழ்வார் இறைவனது திருவடி முதல் தலை வரையிலுமுள்ள அழகிய அவயவங்களெல்லாவற்றையும் ஒன்றன்பின் ஒன்றாகக் கண் குளிரப் பார்த்து சேவித்துக் களித்தார். மணவாளருடைய அழகிற் சிறந்த எல்லா அவ்யவங்களிடமும் தாம் நுகர்ந்த அழகையும் இன்பத்தை யும் உலகத்தார் எல்லாரும் நுகர்ந்து இன்புற்று உய்யத் திருவுள்ளங் கொண்டார்! அரங்கனது திருமேனியழகைச்

சிறந்த பத்து பாட்டுக்களால் பாடினார். அதற்கு அமலனாதிபிரான் என்று பெயர்.

பின்னர் சில காலம் சென்றபின் மக்கள் பலரும் காணும்படி திருப்பாணாழ்வார் பெரிய பெருமாளுடைய திருமலரடிகளையணுகிக் கீழே விழுந்து வணங்கி, அத் திருவடிகளினிடமே மறைந்து பேரின்ப வீட்டை அடைந்தார்.

திருப்பாணாழ்வாரால் பாடப் பெற்ற தலங்கள் :

1. திருவரங்கம், 2. திருவேங்கடம், 3. பரமபதம் முதலியனவாகும்.

## 12. திருமங்கையாழ்வார்

சோழ நாட்டின் பல உட்பிரிவுகளில் திருவாலி நாடு என்பதும் ஒன்றாகும். அந்நாடு தன்னகத்தே பல ஊர்களை உடையது. அவற்றுள் சிறப்புற்று விளங்குவது திருக்குறையலூர் என்னும் ஊராகும். இத்திருக்குறையலூரில் சதுர்த்த வருணத்தில் ஆலிநாடுடையார்க்கும் அவரது மனைவியாகிய வல்லித்திரு என்னும் அம்மைக்கும் (கி.பி. 8ஆம் நூற்றாண்டு) நள ஆண்டு கார்த்திகைத் திங்கள் பௌர்ணமி திதியில் வியாழக்கிழமையன்று கிருத்திகை நட்சத்திரத்தில் சார்ங்கமென்னும் வில்லின் அம்சமாய் அவதரித்தார் திருமங்கைஆழ்வார்.

இவருக்குப் பிள்ளை பருவத்தில் நீலநிறத்தர் என்று பெற்றோர் திருப்பெயர் இட்டார்கள். இவர் சோழ அரசனிடம் படைத் தலைவனாக இருந்து, பல வெற்றிகளைத் தேடித் தந்து, சோழ நாட்டின் மேன்மையை எங்கும் விளங்கும்படி செய்தார். அதனால் சோழ அரசன் இவர்பால் அன்பு மிக்கவனாகி, இவருக்கு ஆலிநாட்டை அளித்து, அதற்குத் திருமங்கை என்னும் பதியை தலைநக [illegible]

ராக அமைத்து, இவரைத் தன் சேனைத் தலைவர்களுள் முதன்மையானவராகச் செய்து பரகாலன் என்னும் வீரப் பட்டத்தையும் அளித்தான். இவர் ஏறும் குதிரைக்கு ஆடல்மா என்று பெயர்.

பின்பு, பரகாலர் என்னும் பட்டப் பெயருடன் மங்கை நகரத்தை ஆட்சிபுரிந்த திருமங்கை மன்னர், திருவாங்கூரி லுள்ள மருத்துவர் இல்லத்திற்கு எழுந்தருளி, அவரது வளர்ப்புப் பெண்ணாகிய குமுதவல்லியைத் தனக்குத் திருமணம் செய்துத் தரவேண்டும் என்று விண்ணப்பித் தார்.

குமுதவல்லியாரைத் தமது வாழ்க்கைத் துணையாக்கிக் கொண்ட திருமங்கை மன்னராகிய ஆழ்வாரும் நாள் தோறும் ஆயிரத்தெட்டு வைணவர்களுக்கு அன்னம் அளித்து ஆராதித்தார். இங்ஙனம் நாள்தோறும் நடை பெறும் செய்தி நானிலத்தோர் அனைவரும் பாராட்டினர். இச்செய்தி சோழ வேந்தனது செவிக்கும் எட்டியது. மங்கை நகர மன்னரும் ஆழ்வாருமாகிய பரகாலரிட மிருந்து கப்பப் பணம் வருவதில்லை என்ற செய்தியும் மன்னருக்கு அமைச்சர்கள் எடுத்துரைத்தார்கள்.

சோழ மன்னன் பகுதிப் பணத்தை வாங்கிவர ஆட் களை அனுப்பினான். தருவதாக தெரிவித்த ஆழ்வார் தருவதாக இல்லை. அதனால் மீண்டும் ஆட்களை அனுப்ப ஆழ்வார் கோபம் கொண்டு அவர்களை விரட்டி அடித்து அனுப்பினார். அவர்களும் அஞ்சி அங்கிருந்து அகன்று, அரசனிடம் நடந்த நிகழ்ச்சிகளை அறிவித்தார்கள். பரகாலர் தனது ஆணையை மீறியதற்காகக் கோபங் கொண்ட சோழவேந்தன், தனது சேனாதிபதியை அழைத்து படையுடன் சென்று பரகாலனை அங்குப் பிடித்து வருமாறு ஏவினான்.

சேனாதிபதியும் யானை, குதிரை, காலாட்களுடன் சென்று பரகாலனை வளைத்துப் பிடிக்கப் பார்க்க, மங்கை

மன்னர் குதிரையின் மேலேறித் தம் படைகளுடன் வந்து ஆரவாரத்துடன் அவர்கள்மேல் விழுந்து, சேனைகளை யெல்லாம் துண்டித்துத் துரத்தியோட்டி விட்டார். சேனாதிபதியும் வெட்கப்பட்டு ஓடி அதனை அரசனுக்கு அறிவித்தான். அரசனே தன் படையும் பரிவாரங்களுமாக போருக்குச் சென்று பரகாலரைச் சுற்றி வளைத்துப் பிடித்தான். அதற்கும் அஞ்சாத ஆழ்வாரின் போர்த்திறமையை அரசன் பார்த்து வியந்தான்.

அரசன் ஆழ்வாரைப் பாராட்டியதுடன் நீர், செய்த தவறுகளை எல்லாம் மறந்தேன். அஞ்சாமல் வருக' என அழைத்து வீரத்தைப் . பாராட்டியதுடன் தர வேண்டிய கப்பப்பணத்தை மட்டும் தரவேண்டும் எனவும், அதுவரையில் அமைச்சர்களின் பாதுகாவலில் பரகாலர் இருக்க வேண்டும் எனவும் பணித்தார். அமைச்சர்களும் பரகாலரைப் பிடித்துக் கொண்டு வந்து ஒரு தேவாலயத்தில் சிறை வைத்தனர்.

ஆழ்வார் அந்தக் கோயிலில் மூன்று நாட்கள் உணவின்றிச் சிறையிருந்தார். ஆழ்வாரது கனவில் இறைவன் தோன்றி 'உமது பகுதிக்கு வேண்டிய பணம் நாம் தருகிறோம். காஞ்சீபுரத்திற்கு வாரும்' என்றாராம். எனவே ஆழ்வார், அமைச்சர்களிடம் 'காஞ்சீபுரத்தில் பணம் புதைத்து வைக்கப்பட்டுள்ளது. அங்கு வந்தால் உங்கள் பகுதியைத் தருகிறேன்' என்றார். அமைச்சர்களும் அரசனிடம் சொல்லிவிட்டு காஞ்சீபுரம் சென்று வேகவதி தீரத்தில் பணம் இருக்கும் இடத்தை அடையாளம் கண்டு ஆழ்வார் மூலம் கண்டெடுத்த பணத்தைப் பெற்றுக் கொண்டதாகச் சொல்வர்.

அமைச்சர் நிகழ்ந்த செய்தியை அரசனுக்கு அறிவித்து அரசர் முன் கப்பப் பணத்தை வைத்தார். வேந்தன் காஞ்சீபுரம் வரதராஜப் பெருமாள் பணம் தந்த செய்தியைக் கேட்டு வியப்புற்று, இவர் மனிதர்களுள் மேம்பட்ட

பெருமையுடையவர் என்று எண்ணி, அவர் அளித்த கப்பப் பணத்தைக் கருவூலத்தில் சேர்க்காமல் ஆழ்வாரை அழைத்து அவரிடமே தந்து வைணவ பெருமக்களுக்கு உணவிடுவதற்கே செலவு செய்யவும் என்றார்.

ஆழ்வாரிடம் பணம் தீர்ந்தபின் வழிப்பறி கொள்ளையடித்துக்கூட வைணவர்களுக்கு உணவளித்து வந்தார் என்றும் சொல்வார்கள். அப்போதுகூட இறைவன் நேரில் வந்து உதவியதாகவும் சொல்வர்.

இதனாலுண்டான அன்பினாலும், வியப்பினாலும் இறைவன் மீது ஆழ்வார்கள் திருமொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந் தாண்டம், திருவெழுக் கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்கிற ஆறு பிரபந்தங்களையும் அருளிச் செய்தார். நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு வேதங்களின் சாரமாகிய நான்கு பிரபந்தங்களுக்கும் ஆறு அங்கமாக ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்கிற நான்கு விதமான கவிகளால் அருளிச் செய்து சிறப்புற்றார். இதனால் பரகாலருக்கு "நாலு கவிப்பெருமாள்" என்னும் பட்டப் பெயர் வழங்கலாயிற்று.

திருமங்கையாழ்வார் திருமொழி அருளிச் செய்த தலங்களதோறும் சென்று, ஆங்காங்கு எழுந்தருளியுள்ள திருமாலை வணங்கிப் பின் சோழ மண்டலத்திற்கு எழுந்தருளினார். அவ்வமயம் ஆழ்வாரின் சீடர்கள், "நாலுகவி பெருமாள் வந்தார்! நம் கலியன் வந்தார்! ஆலி நாடர் வந்தார்! அருள்மாரி வந்தார்! கொங்கு மலர்க் குழலியர் வேள் வந்தார்! மங்கை வேந்தர் வந்தார்! பரகாலர் வந்தார்!" என்று விருது கூறிச் சென்றனர்.

திருமங்கை ஆழ்வார் பல தலங்களுக்குச் சென்று சேவித்து திருவரங்கம் வந்து அங்கு அரங்கன் கோயில் பணிகளில் சிறந்து விளங்கினார்.

இவரால் பாடப் பெற்ற தலங்கள்:

1. திரு அட்டபுயகரம், 2. திரு அரிமேய விண்ணகரம், 3. திரு அன்பில், 4. திரு ஆதனூர், 5. திரு இந்தளூர், 6. திரு உறையூர், 7. திரு ஊரகம், 8. திருக்கண்டியூர், 9. திருக்கரம்பனூர், 10. திருக காரகம், 11. திருக் காவளம்பாடி, 12. திருக்காழிச் சீராம விண்ணகரம், 13. திருக் கூடலூர், 14. திருச் சாளக் கிராமம், 15. திருச் சிங்கவேள் குன்றம், 16. திருச் சித்ர கூடம், 17. திருச் சிறுபுலியூர், 18. திருச் செம்பொன் செய் கோயில், 19. திருத்தஞ்சை மாமணிக் கோயில், 20. திருத தலைச் சங்க நாண்மதியம், 21. திருக் கடன் மல்லை, 22. திருக் கடிகை, 23. திருக் கண்ணங்குடி, 24. திருக் கண்ணபுரம், 25. திருக் கண்ணமங்கை, 26. திருக் கள்வனூர், 27. திருக் குடந்தை, 28. திருக் குறுங்குடி, 29. திருக் கூடல், 30. திருக் கோட்டியூர், 31. திருக் கோவலூர், 32. திருநீர்மலை, 33. திருவரங்கம், 34. திரு விண்ணகர், 35. திருவிட வெந்தை, 36. திருவல்லிக் கேணி, 37. திரு வெஃகா, 38. திருவேங்கடம், 39. திரு நீரகம் முதலிய ஊர்களும் அங்கு வீற்றிருக்கும் இறைவனும் ஆகும்.

பன்னிரு ஆழ்வார்கள் பாடிய நாலாயிரத் திவ்விய பிரபந்தத்திற்கு வைணவ ஆசிரியன்மார்கள் உரை வகுத் திருப்பதோடு தாமே நூல்களும் படைத்துள்ளனர்.

நாலாயிர திவ்விய பிரபந்தத்தைத் தொகுத்த நாதமுனிகள் தாமே எழுதியவை நியாய தத்துவம்; யோக ரகசியம் என்ற நூல்கள்.

12ம் நூற்றாண்டில் தோன்றிய இராமாநுசரும் திருக்குகைப் பிரான் பிள்ளான், பராசபட்டர், நஞ்சீயர், பெரிய வாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை, பிள்ளைலோகாசாரியார், மணவாள முனிவர், பிள்ளைப் பெருமாளய்யங்கார் முதலியோரும் நூல்கள் இயற்றி வைணவ பக்தி மார்க்கத்தை வளர்த்தனர்.

# 11. பிற இலக்கியங்கள்

## வில்லி பாரதம்

பாரதக் கதை பெருந்தேவனார், நல்லாப் பிள்ளை, வில்லிபுத்தூராழ்வார் போன்றவர்களால் இயற்றப் பெற்றது. எனினும் வில்லிபாரதத்தையே எல்லாரும் விரும்பிப் போற்றுகின்றனர். பெண்ணையாற்றங் கரையில் திருமுனைப்பாடி நாட்டில் சனியூரில் வைணவ அந்தணர் குலத்தில் வில்லிபுத்தூராழ்வார் தோன்றினார்.

வடமொழி, தென்மொழி என்னும் இரண்டிலும் நல்ல புலமையுடையவராய்த் திகழ்ந்திருந்தார். இவருடைய மைந்தர் வரந்தருவார். வக்கபகை என்னும் நாட்டை யாண்ட வரபதி மன்னர் இவரை ஆதரித்தார். இவர் காலம் 15ம் நூற்றாண்டு.

10 பருவங்களைக் கொண்டது பாரதம். அவைகள்: ஆதி பருவம், சபா பருவம், ஆரணிய பருவம், விரா பருவம், உத்தியோக பருவம், வீட்டும பருவம், துரோண பருவம, கன்ண பருவம், சல்லிய பருவம், சௌப்திக பருவம் ஆகும்.

ஒவ்வொரு பருவத்திலும் பல சருக்கங்கள் அடங்கி யுள்ளன. சருக்கங்கள் என்பது சிறு பிரிவாகும். பாரதத்தில் பகவத் கீதையும் அடங்கியுள்ளது. அருச்சுன

னுக்கும் அவனது தேர்ச் சாரதியாக விளங்கிய கண்ணனுக்கும் நடந்த உரையாடலே பகவத் கீதை.

தன்னுடைய உறவினரை எதிர்த்துப் போர் செய்யத் தயங்கிய அருச்சுனனுக்குக் கண்ணபரமாத்மா தத்துவங்களை விளக்கிக்கூறி அவனுக்குத் தெளிவு உண்டாக்கினார். அந்தத் தத்துவங்களை பகவத் கீதையில் காணலாம். வேதாந்த தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு, பலவகை யோகங்களைப் பற்றி விளக்கிக் கூறும் தூய நூல் பகவத் கீதை.

பாண்டவர் ஐவருக்கும், கௌரவர் நூறு பேருக்கும் இடையே நிகழ்ந்த போராட்டங்களில் திருமாலின் அவதாரமான கண்ணன், பாண்டவர் பக்கமிருந்து நீதியை நிலை நிறுத்தினார். இது வைணவ காப்பியமாகும்.

## கம்ப ராமாயணம்

வால்மீகி முனிவர் வடமொழியில் இயற்றிய இராமாயணத்தை கவிச்சக்ரவர்த்தி கம்பர் செந்தமிழில் இயற்றியிருக்கிறார். இது மூல நூல் போன்ற சிறப்புடையது.

வால்மீகி மனிதனாகவே காட்டிய இராமனைக் கம்பர், திருமால் அவதாரங்களுள் ஒன்றாகப் போற்றிப் பாடியுள்ளார். ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டையும், ஆண்களுக்கும் கற்பு வேண்டும் என்ற உயர்ந்த கொள்கையினையும், தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்ற தத்துவத்தையும் இந்நூலில் காணலாம். கணவரின் பின் செல்வதே கற்புடைய மங்கையர்க்கழகு என்பதைச் சீதை வாயிலாகவும், உடன் பிறந்த பாசத்தை இலக்குவன், பரதன் வாயிலாகவும், எக்குடியில் பிறந்தாலும் அன்பால் உளம் ஒன்றுபட்டால் அனைவரும் உடன்பிறப்பே என்ற கொள்கையை குகன், அநுமன், சுக்ரீவன், வீடணன் வாயிலாகவும், பிறன் மனைவியை விரும்பினால் அழிவு

நிச்சயமே என்பதை இராவணன் மூலமாகவும் கம்ப இராமயணம் உணர்த்துகிறது.

ஆறு காண்டங்களைக் கம்பரும், ஏழாவது காண்ட மாகிய உத்தர காண்டத்தை ஒட்டக்கூத்தரும் இயற்றிய தாகக் கூறுவர்.

இது திருவரங்கப் பெரிய கோயிலில் அரங்கேற்றப் பட்டது. இது தவிர, சரவதி அந்தாதி, சடகோபர் அந்தாதி, ஏரெழுபது, குலோத்துங்கன் கோவை முதலிய வற்றையும் கம்பர் இயற்றியுள்ளார்.

## உலா

அரசன் அல்லது ஆண்டவன் உலா வரும்போது பொது மகளிருள் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்னும் ஏழு பருவத்தினரும் தத்தம் பருவத்துக்குத் தகுந்தபடி உணர்ச்சி கொண்டு அவர் மீது காதல் கொள்வர் என்பதை உலா நூல்கள் மூலம் அறிகிறோம்.

இறைவனைக் குறிக்கும்போது பேரின்பக் காதல் எனவும், மன்னனைக் குறிக்கும்போது சிற்றின்பக் காதல் எனவும் கூறுவர். உலாப் பாடுவதில சிறந்த புலவர் ஒட்டக் கூத்தர். அவர் பாடிய விக்கிரம சோழன் உலா, குலோத்துங்க சோழன் உலா, இராசராச சோழன் உலா என்பவற்றை மூவர் உலா என வழங்குகின்றனர். உலா கலிவெண்பாவில் பாடுவதாகும்.

ஆதி உலா (திருக்கைலாய ஞான உலா) சேரமான் நாயனார் எழுதியது. ஞானவினோதன் உலாவும், சொக்கநாதர் உலாவும் தத்துவராயரும்; ஆளுடைய பிள்ளையார் திருவுலாவை நம்பியாண்டார் நம்பியும்; ஏகாம்பரநாதர் உலாவை இரட்டைப் புலவரும்; திருவாரூர் உலாவை அந்தகக்கவி வீரராகவ முதலியாரும்;

திருக்குற்றால நாதர் உலாவை திரிகூட ராசப்பக் கவிராயரும் பாடியுள்ளனர்.

மேலும் சங்கர சோழன் உலா, சிவஞான பலைய தேசிகன் உலா, சிவந்தெழுந்த பல்லவராயன் உலா என்று பல உலா நூல்களும் உள்ளன.

## பரணி

ஆயிரம் களிறுகளைக் (ஆண் யானை) கொன்று அழித்து வெற்றி கண்ட மாவீரனைப் போற்றிப் பாடுவது பரணி என்பர்.

இது கடவுள் வாழ்த்து, கடைத்திறப்பு,காடு பாடியது, கோயில் பாடியது, தேவியைப் பாடியது, பேய்களைப் பாடியது. இந்திரசாலம், இராச பாரம்பரியம், பேய் முறைப்பாடு, அவதாரம், காளிக்கு கூளி கூறியது, போர் பாடியது, களம் பாடியது எனும் 13 உறுப்புக்களைக் கொண்டிருக்கும். பரணிகளுள் சிறந்ததாகப் போற்றப் படும் ஜெயங்கொண்டார் பாடிய கலிங்கத்துப் பரணியில் முதற் குலோத்துங்க சோழன் வடகலிங்கப் போரில் அனந்தவர்ம சோடங்கன் என்னும் மன்னனை வெற்றி கொண்ட சிறப்புப் பாடப் பெறுகிறது.

கலிங்கத்துப் பரணியில் கூறப்படும் 'இராச பாரம் பரியம்' எனும் பகுதியால் சோழ அரசனின் தொன்மை வரலாறு நன்கு தெரிய வருகிறது.

களத்தைப் பாடும் பகுதியை படிப்பவர், போர்க் களத்தையே நேரிற் காண்பதைப் போன்ற உணர்ச்சியை யடைவர் என்பது திண்ணம்.

ஒட்டக்கூத்தர் இயற்றிய தக்கயாகப் பரணியில் தக்கனது யாகத்தை வீரபத்திரர் அழிப்பதைப் பாடுவதன் மூலம் இராசராசனின் வெற்றிச் சிறப்புக்கள் விளக்கப் படுகின்றன.

## கலம்பகம்

பல வகையான பாவும் இனமும் கலப்பதற்கு இடமாகிய நூல் ஆதலால் கலம்பகம் எனப்பெயர் பெற்றது. கலப்பு + அகம் = கலம்பகம்.

கலம்பகங்களுள் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது குமரகுருபரர் இயற்றிய மதுரைக் கலம்பகமேயாகும். அடுத்த நிலையில் எண்ணப் படுபவை அழகர் கலம்பகம், அரங்கர் கலம்பகம் என்பவையாகும்.

மதுரைக் கலம்பகம், மதுரையில் கோயில் கொண்டுள்ள சொக்கநாதரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது. குமரகுருபரர் பாடிய மற்றொரு கலம்பகம், காசிக் கலம்பகம், அழகர் கலம்பகம் எனும் வைணவக் கலம்பக நூல் திருமாலைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு விளங்குகிறது.

கலம்பகம் 18 உறுப்புகளைக் கொண்டது. அவை புயவகுப்பு, தவம், வண்டு விடுதூது, அம்மானை, பாண், மதங்கியார், கைக்கிளை, சித்து, ஊசல், களி, மடக்கு, ஊர், மறம், காலம், தழை விருப்புரைத்தல், தலைவி யிரகல், சம்பிரதம், மேக விடுதூது.

கலம்பகக் கவிகள் அந்தாதியாக நூறு அமைய வேண்டும் என்பர். கலம்பகச் செய்யுட்களைத் தேவர்க்கு நூறும், முனிவர்க்குத் தொண்ணூற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், அமைச்சர்க்கு எழுபதும், வணிகர்க்கு ஐம்பதும், வேளாளர்க்கு முப்பதுமாக இயற்ற வேண்டும் என்றும் பொதுவாகக் கூறுவர். கலம்பகத்திற்கு இலக்கணம் வச்சணந்தி மாலை வகுத்தது. எண் வகைச் சுவையும் கலந்த நூலே கலம்பகம் ஆகும்.

முதல் கலம்பகம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் செய்யப் பெற்றது. தெய்வத்திற்குரிய கலம்பகம், அவர் கோயில் கொண்டுள்ள திருத்தலத்தின் பெரையும், அரசர்க்குரிய கலம்பகம் அவரவர் பெயரையும் குறித்து உள்ளது.

## பிள்ளைத் தமிழ்

பிள்ளைத் தமிழ் என்பது, தம் புதல்வரை ஆண்டவன் காத்து அருள் புரிய வேண்டும் என்று பாடுவதும், தாலாட்டுப் பாடுவதும், மழலை பேசுமாறு தூண்டுவதும், கைகொட்டச் செய்வதும், முத்தம் தருமாறு வேண்டுவதும், தளர் நடை காணலும், நிலாவைக் காட்டி அழைப்பதும், சிற்றில் சிதைப்பதும், சிறுதேர் உருட்டலும், சிறுபறை முழக்கலும் முதலிய பிள்ளைகளின் விளையாட்டு நிகழ்ச்சிகளைக் கண்டு உள்ளங் களித்தல் பிள்ளைத் தமிழ் பிரபந்தங்களில் காணப் பெறும் இன்ப மாகும். இதனைப் பிள்ளைக் கவியெனவும் பிள்ளைப் பாட்டெனவும் கூறுவர்.

இதனைப் பத்துப் பருவங்களாகப் பகுத்துள்ளனர். ஆண்பாற் பிள்ளைத் தமிழ்:—காப்பு, செங்கீரை, தாலாட்டு, சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுதேர், சிறுபறை.

பெண்பாற் பிள்ளைத் தமிழ் :— காப்பு, செங்கீரை, தாலாட்டு, சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, கழங்கு, அம்மானை, ஊசல்.

பிள்ளைத் தமிழ் முதன் முதலாக ஒட்டக்கூத்தரால் செய்யப்பெற்றது என்பர். அது குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ் ஆகும்.

பிள்ளைத் தமிழ் நூல்களுள் சிறப்பாகக் கருதப் படுவது குமரகுருபரரால் பாடப்பெற்றமீனாட்சியம்மைப்

பிள்ளைத் தமிழேயாகும். மற்ற பிள்ளைத் தமிழ் நூல்கள் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் (குமரகுருபரர்) அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் (சிவஞான சுவாமிகள்) திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ் (பகழிக் கூத்தர் சேக்கிழார் பிள்ளைத் தமிழ் (மீனாட்சி சுந்தரம் பிள்ளை) காந்திமதியம்மைப் பிள்ளைத் தமிழ், கம்பன் பிள்ளைத் தமிழ், நபிநாயகப் பிள்ளைத் தமிழ், ஆண்டவர் பிள்ளைத் தமிழ் என்பவைகள் இருக்கிறது.

## குறவஞ்சி

குறவஞ்சி நாடக வகையைச் சேர்ந்தது. குறத்திப் பாட்டு, குறவஞ்சி நாடகம், குறவஞ்சி நாட்டியம் என்வும் கூறுவர்.

தலைவன் பவுணி வரவு, அது கண்டு மகளிர் கூறுறல் தலைவி வரவு, பவுணி வந்த தலைவனைக் கண்டு மயங்கல, சந்திரன், தென்றல் முதலியவற்றைப் பழித்தல், பாங்கி தலைவியை உற்றது என்னென வினாவுதல், தலைவி யுற்றது உரைத்தல், தலைவனைப் பழித்துக் கூறல், தலைவி தலைவனைப் புகழ்ந்து கூறல், தலைவர் தூது வேண்டல், தலைவி தலைவனை அடையாளங் கூறல், குறத்தி வரவு, தலைவி குறத்தியை மலைவளம் முதலியன வினாவுதல். குறி சொல்லி தான் பெற்ற பரிசுகளைக் கூறுதல். குறத்தி யிடம் குறி கேட்டல், குறத்தி தெய்வம் தொழுது குறி சேர்த்து நல்வரவு கூறல், தலைவி பரிசில் உதவி விடை எய்தல், குறவன் வருதல், புட்கள் வருதல், கண்ணி குத்தல், பறவை பிடித்தல், குறவன் குறத்தியை விருப்புமுற்றுத் தேடுதல் ஆகிய உறுப்புகள் குறவஞ்சியில் அடங்கியிருக் கும். இவற்றுள் குறத்தியின் செயல்களே மிகுந்து இருப்ப தால் குறவஞ்சி என்று வழங்கினர்.

குறவஞ்சியில் சிறந்தது திரிகூட ராசப்பக் கவிராயர் இயற்றிய குற்றாலக் குறவஞ்சியே என்பர்.

திருவாரூர்க் குறவஞ்சி, அழகர் குறவஞ்சி, சரபேந்திர பூபால குறவஞ்சி, விராலி மலைக் குறவஞ்சி போன்றவைகளும் உள்ளன.

## பள்ளு

பள்ளி, பள்ளன் என்போரைப் பற்றிப் பாடப் பெறுவதால் இது பள்ளு எனப்பட்டது. மிக எளிமையான வழக்குச் சொற்களால் பள்ளுப் பாடல்கள் பாடப் பெற வேண்டும். பள்ளு நூல்களுள் சிறந்ததாக முக்கூடற் பள்ளு என்று குறிப்பிடுவர்.

காப்புச் செய்யுள், கடவுள் வாழ்த்து, பள்ளியர் ஏசல், பள்ளியர் சமாதானம் ஆதல், வாழ்த்து எனப் பல உறுப்புக்களை யுடையது பள்ளு. பள்ளுப் பாடல்களின் சந்த ஒலி நயம் செவிக்கு இன்பம் அளிக்கக் கூடியது. இதில் பாட்டுடைத் தலைவன் பெயர் மட்டுமே குறிக்கப் பெறும். இது பாட்டுடைத் தலைவனைப் போற்றுவதன் மூலம், நாட்டு வளம், உழவுத் தொழில் புரியும் எளியவர் வாழ்க்கைப் போன்றவற்றைச் சிறக்கக் கூறும் நூலாகும்.

திருவாரூர்ப் பள்ளு, குருகூர்ப் பள்ளு, திருமலைப் பள்ளு, சிவசைலப் பள்ளு, வடகரைப் பள்ளு, வைசியப் பள்ளு, சீர்காழிப் பள்ளு, தில்லைப் பள்ளு, கண்ணுடையம்மை பள்ளு, கதிரை மலைப் பள்ளு, பறாலை விநாயகர் பள்ளு, தண்டிகைக் கனகராயன் பள்ளு, சேற்றூர்ப் பள்ளு, திருவிடைமருதூர்ப் பள்ளு, மாந்தைப் பள்ளு, திருநீலகண்டன் பள்ளு போன்ற பல பள்ளு நூல்கள் தோன்றியுள்ளன.

## தூது

தலைவன் தலைவியருள் விரகதாபத்தால் துன்புறும் ஒருவர், தம்முடைய நிலையைத் தெரிவிக்கும்படி மற்றவர் பால் உயர்திணையைச் சார்ந்தவரையேனும், அஃறிணை

யைச் சார்ந்ததையேனும் தூது விடுவிப்பதாகப் பாடுவது தூது நூலாகும். இது கலிவெண்பாவால் அமைந்து இருக்கும்.

வசைவிடு தூது, நெல்விடு தூது, துகில் விடு தூது, தமிழ் விடு தூது என்றும் உண்டு. தூது விடுக்க மயில், கிளி, மேகம், நாகவாய்ப் புள், தோழி, குயில், பேதை, நெஞ்சு, தென்றல் இவைகளையும் பயன்படுத்தினர்.

தேவார திவ்வியப் பிரபந்தங்களிலும் தூதின் வகைகள் ஆங்காங்கு அமைந்துள்ளன. கலம்பகம், அந்தாதி முதலியவற்றின் இடை இடையேயும் தூது அமைக்கப் பட்டிருப்பதைக் காணலாம்.

## கோவை

அகப் பொருளுக்குரிய துறைகளை அமைத்துக் கோப்பதனால் கோவை எனப் பெயர் பெற்றது. இது அகப் பொருட் செய்திகளைக் கூறுவது. அகப் பொருளுக்கு உரிய ஐந்திணை நிகழ்ச்சிகளையும் கூறுவதால் இதனை ஐந்திணைக் கோவை என்றும் வழங்குவர். கோவைகளைக் கட்டளைக் கலித்துறையில் பாடுவர்.

கைக்கிளை, களவு, வரைவு, கற்பு, என்னும் பெரும் பிரிவுகளும், கைக்கிளை முதலிய 33 கிளவிகளும், ஒவ்வொரு கிளவியிலும் பல துறைகளும் கோவைகளில் காணலாம். உள்ளம் ஒத்த தலைவனும் தலைவியும் மணம் கொண்டு இல்லறம் நடந்துங்கால் விருந்தினரைப் பேணுதல் போன்ற வாழ்வாங்கு வாழும் நெறியில் ஒழுகுதலைக் கற்பனை நயத்தோடு எடுத்துரைத்து ஒரு கோவையாக்கி, கற்றோர்க்கும் கேட்டோர்க்கும் இன்பம் பயக்கும் துள்ளல் ஓசையால் அமைந்த கட்டளைக் கலித்துறைப் பாக்களால் பாடப்படுவது கோவை எனப் படும்.

மாணிக்க வாசகரின் திருக் கோவையார், பாண்டிக் கோவை, அம்பிகாபதிக் கோவை திருவெங்கைக் கோவை, கோடீச்சரக் கோவை, தஞ்சை வாணன் கோவை போன்றவை குறிப்பிடத் தகுந்த கோவை நூல்களாகும்.

திருக் கோவையாரும், திருவெங்கைக் கோவையும், கோடீச்சரக் கோவையும் இறைவனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டுள்ளன. அம்பிகாபதிக் கோவை யாரையும் தலைவனாகக் கொள்ளாமல் கோவை நிகழ்ச்சியை மட்டும் அறிவிக்கின்றது. பிற கோவைகள் அரசர்களையும், வள்ளல்களையும், பிறரையும் பாட்டுடைத் தலைவர்களாக ஏற்று பாடுகின்றன.

கோவைகளில் சிறந்ததாகப் போற்றப் படுவது திருச்சிற்றம்பலக் கோவை எனும் திருக் கோவையாரே. அதன் சிறப்பைக் கருதியே 'ஆர்' எனும் தகுதி சேர்த் துள்ளனர்.

## வெற்றி வேற்கை

நறுந் தொகை என்ற வேறு பெயரும் இதற்கு உண்டு. இதன் ஆசிரியர் அதிவீரராம பாண்டியன். அதிவீரராம பாண்டியன் கொற்கையை ஆண்ட புவி மன்னராகவும், கவி மன்னராகவும் வாழ்ந்தவர். 'வெற்றி வேற்கை வீர ராமன்' என்ற தொடரிலுள்ள 'வெற்றி வேற்கை' யினையே பிற்காலத்தில் இதன் பெயராகக் கொண்டது.

பழம் பெரும் நூல்களில் அடங்கியுள்ள நீதிகளின் சாரம் இதில் அடங்கியுள்ளது. நல்லனவாகிய நெறிகளைத் தொகுத்துக் கூறும் 'நறுந்தொகை'யிலிருந்து, இவர் காலத் தில் சாதி முறை தமிழகத்தில் புகுந்து விட்டது என்று தெரிந்து கொள்ள முடிகிறது.

வேதியர்க்கழகு, மன்னர்க்கழகு, வணிகர்க்கழகு, உழவர்க்கழகு என்று தொடங்கும் நூற்பாக்கள் இந்த உண்மையைத் தெளிவாக்குகிறது.

அரசர்கள், அமைச்சர்கள், குடிமக்கள் என்னும் பல வகையினருக்கும் தேவையான நீதிகள் ஏற்ற உவமைகளுடன் இந்நூலில் கூறப் பெற்றுள்ளன.

இதில் சிறு பிரிவுகளும் பெரும் பிரிவுகளுமாக 41 செய்யுட்கள் இடம் பெற்று இருக்கின்றன. இதன் ஆசிரியர் தண்டமிழ்ப் புலமையும் வடமொழி அறிவும் நிரம்பியவர். இவரது தமையனார் வரதுங்க பாண்டியனும் தமிழ்ப் புலமையுடையவரே. அதிவீர ராமர் எழுதிய நைடதம், கூர்ம புராணம், இலிங்கப் புராணம், காசி காண்டம், வாயு சங்கிதை, திருக்கருவை அந்தாதிகள் முதலியவை இவருடைய புலமையை புலப்படுத்துகின்றன.

இவருடைய காலம் இன்றைக்கு 400 ஆண்டுகட்கு முற்பட்டது என்பர்.

## நன்னெறி

இதனை இயற்றியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச முனிவர். நன்மையைத் தரும் வழிகளைக் கூறும் நூல் நன்னெறி. பொம்மபுரம் என்னும் ஊரின் கடற்கரைக்குச் சென்று அமைதியான சூழலிலிருந்து இந்நூலை ஆக்கியளித்தனர் என்பர்.

இம்மையிலும் [illegible] மா[illegible] கூடிய நெறிகளை 40 வெண்பாக்களின் மூலமாக உரைத்துள்ளார். இள வயதினர் படித்துணரத் தகுந்த உவமானங்களும் உவமேயங்களும் ஒவ்வொரு செய்யுளிலும் காணலாம்.

ஏறக்குறைய 300 ஆண்டுகட்கு முன்னர் சிவப்பிரகாச முனிவர் பிறந்தவர். காஞ்சிபுரத்தில் தொண்டை மண்டல வேளாளர்க்குக் குருக்களாகப் பணியாற்றிய குமாரசுவாமி தேசிகர் என்பவரின் திருமகனார் இவர். வேலையர், கருணைப்பிரகாசர், ஞானாம்பிகை எனும் மூவரும் இவர் உடன் பிறந்தோர்.

வீரமாமுனிவர் காலத்தில் இவர் (1711-1742) வாழ்ந்தவர். இவர் இயற்றிய வேறு நூல்கள் : சோண சைல மாலை, திருச்செந்தூர் நிரோட்டகயமக அந்தாதி, திருவெங்கைக் கோவை, கலம்பகம், உலா நூல்கள், சிவப்பிரகாச விசாகம், தர்க்க பரிபாஷை, சதமணி மாலை, நால்வர் நான்மணி மாலை. இவர் தம் ஞானாசிரியரான சிவஞான பாலைய தேசிகர் மீது தாலாட்டு, நெஞ்சு விடு தூது, வேதாந்த சூடாமணி, பிரிபுலிங்க லீலை, கூவப் புராணம், பழமலை அந்தாதி, பிக்ஷாடன நவமணி மாலை, கொச்சகக் கலிப்பா, பெரிய நாயகியம்மை விருத்தம், பெரிய நாயகியம்மைக் கட்டளைக் கலித்துறை. இவர் 32 ஆண்டுகளே வாழ்ந்தார்.

## ஆத்தி சூடி

ஆத்தி சூடி என்ற தொடரால் குறிக்கப்படுபவர் சிவ பெருமான். இந்நூல் ஆத்தி சூடி என்னும் முதற் குறிப்பைப் பெற்று இருப்பதால் ஆத்தி சூடி என்றே பெயர் பெற்றது.

இந்நூலில் காப்புச் செய்யுள் நீங்கலாக 109 பாக்கள் இடம் பெற்றுள்ளன. ஆத்தி சூடியினையும், கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, ஞானக் குறள் முதலான நூல்களையும் இயற்றியவர் ஔவையார். ஔவையார் என்ற பெயரில் தமிழகத்தில் பல ஔவையார்கள் இருந்துள்ளனர். இங்கே குறிப்பிட்ட அற நூல்களை அருளிச் செய்த்

வர் பிற்கால ஔவையாரே. இவரே கம்பர் காலத்தில் வாழ்ந்தவர்

பத்தாம் நூற்றாண்டினர். கடைச் சங்க காலத்தில் அதியமானின் நண்பராக வாழ்ந்து அவனால் கரும் நெல்லிக்கனி அளிக்கப் பெற்ற ஔவையார் இவரல்லர். 'அறம் செய விரும்பு' முதல் 'ஓரம் சொல்லேல்' வரை உள்ள எல்லாப் பாக்களுமே மிகவும் எளிமையானவை.

## கொன்றை வேந்தன்

ஆத்தி சூடியை இயற்றிய ஔவையாரே இதன் ஆசிரியர். ஆத்தி சூடியில் இருப்பன எளிய, சுருக்கமான சொற்றொடர்கள். கொன்றை வேந்தனில் சற்று நீண்ட சொற்றொடர்கள் உள்ளன.

இந்நூலில் காப்புச் செய்யுள் நீங்கலாக மொத்தம் 91 பாக்கள் காணப்படுகின்றன.

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' முதல் 'ஓதார்க்கில்லை உணர்வொடு ஒழுக்கம்' வரையுள்ள அத்தனைப் பாக்களுமே கற்பவர் எளிதில் பொருள் உணருமாறு உலக வழக்கிலுள்ள சொற்களாகவே அமைந்துள்ளன.

ஔவையார் மேலும் எழுதிய சில :

**"ஈதல் அறம்; தீவினைவிட்டு ஈட்டல் பொருள்;**
**எஞ்ஞான்றும்**
**காதல் இருவர் கருத் தொருமித்(து)— ஆதரவு**
**பட்டதே இன்பம்; பரனை நினைந்(து) இம்மூன்றும்**
**விட்டதே பேரின்ப வீடு"**

வறுமையால் வந்து யாசித்தவருக்கு இல்லை எண்ணாமல் ஒரு பொருளைக் கொடுப்பது அறச் செயலாகும். தீய

வழியை விலக்கி நல்ல நெறியில் சேர்ப்பதே நல்ல பொருளாகும். எப்போதும் அன்பால் இணைந்த கணவனும் மனைவியும் ஒருமித்த உள்ளம் கொண்டு ஒருவருக்கொருவர் ஆதரவாக இருப்பதே இன்பமாகும். இறைவனை எண்ணி மேற்கூறப்பட்ட மூன்றிலும் பற்றை விடுவதே பேரின்பத்தை அளிக்கும் மோட்சத்தை அடைவதற்கு வழியாகும்.

தத்துவ ஞானியாகிய ஔவையார் தமது முடிவான கொள்கைகளாக கொடியது, இனியது, பெரியது, அரியது என்னும் நான்கு தலைப்புகளில் நான்கு பாடல்கள் எழுதியுள்ளார். அதன் விளக்கம்:

## 1. கொடியது :

இவ்வுலகத்தில் கொடியது எது என்று வினவினால், ஏழ்மையே அனைத்திலும் கொடியதாகும். அதைவிடக் கொடியது இளமைப் பருவத்திலேயே வரும் ஏழ்மையாகும். அதைவிடக் கொடியது தீர்க்கக் கொள்ள இயலாத கொடிய நோயாம். அதைவிடக் கொடியது அன்பு இல்லாத பெண்டிரை மனைவியாகப் பெற்றிருத்தலாகும். அதைவிடக் கொடியது அந்தப் பெண்டிர் இடும் உணவை உண்பதாகும்.

## 2. இனியது :

ஒப்பில்லா இனியது யாது எனக் கேட்பின் இனியவற்றுள் இனியது மற்றவர் தொல்லை இல்லாமல் தனியே இருப்பதாகும். அதைவிட இனியது இறைவனைத் தொழுவது ஆகும். அதைவிட இனியது அறிவுள்ளவரைச் சேர்தலாகும். அதைவிட இனியது கனவிலும் நினைவிலும் அறிஞரைக் காண்பதாகும்.

## 3. பெரியது :

எது பெரியது என்று கேட்டால் இவ்வுலகமே பெரியதாகும். இந்த உலகமோ நான்முகனால் படைக்கப்பட்ட

தாகும்; நான்முகனோ திருமாலின் தொட்டிலில் தோன்றி யவன்; திருமாலோ அலைகள் உடைய கடலில் பள்ளி கொண்டவன்; அந்தக் கடலோ அகத்தியரின் உள்ளங்கை யில் அடங்குவதாகும். குறுகிய வடிவுடைய அகத்திய முனிவரோ குடத்தில் தோன்றியவர்; குடமோ சிறிய அள வுள்ள இவ்வுலக மண்ணால் செய்யப் பெற்றதாகும்; இவ் வுலகமோ ஆதி சேடனாகிய பாம்புக்குச் சுமையாக தாகும்; அப்பாம்போ உமையம்மையாரின் விரலில் அணிந் துள்ள கணையாகும்; உமையம்மையோ சிவபெருமானின் இடப்பக்கத்தில் அடங்கியவள்; சிவபெருமானோ தொண் டரது உள்ளத்தில் அடங்கியிருப்பவராவர். எனவே சிவத் தொண்டரது பெருமை சொல்லுதற்கு அடங்காத பெரியது ஆகும். இறைவனைவிட இறைவனை உண்மை யாகத் தொழுகின்ற தொண்டனே உயர்ந்தவன் என்பது இதன் கருத்தாகும்.

## 4. அரியது :

இவ்வுலகில் அரியது என்று கேட்டால் மக்கட் பிறவி எடுப்பது அரியது.

மக்கட் பிறவியை எடுத்தாலும் உடலில் கூனல், குருட்டுத் தன்மை, செவிட்டுத் தன்மை ஆகியவை நீங்கப் பிறப்பது அரியதாகும். கூன், குருடு, செவிடு, பேடு ஆகியவை நீங்க ஒருவன் பிறந்தாலும் ஞானத்தையும் கல்வியையும் விரும்புதல் அரியதாகும்; மேற்கண்ட இரண் டையும் விரும்பும் போது ஈகை இயல்பையும், நோன்பை யும் மேற்கொள்ளுதல் அரியதாகும். அவ்விரண்டையும் மக்கள் செய்வார் எனின் அவர்களை ஏற்றுக் கொள்ள விண்ணுலகமே வழிவிடுமாம். இது ஈதல் இயல்பையும் நோன்பையும் சிறப்பிக்க ஔவையார் காட்டும் உவமை யாகும்.

**"தாயோடு அறுசுவைபோம்; தந்தையோடு கல்விபோம்;**
**சேயோடு தான் பெற்ற செல்வம்போம்;— ஆயவாழ்வு**
**உற்றார் உடன்போம்; உடன்பிறப்பாய் தோள் வலிபோம்;**
**பொன் தாலியோடு எவையும்போம்."**

அன்புடன் உணவை ஊட்டும் தாய் மறைந்ததும் அறு சுவையுடன் கூடிய உணவு கிடைப்பது இல்லையாகும்; தந்தை மறைந்ததும் பின்னர் மக்கட்குக் கல்விப் பயிற்சி இல்லையாகும்; மக்கள் மறைந்த பின் ஒருவன் பெற்ற செல்வம் நிலை பெறாமல் அழியும்; சிறப்பாக வாழும் வாழ்க்கை சுற்றத்தார் மறைந்த போது நீங்கி விடும்; உடன் பிறந்தவர் இல்லாத போது பக்கத் துணையாலே வரு கின்ற தோள் வன்மை இல்லையாகும்; மனைவி கழுத்தில் இருக்கும் பொன்னால் ஆன தாலி போகின்ற போது தானே போனபின் என்பதே ஆகும்.

தானே போன பின் என்ன உள்ளது? எல்லாமே போயிற்று அல்லது வாழ்க்கை முடிவுற்றது என்பதே ஆகும். ஔவையார் பல மேற்கோளாக எடுத்துச் சொல்லி யிருப்பினும் சில மேற்கோள்கள் இது. தமிழ் இலக்கியத் தில் ஔவையார் பங்கும் சிறப்பானது, இறை பக்தியில் இவரது மேற்கோள்கள் மேலும் சிறப்பானதாகும்.

# 12. தாயுமானவர் இறை பக்தி

**என்றும் இருக்க உளங் கொண்டாய்**
**இன்பத் தமிழுக் கிலக்கியமாய்**
**இன்றும் இருத்தல் செய்கின்றாய்!**
**இறவாய் தமிழோ டிருப்பாய்நீ!**
**ஒன்று பொருளஃ தின்பமென**
**உணர்ந்தாய் தாயு மானவனே!**
**நின்ற பரத்து மாத்திரமோ**
**நில்லா இகத்தும் நிற்பாய்நீ!** --பாரதியார்

தாயுமான அடிகளார் சைவ சமயத்தவர் ஆயினும் பிற சமயங்கள் எல்லாம் இறைவனாகிய கடலில் வந்து சேரும் நதிகளே என்று தெளிவாக உலகர் அனைவரையும் 'சேர வாரீர் செகத்தீரே' என்றும் 'எல்லோரும் இன்புற்றிருக்க' என்றும் பொது சிந்தனையை உள்ளடக்கிய பேருள்ளம் கொண்டவர் தாயுமானவர்.

பதினாறாம் நூற்றாண்டின் இறுதியில் திருமறைக் காட்டில் வாழ்ந்து வந்த வேளாள மரபினராகிய கேடிலியப்பப் பிள்ளைக்கும் கெஜவல்லியம்மைக்கும் திரிசிரபுரம் இறையருளால் தோன்றியவர்.

இவரின் தந்தையார் திருச்சி நாயக்கர் சமஸ்தானத்தில் பணி செய்தமையால் தாயுமானவர் வடமொழி, தென் மொழி ஆகிய இருமொழியிலும் பயிலும் வாய்ப்பும் பெற்றார்.

மௌன குருவின் ஆணையும் தாயின் வேண்டுகோளும் இவரை இல்லறம் ஏற்குமாறு செய்தன.

தமையனார் சிவ சிதம்பரம் பிள்ளையும் சிற்றன்னை மகனார் அருளையரும் வேதாரண்யத்திற்கு அழைத்து வந்து பின் மட்டுவார் குழலி என்பவரை மணந்து கனகசபாபதி என்னும் மகனையும் பெற்றார். அந்த அம்மை ஓரிரு ஆண்டுகளிலேயே இறந்து போக, இவர் மௌனகுரு வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தார். திரிசிரபுரம் தடசணாமூர்த்தி சந்நிதியில் கூறியது போல் மௌனகுரு திருமறைக் காட்டிற்கு எழுந்தருளி இவரது அதி தீவிர பக்குவ நிலை கண்டு திருவடி தீட்சை அருளினார். அந்த நாள் தொட்டுத் துறவியாய்ப் பல புண்ணியத் தலங்களுக்குச் சென்று இறுதியில் மீண்டும் இராமநாதபுரம் அடைந்து ஊருக்குப் புறத்தே அமைந்த காட்டூரணிக் கரையில் புளிய மரப் பொந்திலே நிட்டை கூடி வாழ்ந்து வரலாயினர். பின்னர் இராமநாதபுரத்தை அடுத்த இலட்சுமிபுர பூங்கா ஒன்றிலே சில காலம் தங்கிப் பின் அங்கேயே சமாதி ஆயினர்.

இவர் பாடல் இயல்பானது, இனிமையானது.

**''நித்தியமாய், நின்மலமாய், நிட்களமாய், நிராமயமாய் நிறைவாய், நீங்காச்**
**சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துயநிறை சுடராய் எல்லாம்**
**வைத்திருந்த தாரகமாய் ஆனந்த மயமாகி மனவாக் கெட்டாச்**
**சித்துருவாய் நின்றஒன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச் சிந்தை செய்வோம்''**

என்று அனைவரும் கற்று உணரும்படி தெளிவாகவே குறிப்பிட்டிருக்கிறார்.

'பந்தமறும் மெய்ஞான மானமோனப்
பண்பொன்றை அருளி, அந்தப் பண்புக்கேதான்
சிந்தை இல்லை; நான்என்னும் பான்மைஇல்லை;
தேகம்இல்லை; காலம் இல்லை; திக்கும் இல்லை;
சொந்தம் இல்லை; நீக்கம் இல்லை; பிறிதும் இல்லை;
சொல்லும் இல்லை; இராப்பகலாம் தோற்றம் இல்லை;
அந்தம் இல்லை; ஆதி இல்லை; நடுவும் இல்லை;
அகமும் இல்லை; புறமும் இல்லை;
.............................. அனைத்தும் இல்லை',

என்று ஏதும் இல்லா மாய வாழ்வை விளக்குகிறார்.

தாயுமானவர் வாழ்ந்த காலத்தே ஞானமார்க்கம், கர்ம மார்க்கம் ஆகிய தத்துவ சிந்தனைகள் விவாதத்திற்கு உரியனவாக இருந்தன. தாயுமானவர் இரு மார்க்கங்கள் தனை நன்கு உணர்ந்து இரு மார்க்க வாதிகளுடன் விவாதம் நிகழ்த்தியுள்ள குறிப்பு அவர் பாடல்.

.........
கைவல்ய ஞானநீதி
நல்லோர் உரைக்கிலோ, கன்மம்முக் கியம்என்று
நாட்டுவேன்; கன்மம் ஒருவன்
காட்டினா லோ,பழைய ஞானம்முக் கியம்என்று
நவிலுவேன்...

என இடம் பெறும் அடிகளின் வழி அறியலாம்.

தமிழ் இலக்கியச் சான்றோருள் தம் பாட்டுத் திறத்தால் தாயுமான அடிகளார் நடுநாயகமாகத் திகழ் கிறார். தனக்கு முன் வாழ்ந்த சான்றோர்கள் கவிதையும் கருத்தும் இவரைப் பெரிதும் ஆட்கொண்டுள்ளது, இவர் பாடலில் காணலாம். அவ்வாறே அடிகளாருக்குப் பின் அவர் கவிதைத் தாக்கத்திற்கு ஆட்பட்ட கவிஞர்களையும் எழுத்தாளர்களையும் நாம் காணலாம். தாயுமானவர்க்கு முன் வாழ்ந்த புலமைச் சான்றோர் பாடல்கள் நேரிடையாகவும், மறைமுகமாகவும் அடிகளார் பாடலில் இடம் பெற்றுள்ளன.

## 13. பட்டினத்தார் இறை பக்தி

அன்ன விசாரம் அதுவே
 விசாரம் அது ஒழிந்தால்
சொன்ன விசாரம் தொலையா
 விசார நல்தோகை யரைப்
பன்ன விசாரம் பலகால்
 விசாரமிப் பாவி நெஞ்சுக்(கு)
என்ன விசாரம்வைத் தாய்இறை
 வாகச்சி ஏகம்பனே.

பொய்யாகிய தேகத்தை வளர்ப்பதற்கு தேடும் அன்ன விசாரமே எனக்குப் பெரு விசாரமாக இருக்கிறது. அவ்விசாரம் ஒருவாறு நீங்கினால் பொருள்தேடி இன்புறச் செய்யும் விசாரம் நீங்காத விசாரமாகும். அது ஒழிந்தால் அழகு வாய்ந்த மயில் போலும் சாயலுடைய பெண்களைப் புகழ்ந்து பேசும் இந்த விசாரம் பல காலத்தும் விசாரமாம். சித்த சாந்தம் அடையாத இப்பாவியின் மனதிற்கு என்ன விசாரத்தினை வைத்தாய் இறைவனே !

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்
 ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ
 துங்கண்டு பின்னுமிந்தப்

**படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்**
**லான் பொன்னின் அம்பலவர்**
**அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென்**
**றேயறி வாரில்லையே**

முடிதரித்த அரசர்களும் மற்றும் அநேகமான உயர்ந்த பதவியில் உள்ளவர்களும் இறந்து சுடுகாட்டில் எரிகிற போது ஒரு கைப்பிடி சாம்பலாகி வெந்து, பின்னர் மண்ணாய் ஆவதைக் கண்ணால் பார்த்திருந்தும், மேலும் இவ்வுலகில் வாழ்வதையே நாடுவதல்லாமல் பொன்மய மாகிய அம்பலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமான் திருவடியினையடைந்து நாம் அனைவரும் பிழைக்க வேண்டுமென்று தெரிந்து கொள்வார் இல்லையே !

**அத்தமும் வாழ்வும் அகத்துமட்**
**டேவிழி யம் பொழுக**
**மெத்திய மாதரும் வீதிமட்**
**டேவிம்மி விம்மியிரு**
**கைத்தல மேல்வைத் தழுமைந்**
**தருஞ்சுடு காடுமட்டே**
**பற்றித் தொடரும் இருவினைப்**
**புண்ணிய பாவமுமே**

ஒருவன் இறந்து விட்டால், அவன் சேர்த்து வைத்த செல்வமும் போகமும் வீட்டிலேயே நின்று விடும். கண்களில் இருந்து நீர் சிந்தப் புலம்பும் மெல்லிய மாதர் தெருவாயிற் படியிலேயே நின்று விடுவர். தேம்பி இரண்டு கைகளையும் தலையின் மேல் வைத்துக் கொண்டு அழும் மக்களும் சுடுகாடு வரையில் தான் வந்து நின்று விடுவர். துணையாக வருவது இரண்டு வினைகளான நல்வினையும் தீவினையும் தான்.

**ஒன்றென் றிருதெய்வம் உண்டென்**
**றிருஉயர் செல்வமெல்லாம்**
**அன்றென் றிருபசித் தோர்முகம்**
**பார்நல் லறமுநட்பும்**
**நன்றென் றிருநடு நீங்காம**
**லேநமக் கிட்டபடி**
**என்றென் றிருமன மேஉனக்**
**கேஉப தேசமிதே.**

''மனமே! தெய்வமானது ஒன்றெனவே எண்ணியிரு; அததெய்வம் எந்நாளும் உண்டெனவே எண்ணியிரு. மிகுந்த செல்வம் அனைத்தும் நிலையற்றதென எண்ணி யிரு. பசித்து வந்தவர் முகத்தைப் பார்த்து அன்னமிடு. நல்ல தருமமும் நட்பும் நன்மையென எண்ணியிரு. நடுவு நிலைமையினின்றும் கோணாமல் நமக்கு முற்பிறவியில் விதித்தபடி கிடைக்கும் என்றிரு இதுவே உனக்கு உபதேசமாகும்.

**நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியம் தேடி**
**நலமொன்றும் அறியாத நாரியரைக் கூடிப்**
**பூப்பிளக்க எழுகின்ற புற்றீசல் போலப்**
**புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்**
**காப்பதற்கும் வகையறியீர் கைவிடவும் மாட்டீர்**
**கவட்டு தொல்மரத்திடுக்கில் கால்நுழைத்துக்**
**கொண்டே**
**ஆப்பதனைப் பிடித்தசைத்த பேய்க்குரங்குபோல**
**அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீர் நீரே!**

நாவானது வலி எடுக்கும் அளவுக்குப் பொய்யைக் கூறிப் புதிய செல்வங்களைச் சேர்த்து நன்மை ஒன்றும் அற்ற மங்கையைக் கூடி பூமியைப் பிளப்பதைப் போல 'புல புல' என்றும் 'கல கல' என்றும் கூக்குரலிடுமாறு

மக்களைப் பெற்று எடுப்பீர்! அம்மக்களைத் தகுந்த முறை யில் காப்பாற்றும் வகையும் அறிய மாட்டீர்கள். இரண்டு பிளவாகப் பாதி தூரம் பிளக்கப்பட்டு இருந்த பழைய மரத்தின் சந்திலே காலை நுழைத்துக் கொண்டு அந்த பிளவுக்கு மத்தியில் வைக்கப்பட்டிருக்கும் ஆப்பினைப் பிடித்திழுக்கும் குரங்கு போல இல்லறத் தொல்லையில் நீங்கள் கிடந்து, வருந்துமாறு அகப்பட்டுக் கொண்டீர்கள்.

இவைகள் பட்டினத்தாரின் பாடல்களில் அவர் குறித்த சில அறநெறிகள். "காதற்ற ஊசியும் வாராது காண் கடை வழிக்கே" இது பட்டினத்தாரின் சிறப்பான இறை பக்தியைக் குறிக்கும்.

# 14. வள்ளலார் இறை பக்தி

திருவருட் பிரகாச வள்ளல் இராமலிங்கம் 1823ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் ஐந்தாம் தேதி சிதம்பரத்தை அடுத்த மருதூரில் பிறந்தார்.

இராமய்யா சின்னம்மை தம்பதிகளுக்கு இராமலிங்கம் ஆறாவது பிள்ளை. சின்னம்மை மருதூரை விட்டு நீங்கி சின்னக்காவனத்தை அடைந்து சிறிது காலம் வாழ்ந்தார். 1924ஆம் ஆண்டு சென்னையில் தம் மக்களுடன் நிரந்தரமாகக் குடியேறினார்.

இராமலிங்கம் தனது ஏழாவது வயதிலேயே அறிவில் சிறந்து விளங்கினார். இறைவனிடம் அன்பு செலுத்தத் தொடங்கினார். நல்லொழுக்கச் சீலராக விளங்கிய இராமலிங்கம் தமது ஒன்பதாவது வயதிலேயே கவி பாடினார். சென்னை கந்தக் கோட்டத்துக்குச் செல்வார். கந்தக் கோட்டத்து முருகன் மீது பாடுவார்.

இவருக்கு அன்பு நெறியில் நம்பிக்கை உண்டு. பணம், குடும்ப வாழ்வு இவைகளில் சிறிதும் ஆசை இருந்ததில்லை. இவர் எழுதியவை, 'திருவருட்பா' என்னும் பெயரில் வெளிவரத் தொடங்கின.

இராமலிங்கர் 1858ஆம் ஆண்டு வடலூர் வந்தார். வடலூரை அடுத்த கருங்குழியில் தங்கியிருந்தார். அப்போது அவருக்கு வயது நாற்பத்து ஐந்து.

வடலூரில் 1865-ஆம் ஆண்டு சமரச சன்மார்க்க சங்கத்தை நிறுவினார். 1867இல் சத்திய தருமச் சாலையை அமைத்தார். தருமச் சாலையில் கூட்டம் பெருகவே பக்கத்து மேட்டுக்குப்பம் கிராமத்தில் போய் சித்தி வளாகத் திருமாளிகையில் 1870-ஆம் ஆண்டு முதல் தங்கியிருந்தார்.

1871-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 25ஆம் நாள் தை மாதம்13-ஆம் நாள் வியாழக்கிழமை அன்று தைப்பூச நன்னாளில் வடலூரில் தாம் கட்டிய சத்திய ஞான சபையில் முதன்முதலாக அருட்பெரும் ஜோதி தரிசனத்தைக் காட்டுவித்தார்.

1874-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 30ஆம் நாள் வெள்ளிக்கிழமை இரவு 12 மணிக்கு சித்தி வளாகத் திருமாளிகையில் இருந்த தமது அறைக்குள் புகுந்து கதவைத் திருக்காப்பிட்டுக் கொண்டார்.

இவர் 'அருட்பெருஞ் ஜோதி! தனிப்[illegible] எனும் மகாமந்திரத்தை உலகுக்கு வழங்[illegible]ருக்கிறார்

"ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்!
உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்!
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும்; பொய்மை
பேசாதிருக்க வேண்டும்!
பெருநெறி பிடித்தொழுக வேண்டும் மதமானபேய்
பிடியா திருக்க வேண்டும்!
மருவுபெண் ணாசையை மறக்கவே வே[illegible]; உனை
மறவா திருக்க வேண்டும்!
மதிவேண்டும்; நின்கருணை நிதிவேண்டும்; நோயற்ற
வாழ்வில் நான்வாழ வேண்டும்!"

இப்பாடலில் இறைவனிடம் நமக்கு என்ன என்ன வேண்டும் என்று கேட்பதில் ஒரு முறையைக் காண்கிறோம். மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று கருவிகளும் செம்மையாய்ச் செயல்படவேண்டும்.

நல்லதையே நினைத்து, நல்லதையே பேசி, நல்லதையே செய்வதற்கும் இறையருள் வேண்டும். நாம் மேற்கொண்டுள்ள மதத்தில் அன்பு இருக்க வேண்டும். மத வெறி இருக்கக் கூடாது.

இலலறத்தில் இருப்போர் மனைவியிடம் அன்போடு இருந்தால் இல்லறம் இனிது நடைபெறும். அதுவே ஆசையாக மாறினால துன்பம் தரும். இது இறை வழிபாட்டிற்கு இடையூறாக அமையும் என்பது வள்ளலாரின் கருத்து.

வித்து, காய், கனி முதலியவற்றில் தத்துவ விருத்தியும் தாது விருத்தியும் இல்லாதபடியால் இவைகளில் தீமையில்லை. இவைகளைப் புசிப்பதால் தீவினை உண்டாக மாட்டாது.

உண்மையே பேசும் உறுதியுள்ளம் படைத்திருக்க வேண்டும். மெதுவாக பேசு, அது உன் இரகசியங்களைப் பாதுகாக்கும். நல்ல எண்ணத்தோடு இரு; அது உன் நடத்தையைப் பாதுகாக்கும். கலந்து யோசனை செய்; அது உன் சிந்தனையை வளமாக்கும்.

எப்போதும் பயத்தோடு இருக்கக்கூடாது. அதற்காகப் பயம் இல்லாமலும் இருக்கலாகாது. எப்போதும் மன உற்சாகத்தோடு இருக்க வேண்டும். அஞ்சுவது அஞ்சாமை, கொலை, கோபம், சோம்பல், பொய்மை, பொறாமை, கடுஞ்சொல் முதலிய தீமைகள் கூடாது.

மதம் என்னும் பேயினால் பீடிக்கப்பட்டு பேயாட்டம் ஆடுகின்றவர்கள் உள்ளமாகிய மன்றத்தில் அறிவாகிய கடவுள் நடனமிடுவதைக் காணமாட்டார்கள்.

'மரணமிலாப் பெருவாழ்வு!' ஒன்று உண்டென்று நம்பி, அதற்காக முயல்வோமானால் மரணத்தைத் தள்ளி வைக்கும் ஆற்றலையேனும் பெறுவதோடு மீண்டும் பிறவாத பேரின்பத்தை அடைவோம். இவை போன்றவைகள் திருஅருட்பாவின் மூலம் வள்ளலார் வாரி வழங்குகிறார்.

# 15. பாரதியார் இறை பக்தி

அண்மைக் கால இலக்கியக் கர்த்தாக்களில் மகாகவி சுப்ரமணிய பாரதியைச் சேர்க்காமல் இந்நூலை முடிக்க இயலாது. அத்துணை வளமிக்க, பொருள் மிக்க கவிதை களை தமிழ் மொழிக்கு அவர் தந்துள்ளார். இவர் கவிதை யில் நாட்டுப்பற்று, தத்துவங்களோடு மிஞ்சி நிற்பது இறை பக்தியே சக்தி வழிபாடு உள்ள இலக்கியங் களிலேயே அதிகம் காணப்படுவது இவர் பாடல்களிலேயே.

## வரலாறு :

இவர் காலம் 1882-1921; பெயர் சுப்ரமணியன், செல்லப் பெயர் சுப்பையா; தந்தை சின்னசாமி ஐயர்; தாய்; லட்சுமி அம்மாள் பிறந்த இடம் எட்டயபுரம்; பிறந்த தேதி 11-12-1882 சித்திரபானு கார்த்திகை 27-மூலநட்சத்திரம்.

ஐந்து வயது முடியு முன்பே தாய் லட்சுமி இறந்து விட்டார். இரண்டரை வருடங்கள் கழித்து (1889) தந்தை வள்ளியம்மாளை மறுமணம் செய்து கொண்டார். தமது மறுமணத்தின்போது மகன் சுப்ரமணியனுக்கு உப நயனமும் செய்வித்தார். சிற்றன்னையும் சுப்ரமணிய னுடன் அன்போடு இருந்தார்.

1893 : பதினொரு வயது சுப்ரமணியனுக்கு ‘எட்டய புரம் சமஸ்தானப் புலவர்கள் ‘பாரதி’ (கலைமகள்) என்ற பட்டம் வழங்கினர்.

1894-1897 : திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் ஐந்தாம் பாரம் வரை பயின்றார்.

1897 : பதினாலரை வயது பாரதிக்கும் 7 வயதுச் செல்லம்மாவுக்கும் திருமணம்.

18 98 : தந்தை மறைந்தார்.

1898-1902 - காசி வாசம். சமஸ்கிருதம், இந்தி மொழி பயிலுதல்.

1902—1904: எட்டயபுரம் மன்னரின் தோழர் மதுரை ‘விவேக பாநு’ பத்திரிகையில் ‘தனிமை இரக்கம்’ என்ற முதல் பாட்டல் அச்சாகிறது.

1904 : சில காலம் மதுரை சேதுபதி பள்ளிக்கூடத்தில் தமிழாசிரியர்.

1908 : ‘ஸ்வதேச கீதங்கள்’ என்ற பெயரில் முதலாவதாகப் புத்தக வடிவத்தில் வெளியிடுதல்.

1908 : ‘இந்தியா’ பத்திரிகை, பாரதி மீது அரசாங்கம் பிறப்பித்த வாரண்டு, தப்பிப் புதுச்சேரி போய்ச் சேருதல்.

1909—10 : புதுச்சேரியிலிருந்து ‘இந்தியா’ வெளியிடல்.

*1917 : கண்ணன் பாட்டு முதற் பதிப்பை பரலி சு. நெல்லையப்பர் சென்னையில் வெளியிட்டார்.*

*1918 நவம்பர் 20 : புதுவையை விட்டுப் புறப்படுதல்.*

*1918—20 : கடையம் வாசம்.*

*1919 மார்ச் சென்னைக்கு வந்தார்.*

*1921 செப்டம்பர் 11 இரவு (12ம் தேதி காலை 1.30 மணிக்கு) தமது 39ஆம் வயதில் மறைவு.*

*தனது 39 வயது வாழ்க்கையிலேயே இன்று பாரதி மகாகவியாகி உலகம் புகழும் நிலைக்கு உயர்ந்து உள்ளார்.*

*பாரதி எழுதிய பாடல்களில் பல இறை பக்தியை எடுத்தியம்பும் பாடல்கள் உள்ளது. அவற்றில் சில :*

## பக்தி

**பக்தியினாலே— இந்தப்**
**பாரினி லெய்திடும் மேன்மைகள் கேளடீ !**
**சித்தந் தெளியும்,— இங்கு**
**செய்கை யனைத்திலும் செம்மை பிறந்திடும்**
**வித்தைகள் சேரும்,— நல்ல**
**வீர ருறவுகிடைக்கும், மனத்**
**தத்தவ முண்டாம்— நெஞ்சிற்**
**சஞ்சலம் நீங்கி உறுதி விளங்கிடும்.**

## ஓம் சக்தி

நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர்மணிப் பூண்,
பஞ்சுக்கு நேர்பல துன்பங்களாம், இவள்
பார்வைக்கு நேர்ப் பெருந்தீ !
வஞ்சனை யின்றிப் பகையின்றிச் சூதின்றி
வையக மாந்த ரெல்லாம்,
தஞ்சமென் றேயுரைப் பீர்அவள் பேர்,சக்தி
ஓம் சக்தி ! ஓம் சக்தி ! ஓம் !

## முருகா ! முருகா !

வருவாய் மயில்மீ தினிலே
வடிவே லுடனே வருவாய் !
தருவாய் நலமும் தகவும் புகழும்
தவமும் திறமும் தனமும் கனமும்
அடியார் பலரிங் குளரே ;
அவரை விடுவித் தருள்வாய் !
முடியா மறையின் முடிவே ! அசுரர்
முடிவே கருதும் வடிவே லவனே !

## கோவிந்தன் பாட்டு

என் கண்ணை மறந்துளிரு கண்களையே
என்னகத்தில் இசைத்துக் கொண்டு
நின் கண்ணாற் புவியெல்லாம் நீயெனவே
நான் கண்டு நிறைவு கொண்டு
வன் கண்மை மறதியுடன் சோம்பர்முதற்
பாவமெலாம் மடிந்து, நெஞ்சிற்
புன் கண்போய் வாழ்ந்திடவே, கோவிந்தா!
எனக்கமுதம் புகட்டு வாயே.

மேலும் கண்ணன் பாட்டு, முத்துமாரி, மாதாளியின் புகழ், திருமகள் பாட்டு, வெள்ளைத் தாமரை, அறிவே தெய்வம் என்று பல இறை பக்தி பாடல்களைப் பாடி நிகழ்கால இலக்கியக் கர்த்தாவாகி இறை பக்தியை மக்களுக்கு எடுத்துக் காட்டிய பெருமை மகாகவி சுப்ரமணிய பாரதிக்கு உண்டு.

